# எலியாவின் கட்டுரைகள்

**(A Translation of Selected *Essays of Elia* by Charles Lamb)**
**– (1775 AD – 1834 AD)**



(மூலம்) - சார்லஸ் லேம்ப்

தமிழில் : எஸ். ரமேஷ், ஸ்ரீவில்லிபுத்தூர்.





Shakespeare's Desk 

***Details About the Book.....***


1. Title of the Book : ***Eliyavin Katturaigal*** (Translation )
2. Content of the Book : Essays – (Translation from English to Tamil )
3. Source Language : English
4. Target Language : Tamil
5. Name of the Translator : **S. Ramesh**
6. Translator's Address : **S. Ramesh**




**No. 33, South Car Street,**
**Srivilliputtur – Pin. 626125.**
**Virudhunagar District**
**Tamil Nadu.**
**Cell : 87542 24076 -INDIA**
**E-mail** : **rameshzillion@hotmail.com**

7. Year of Publication : 2015
8. Copyright : vests with the translator
9. Price of the book : **Rs. 150 /-**



9. Name of the Publisher : Shakespeare's Desk
**No. 33, South Car Street,**
**Srivilliputtur – Pin. 626125.**
**Virudhunagar District**
**Tamil Nadu.**
**Cell : 87542 24076 -INDIA**
**E-mail** : **rameshzillion@hotmail.com**

**வேதனையின் கண்ணீரும், ஆனந்தக்கண்ணீரும்** - **சா. தேவதாஸ்**

எலியா என்னும் பெயரில் அரிய நகைச்சுவைக்கட்டுரைகளை எழுதியவர் சார்லஸ் லேம்ப் (1775-1834 கி.பி ). பத்தொன்பதாம் நூற்றாண்டு எழுத்தாளரான லேம்ப், தன் அக்காள் மேரியுடன் இணைந்து சேக்ஸ்பியர் நாடகங்களைக் கதை வடிவில் எடுத்துரைத்துப் புகழ் பெற்றவர். பி.ஜி. வோட்ஹவுஸ், ஸ்டீபன் லீகாக், ஜெரோம் கே. ஜெரோம், ஆர்ட் புச்வால்ட் போன்ற இருபதாம் நூற்றாண்டின் நகைச்சுவை நாயகர்களுக்கு முன்னோடியாக இருந்தவர். நகைச்சுவைக் கட்டுரையைக்காவியத்தரத்திற்குக் கொண்டு சென்றவர்.

'பணிமுப்பு அடைந்த மனிதன் ' என்றொரு சித்திரம். 14-ம் வயதில் பணியில் சேர்ந்து 36 வருடங்கள் உழைத்து 50-ம் வயதில் ஓய்வு பெற நேர்ந்த ஒரு குமாஸ்தாவின் உருவச்சித்திரமாக, ஆளுமைச் சித்திரமாக விரிவு கொள்கிறது. ஏழ்மையில் வேலை கிடைப்பது ஆறுதல் தருகிறது. பிழைக்க வைத்து விடுகிறது. ஆனால், அடிமைப்படுத்துவதாக அவ்வேலை இருந்தால், எப்போது விடுபடுவோம் என்று ஏங்க வைத்து விடுகிறது. சக்கையாகப் பிழிந்து துப்பி விடுகிறது அவ்வேலை. வேலையின் போது விடுமுறை நாட்களின் விடுதலைக்காக ஏங்கியவர், ஓய்வு பெற்ற பின், காலத்தை எப்படிக் கழிப்பது என்னும் கவலையில் மூழ்கி விடுகிறார். வேலைக்குக்கிடைத்து வந்தது சொற்ப ஊதியம். கிடைக்கும் ஓய்வு ஊதியமோ அதில் மூன்றில் ஒரு பங்கு தான். அதை வைத்து என்ன செய்ய முடியும்?

ஓய்வு பெற்றதும், அந்தக்குமாஸ்தாவின் ஞாபகத்துக்கு வருவது புகழ் பெற்ற **கவியான தாந்தேயின் வரிகள் :**

**'தாமதமாக வந்தது தான், எனினும்,**

**மதிக்கத்தக்க ஒரு சுதந்திரம். '**

ஆனால், சீக்கிரமே அவரை வருத்துகின்ற எண்ணம், 'ஏன் வந்தது இந்தச்சுதந்திரம்? '

கூண்டுக்குள் அடைபட்ட விலங்காக வேலை செய்து, நகரின் ஞாயிற்றுக்கிழமையிலும் துக்கத்தை / கனத்தை உணர்ந்து, உருக்குலைந்து, உறக்கத்திலும், உத்தியோகம் சார்ந்த கனவுகளால் அலைக்கழிக்கப்பட்டு, ஓய்வு நாள் நெருங்குவதை,

"பழைய பாஸ்டில் சிறையில், நாற்பதாண்டுகள் அடைக்கப்பட்டிருந்த சிறைவாசி ஒருவன், திடீரென்று விடுதலை செய்யப்பட்டு, வெளியேற்றப்பட்டது போன்ற உணர்வில் இருந்தேன்" என்று உணரக்கூடிய பாத்திரம் அக்குமாஸ்தாவினுடையது.

36 ஆண்டுகள் பணியாற்றிய காலம் கழிந்து விட்டது. அது யாருடைய காலமாயிருந்தது? வேலை வாங்குபவர்களுடையதாக. தனக்கென்று காலம் இருந்தால் தான் அனுபவிக்க வாய்க்கும்.

'ஒரு மனிதன் தனக்காக மட்டுமே செலவிட்டுக்கொள்ளும் காலமே உண்மையான காலம். மற்ற காலத்தை அவன் வாழ்ந்ததாகச் சொன்னாலும், அது அவன் பிறருக்காக வாழ்ந்த காலமே... '

அப்பாத்திரம் அடுத்து எண்ணிப் பார்க்கிறது. 'மனிதன் இயங்கிக் கொண்டிருக்கும் போது, அவனது இயல்பான சுபாவத்தில் இல்லாமல் இருக்கிறான். நான் எண்ணங்கள் நிறைந்த வாழ்க்கையை மட்டுமே விழைகிறேன். '

இதில் வரும் குமாஸ்தா சார்லஸ் லேம்ப் தான். 'தென் கடல் இல்லம் ' என்னும் திவாலான ஒரு நிறுவனத்திலும், பின் கிழக்கிந்தியக் கம்பெனியிலும், சாதாரண எழுத்தர் வேலை பார்த்து நாட்களைத்தள்ளி வந்தவர். கிறித்தவ உறைவிடப்பள்ளி அனுபவம் அவருக்கு சிறை வாசம் போலிருந்திருக்கிறது. குடும்ப வாழ்க்கை இன்னும் சிக்கலானது. மன நிலை பிசகிய அக்கா மேரி, தாயைக்கத்தியால் குத்திக்கொன்று விடவே, அதன் பின் அக்காவைப்பராமரிக்கவே தன் ஆயுளை ஒதுக்கி விட்டிருந்தார் லாம்ப். இரு முறை காதலித்தும், காதல் நிறைவேறாது விரக்திக்குள்ளானவர். காலரிட்ஜ் எனும் கவிஞர் இவருக்கு சக மாணவர். வேர்ட்ஸ்வெர்த்தும், டோரதி வேர்ட்ஸ்வொர்த்தும் இவருக்கு நெருங்கிய சிநேகிதர்கள். நல்ல உரைநடையாளர், கவிஞரும் கூட. நாடகங்கள் எழுதினாலும், அவை இவருக்குப்பெயர் பெற்றுத்தரவில்லை. இவரின் இறுதி தருணமும் பரிதாபமிக்கதாகவே இருந்தது என்கிறது கருப்பு-வெள்ளையில் பதிவான இவரின் வாழ்க்கை வரலாறு. நகர வீதியில் நடந்து சென்ற போது தவறி விழுந்து ஏற்பட்ட காயத்தில் பாக்டீரியா கிருமி இருந்து பாதிக்க, மரணமடைந்தார்.

நெருக்கடிகள் - நிர்ப்பந்தங்களால் பிரம்மச்சாரியாகத்தனித்து வாழ்ந்த சார்லஸ் லேம்ப், எந்த வித மகிழ்ச்சியையும் ஆறுதலையும் பெற்றிராத சார்லஸ் லேம்ப், அடிமை போல அடைந்து கிடந்து காலந்தள்ள வேண்டியிருந்தாலும், தாந்தேயின் சுதந்திரத்திற்கு ஏங்கிய சார்லஸ் லேம்ப், எப்படிச்சிரிக்க வைக்க முயன்றார்? அல்லது ஏன் சிரிக்க வைக்க முயன்றார்?

உள்ளுக்குள் கிடந்த வருத்தத்தையும், கசப்பையும், ஏமாற்றத்தையும், தோல்வியையும், வலியையும், வேதனையையும் அவர் வெளிப்படுத்தும் தருணங்களில் அவற்றின் மீது ஒரு வித பரிகாசம் தோன்றி 'என்னை நிர்மூலமாக்கிட உங்களால் இயலுமா? என்னையே அழிக்க முடியாத போது, வேறு யாரையும் அழிக்க இயலாது. அழிக்கவும் கூடாது. நீங்களே உலகத்தவரைச்சிரிக்க வைக்க வேண்டும்' என்று அவர் தவிர்த்திருக்க வேண்டும். அந்தச்சாபத்தில் பிறந்திருப்பவை தான் **'எலியாவின் கட்டுரைகள் '** எந்த வலியையும், வேதனையையும், அவமானத்தையும், சித்திரவதையையும் மீறி, உலகத்தவரை மகிழ வைப்பவை தான் இக்கட்டுரைகள்.

மகிழ்வின், விடுதலையின் உச்சத்தில், ஆனந்தக்கண்ணீர் வடிக்க வைப்பவை! வேதனையின் கண்ணீரிலிருந்து பிறந்தவை அல்லவா, அதனால் தான்!

எழுத்தாளனிட்ட சாபம் வாசகனுக்கு வரமாகி விடும் போது, அவனது வேதனைக்கண்ணீர் வாசகனிடம் ஆனந்தக்கண்ணீரை வரவழைக்கத்தான் செய்யும்...

தன்னையே பணி மூப்பு அடைந்த மனிதனில் பரிகசித்துக் கொள்ளும் லேம்ப், **'கிறித்தவ உறைவிடப்பள்ளி'**யில் நண்பர் ஒருவர் தன்னைப்பரிகசித்து எழுதுவதாகச் சொல்வார். இதில் பள்ளி மாணவர்களுக்கு ஆசிரியர்கள் அளித்த தண்டனை இப்படி விவரிக்கப்படுகிறது.

'ரோமாபுரியில், நாகரீகமாக, நெடிதாக தண்டனை தரப்பட்டது. சவுக்கடி தண்டனை எந்த அளவிற்கு உடல் ரீதியாகத்துன்பம்

இழைத்தது என்பது குறித்து எங்கள் கண்களால் எங்களுக்குச்சொல்லப்பட்டிருந்தது. ஆனால், தண்டனை தருவதற்கு முற்பட்ட வெறுப்புண்டாக்கும் சூழ்நிலையைக்காண்பது மயக்கமே உண்டாகும்படி இருந்தது. முதுகு மிகவும் கடினப்பட்டும், சிவந்தும் போயிருந்தது என்று நாங்கள் அறிக்கை தந்தோம். சவுக்கடி தண்டனை முடிந்ததும், அந்த மாணவனுக்குப்பிசாசு உருவங்கள் வரையப்பட்ட மஞ்சள் அங்கி அணிவிக்கப்படும்.'

இது பயங்கரவாதக்குற்றம் சுமத்தப்பட்டவனுக்குத்தண்டனை அளித்தது போலிருக்கிறதா, பள்ளி மாணவனுக்கு அளித்த தண்டனை போலிருக்கிறதா?

எலியாவின் கட்டுரைகளைத்தமிழாக்கம் செய்துள்ள எஸ்.ரமேஷ், கச்சிதமாகவும், நறுக்கென்று படும்படியாகவும் செய்துள்ளார்.

'உன் விசாலமான வெற்று அறைகளில், மாலை நேரங்களில், நான் எப்படியெல்லாம் பவ பவ்யமாய் நடமாடியிருக்கிறேன்! மாயமாய்த் தோன்றும் ஒரு பேனாவைக்காதில் செருகியபடி, ஒரு மரித்துப்போன கணக்காளர் உயிருடன் மிடுக்காக வந்து, என்னைக்கடந்து, விரைந்து செல்வது போல பிரமை ஏற்படும். அது பழங்காலத்தை எனக்குச் சொல்லும். தற்போது உயிருடன் உள்ள கணக்குகளும், கணக்காளர்களும் எனக்குப் புதிராய் இருக்கிறது…'

சரி, எஸ். ரமேஷுக்கு ஏன் எலியாவின் கட்டுரைகளைத்தமிழாக்கம் செய்யத் தோன்றியிருக்கிறது? நகைச்சுவை மீதான ஈடுபாடுதான். ஆர்.கே. நாராயணனைப்படித்து ஒரு வித பித்தேறியிருப்பது தான். வாழ்க்கையிலும் சரி, விஷயங்களை அவ்வளவு தீவிரமாக எடுத்துக்கொண்டு விசனப்படாத இயல்பு தான். வாழ்வென்னும் ஜீவ நதி தருவதையெல்லாம் ஏற்றுக்கொள்ளும் பக்குவம் தான்.

அதிகாரத்தால் வெறி கொண்ட இட்லரை பரிகாசத்தால் ஒன்றுமில்லாது செய்து விட சார்லி சாப்ளினுக்கு எவ்வளவு பக்குவமும், கூர்மையும் இருந்திருக்க வேண்டும் ?

ஒரு நகைச்சுவைத்துணுக்கு. இரண்டாம் உலகப்போர் காலகட்டம். யூதர்கள் ஒடுக்கப்படுகிறார்கள். யூதர்கள் ராணுவ நடவடிக்கையிலிருந்து தப்பிட, அடையாள அட்டை வைத்திருக்க வேண்டும். நெடுஞ்சாலையில் உள்ள இரு யூதரில் ஒருவரிடம் மட்டுமே அடையாள அட்டை இருக்கிறது. இந்நிலையில் ஒரு போலீஸ்காரர் அவர்களை நெருங்குகிறார். ஒரு யூதர் மட்டும் ஓட முற்படுகிறார். விரட்டியடித்து விடுகிறார் போலீஸ்காரர். 'நான் வருவது தெரிந்தும் ஏன் ஓடுகிறாய்? அடையாள அட்டையை எடு!' என்கிறார். அடையாள அட்டையை எடுத்துக்காட்டுகிறார் யூதர். 'பிறகேன் ஓடுகிறாய்! நான் தான் வந்து கொண்டிருக்கிறேனே.. '

'தினமும் ஒரு மைல் தூரம் ஓட வேண்டும் என்று எனக்கு மருத்துவர் வற்புறுத்தியுள்ளார். உங்களுக்கும் அப்படி வற்புறுத்தியிருக்கலாம் என்று எண்ணினேன். '

ஒடுக்குமுறையின் அடாவடித்தனத்தை அவ்வளவு அனாயாசமாக நிர்மூலமாக்கி விடுகிறது இத்துணுக்கு. அப்படியானால் மாபெரும் கலைஞர்களால் என்னவெல்லாம் செய்ய முடியாது !.

அது தான் சாப்ளின் செய்தது. லேம்ப் செய்தது. வோட்ஹவுஸ் செய்தது. ஸ்டீபன் லீகாக் செய்தது. ஆர்.கே. நாராயணனும், எஸ்.வி. வி. யும், கல்கியும் செய்தது.

தங்களைப் பரிகசிக்கத் தொடங்கி, சக மனிதரைப்பரிகசிப்பதாக வளர்ந்து, பின், அனைவரையும் சிரிக்க விடுமாறு செய்து விடும் கலை இது. கிர் காட்டு சிங்கமென, களக்காட்டு சிங்க வால் குரங்கென, செண்பகத்தோப்பு சாம்பல் நிற அணிலென அருகி வரும் இக்கலையே புத்துயிரூட்டும் அருமருந்தாகும். இது முற்றிலுமாக அழிந்திடலாகாது…

இராஜபாளையம். **சா. தேவதாஸ்**
25.09.2015

## சமர்ப்பணம்…

1. நண்பர்கள் கோதையூர் மணியன், இராஜபாளையம் இரா. கதைப்பித்தன், கவிதா தாசன், மனம் மகிழ ராஜாராம், ப. அடைக்கலம், எஸ்.எஸ். ஆர்.லிங்கம், எஸ்.எஸ். மணியம், குறிஞ்சிச்செல்வர் கொ. மா. கோதண்டம், மற்றும் தமிழ்நாடு கலை இலக்கியப்பெருமன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர் கிளையின் நண்பர்களுக்கும்,

2. ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூலகக்குழு அலுவலர்கள் அனைவருக்கும்,

3. இந்நூலைப்பிழை திருத்தம் செய்து, ஆலோசனையும், அணிந்துரையும் தந்த ஆசான், மொழிபெயர்ப்பாளர் சா. தேவதாஸ் அவர்களுக்கும்,

4. கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த தம்பி க.செல்வநாதனுக்கும்…

5. அன்னை ஜெயா, மனைவி ரோகிணி மற்றும் புதல்வன் ஸ்ரீகாந்த் அவர்களுக்கும்……

6. பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி, நாட்டார் வழக்காற்றியல் துறைத்தலைவர் முனைவர் பேராசிரியர் நா. இராமச்சந்திரன், (ஓய்வு) அவர்களுக்கும்……

7. இந்நூல் வெளி வர அனைத்து உதவிகளும் செய்த நண்பர்கள் அனைவருக்கும்…

# *எலியாவின் கட்டுரைகள்*

# 1. சார்லஸ் லேம்ப்

# ( Charles Lamb ) [ கி.பி. 1775 – 1834]





## வாழ்க்கைக்குறிப்பு

### பிறப்பு

சார்லஸ் லேம்ப், இலண்டன் நகரில், எலிஸபெத் ∴பீல்ட் மற்றும் ஜான் லேம்ப் தம்பதியினருக்கு மகனாக 1775-ம் ஆண்டு பிறந்தார். அவருக்கு ஜான் என்ற மூத்த அண்ணனும், மேரி என்ற மூத்த சகோதரியும் இருந்தனர். சார்லஸ் லேம்ப்பின் தந்தை, சாமுவேல் ஸாலட் என்ற பாரிஸ்டரிடம் குமாஸ்தாவாக பல வருடங்கள் வேலை பார்த்தார்.

லேம்ப்பின் மூத்த அண்ணனும், மூத்த சகோதரியும், அவரை விட மிக வயதானவர்கள் என்பதால் லேம்ப்பிற்கு வீட்டில் விளையாட்டுத் தோழர்கள் யாரும் கிடைக்கவில்லை.

லேம்ப், தனது அத்தை ஹெட்டியின் கவனிப்பில் பல வருடங்கள் இருந்தார். ஹெட்டிக்கும், மேரிக்கும் அடிக்கடி சண்டையும், மனஸ்தாபமும் ஏற்பட்டது. இதனால், லேம்ப்பின் வீட்டில் சச்சரவுகளும், பூசல்களும் எழுந்தன.

## கல்வி

லேம்ப் அவர்களுடைய இளமைக்கால வாழ்வு குறித்து மிகக்குறைந்த தகவல்களே கிடைத்துள்ளன. அவரது சகோதரி மேரி, அவருக்கு வாசிப்பைக் கற்றுக் கொடுத்தார். இதனால், லேம்ப் ஏராளமாக வாசிக்கத்தொடங்கினார். அவரது இளமைக்காலத்தில், அவருக்கு பெரியம்மை நோய் இருந்தது. அந்த வியாதியிலிருந்து விடுபட அவருக்கு நீண்ட காலம் ஆயிற்று.

அவர், 1782-ம் வருடம், அக்டோபர் மாதம், கிறித்தவ உறைவிடப் பள்ளியில் சேர்ந்தார். அங்கு இருந்த சூழ்நிலை அவ நம்பிக்கை ஊட்டுவதாகவும், மிகவும் வன்முறை நிரம்பியதாகவும் இருந்தது.

பள்ளித்தலைமை ஆசிரியர் ஜேம்ஸ் பாயர் அவர்கள், இலத்தீன் மற்றும் கிரேக்க மொழிகளைப்பயிற்றுவிப்பதில் புகழ் பெற்றவர். ஆனால், மிகவும் கடினமான தண்டனைகள் தரக்கூடியவர். லேம்ப் அவர்களின் பள்ளித்தோழர்கள் இலக்கியவாதிகளான லே ஹன்ட் மற்றும் சாமுவேல் டெய்லர் காலரிட்ஜ் ஆகியோர் ஆவர். அந்த இலக்கியவாதிகளுடனான தொடர்ந்த நட்பு குறித்து 'கிறித்தவ உறைவிடப்பள்ளி : முப்பத்தி ஐந்து வருடங்களுக்கு முன்பு' என்ற கட்டுரையில், அந்தப்பள்ளியில் படித்த காலத்தின் அனுபவங்களை, மலரும் நினைவுகளாகத்தொகுத்து எழுதுகிறார்.

## குமாஸ்தாப்பணி

லேம்ப் அவர்களுக்குத்திக்குவாய்ப் பிரச்னை இருந்ததால், அவர் குமாஸ்தாப்பணியினை செய்யத்தகுதியற்றவராகக்கருதப்பட்டார்.

தனது 14-வது வயதில், பள்ளிக்கல்வியை விட்டு விட்டு, 'தென் கடல் இல்லம் ' என்னும் நிதி நிறுவனத்தில் பணியில் சேர்ந்தார். ஆனால் அந்த நிறுவனம் 'சங்கிலித்தொடர் ' என்ற நிதி சுழற்சி திரட்டுதல் என்ற அடிப்படையிலே செயல்பட்டதால், அந்நிறுவனம் விரைவிலேயே திவால் ஆனது.

பிறகு, அவர் கிழக்கிந்தியக்கம்பெனியில் கணக்காளர் அலுவலகத்தில் பணிக்குச்சேர்ந்தார். இந்தக் குமாஸ்தாப்பணி அனுபவங்களைத் தொகுத்து 'எலியா' என்ற புனை பெயரில் அவர் எழுதிய முதல் கட்டுரை 'தென் கடல் இல்லம் ' என்ற பெயரில் வெளி வந்தது.

## காதலும், படைப்பிலக்கியமும்

சார்லஸ் லேம்ப் அவர்கள், ஹெர்ட் ஃபோர்ட்ஷயரில், தனது பாட்டி மேரி ஃபீல்ட் வீட்டில் குடியிருந்த போது, ஆன் ஸிம்மன்ஸ் என்ற இளம் பெண் மீது காதல் கொண்டார். இது குறித்து அவரது எழுத்துக்களில் பல இடங்களில் குறிப்புகள் உள்ளன. லேம்ப் எழுதிய 'ரோஸமன்ட் க்ரே' என்ற குறு நாவலில், ஆலன் கேர் என்பவன் ரோஸமன்ட் க்ரே எனும் பெண் மீது காதல் கொள்கிறான். ஆனால், ரோஸமன்ட் இறந்து விட, பிறகு அந்த உறவு ஒன்றுமில்லாமல் போய் விடுகிறது.

ஆன் லிம்மன்ஸ் என்பவரைக்குறித்து **'எலியாவின் கட்டுரைகள் '** எனும் நூலில், பல இடங்களில் குறிப்புகள் உள்ளன. லேம்ப் எழுதிய 'கனவுக்குழந்தைகள், ஒரு பகற்கனவு' ( *Dream children : A reverie*) 'புத்தாண்டிற்கு முந்தைய நாள் ' (*New Year's eve*) ஆகியவை யாவும், லேம்ப்பினுடைய காதலைக்குறித்தும், அதன் தோல்வியினைக் குறித்தும் பேசுகின்றன. (ரொமான்டிக் காலகட்டத்தைச்சேர்ந்த பெரும்பாலான கவிஞர்கள், காதல் தோல்வி கண்டவர்களே!).

## மேரியின் மனோ வியாதி

லேம்ப் மற்றும் மேரி இருவருமே மனோ வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தனர். லேம்ப், ஒரு மன நோய் மருத்துவமனையில் ஆறு வாரங்கள் அனுமதிக்கப்பட்டிருந்தார். அவர் மன நோயால் பீடிக்கப்படும் முன்பாக, அவர் எழுதிய நான்கு ஸானட் கவிதைகள், காலரிட்ஜ்

தொகுத்த "பல விஷயங்களைக்குறித்த கவிதைகள்" (Poems on various subjects) என்ற நூலில் வெளி வந்தது.

1796-ம் வருடம், ஒரு நாள், லேம்ப்பின் தாயார் எலிஸபெத், ஃபீல்ட் அவர்கள், இரவு உணவு தயார் செய்து கொண்டிருக்கும் போது, மன நோயால் பாதிக்கப்பட்டிருந்த மேரி அவர்கள், சமையல் செய்யும் கத்தியை எடுத்துத்தனது தாயார் எலிஸபெத் ஃபீல்டை நெஞ்சில் குத்தி விட்டார். அவரது தாயார், அதே இடத்தில் இறந்து விட்டார். இவ்வழக்கு விசாரணையில், ஒரு மன நோயாளி என்பதால், அவரது குற்றச்செயல் திட்டமிட்ட கொலை என்று ஆகாது என்பதால், அவரை நீதிமன்ற நடுவர் குழு குற்றச்சாட்டிலிருந்து விடுதலை செய்து தீர்ப்பளித்தது. இதன் பின், மேரி அவர்களுக்கு சார்லஸ் லேம்ப் பாதுகாவலராக மாறி, ஒரு நாளும் தன் தங்கையை விட்டு அகலாது இருந்தார்.

1797-ம் ஆண்டு, வில்லியம் வேர்ட்ஸ்வர்த் மற்றும் டோரோத்தி வேர்ட்ஸ்வர்த் ஆகியோரின் நட்பு அவருக்குக்கிடைத்தது. சில சுயேச்சா கவிதைகளை அவர் எழுதினார்.

1819-ம் ஆண்டு, நாடக நடிகையான ஃபேனி கெல்லி என்பவர் மீது காதல் கொண்டார். அவர் தனது திருமண விருப்பத்தை, ஃபேன்னி கெல்லியிடம் தெரிவித்தபோது, ஃபேனி அதற்கு மறுத்து விட்டார்.

## லேம்ப்பின் படைப்புகள்

சார்லஸ் லேம்ப் ஒரு நல்ல உரைநடையாளர். அத்துடன் அவர் ஒரு கவிஞர். நாடக ஆசிரியர். சார்லஸ் லேம்ப் என்று சொன்னதும், உடனே இலக்கியவாதிகளின் நினைவுக்கு வருவது 'எலியாவின் கட்டுரைகள் ' (*Essays of Elia*) என்ற நூலாகும். இது 1823-ம் ஆண்டு வெளிவந்தது. பின் தொடர்ச்சியாக 'எலியாவின் கடைசிக்கட்டுரைகள் ' (*The Last essays of Elia* ) எனும் நூல் 1833-ம் ஆண்டு வெளிவந்தது.

ஜான் லேம்ப் எழுதிய 'ஜான் குட்வில் ' எனும் அவல நாடகம் 1802-ல் வெளியிடப்பட்டது. அவர் எழுதிய 'மிஸ்டர் ஹெச் ' எனும் அபத்த நாடகம் 1807-ல் அரங்கேற்றப்பட்டது. நாடகம் நடக்கும் போதே,

பார்வையாளர்கள் கெக்கொலி எழுப்பி கூச்சலிட்டு, நாடகத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தனர்.

சார்லஸ் லேம்ப் மற்றும் மேரி லேம்ப் இருவரும் இணைந்து, ஷேக்ஸ்பியரின் நாடகங்களின் மையக்கருத்துக்களை, எளிய நடையில் கதைகளாக மாற்றி, குழந்தைகளுக்கான ஒரு நூலை எழுதினர். இது 'ஷேக்ஸ்பியரின் படைப்புகளிலிருந்து கதைகள் ' (Tales from Shakespeare) என்ற பெயரில் 1807-ல் வெளி வந்தது. இது ஆங்கில இலக்கியத்தில் ஒரு புகழ்பெற்ற நூலாகும். இந்நூலில் அவல நாடகங்களின் கதைகளை சார்லஸ் லேம்ப்பும், நகைச்சுவை நாடகங்களின் கதைகளை மேரி லேம்ப்பும் எழுதினார்கள்.

1834-ஆம் ஆண்டு, சார்லஸ் லேம்ப் நகர வீதியில் நடந்து சென்ற போது, தவறிக்கீழே விழுந்தார். அவரது முகத்தில் சிராய்ப்புக்காயம் ஏற்பட்டது. காயத்தில் இருந்த பாக்டீரியா கிருமியால், அவர் பாதிக்கப்பட்டு மரணமடைந்தார்.

இரண்டு தடவை அவர் காதல் வயப்பட்ட போதும், தன் வாழ்நாளில் திருமணமே செய்து கொள்ளாமல் ஒரு பிரம்மச்சாரியாகவே வாழ்ந்து இறந்தார்.

-------------------------



## சார்லஸ் லேம்ப்பின் படைப்புகள்

1. சுயேச்சா கவிதைகள் - கி.பி. 1798
2. ரோஸமன்ட் க்ரேயின் கதையும்,

   வயதான குருட்டு மார்கரெட் என்பவளும் -- 1798
3. ஜான் குட்வில் (கவிதை – நாடகம்), 1802
4. ஷேக்ஸ்பியரின் படைப்புகளிலிருந்து கதைகள், 1802
5. யுலிஸஸ் செய்த தீர சாகஸங்கள்.
6. ஷேக்ஸ்பியரின் காலத்தில் வாழ்ந்த ஆங்கில கவிதை –

   நாடக ஆசிரியர்களின் நடை உத்தி மாதிரிகள், 1808
7. ஷேக்ஸ்பியரின் அவல நாடகங்கள், 1811
8. சூனியக்காரிகளும், இதர ராத்திரி பயங்கரங்களும், 1821
9. அடகுக்கடைக்காரனின் மகள், 1825
10. இலியானா
11. எலியாவின் கட்டுரைகள், 1823
12. எலியாவின் கடைசிக்கட்டுரைகள், 1833

---------------------------

## 2. *தென் கடல் இல்லம்*

**- சார்லஸ் லேம்ப்**

**(மூலம் - *The South-Sea House* by Charles Lamb)**

வாசகரே,

நீங்கள் அரை வருட ஆதாயப்பங்குகளைப்பெற்றுக்கொள்ள வங்கிக்குச்செல்லும் வழியில் (ஒரு வேளை என்னைப்போலவே சொற்பமான வருடாந்திர ஓய்வுத்தொகை பெறும் ஏழையாக இருக்கும் பட்சத்தில்) டால்ஸ்டன் அல்லது ஷேக்கில்வெல் அல்லது புறநகரின் வடக்கே உள்ள இடங்களுக்குச்செல்லும் பொருட்டு, பூந்தொட்டி முனை கடந்து செல்வீராகில், த்ரெட்--நீடில் தெரு, பிஷப்ஸ்கேட் வீதியின் முனையில் துருத்திக்கொண்டிருக்கும் இடத்தில், இடது புறத்தில், செங்கல் மற்றும் கருங்கல் தூண்களுடன் கட்டப்பட்டு, துயருண்ட தோற்றத்துடனும், கொஞ்சம் வனப்புடனும் உள்ள கட்டிடத்தைக் கண்டதில்லையா ?

பிரம்மாண்டமாய், வாய் பிளந்த அதன் விரிந்த வாயில்களின் உள்ளே, உக்கிரத்தோற்றம் கொண்ட வராந்தாக்களும், வளைந்த அலங்கார வளைவுகள் மற்றும் தூண்களுடன் அமையப்பெற்றும், மிகச் சொற்பமான அல்லது ஆட்கள் பிரவேசமும், ஆட்கள் வெளியேறுதலும் கிஞ்சிற்றும் நடைபெறாமல், கிட்டத்தட்ட ஆளின்றி வெறிச்சோடிப்போன பால்க்லூதாவினைப்[1] போலவே உள்ள அந்தக் கட்டிடத்தைக்கண்டு, எப்போதும் மரியாதையுடன் நோக்கியுள்ளீர்கள் என உறுதிபடச் சொல்லுகிறேன்.

குறுகிய காலத்தில் லாபம் சம்பாதிக்கும் பொருட்டு, இங்கு வந்த வணிகர் கூட்டத்தால் தொடர்ந்த வியாபாரத்தின் ஆன்மா, நெடுங்காலம் முன்பே ஆவி நீத்துப்போய் விட்டாலும், சில வணிகங்கள் இங்கு தொடர்ந்து உயிரோட்டமாய் வைக்கப்பட்டுள்ளன.

இக்கட்டிடம் ஒரு காலத்தில் வியாபார அலுவலகமாகத்திகழ்ந்து, மும்முரமான வணிக மையமாகவே இருந்தது. இங்கு இருந்த ராஜாங்கமான முகப்பு விதானம், கண் கவரும் மாடிப்படிக்கட்டுகள்,

அரண்மனையின் ராஜரீகமான அரங்கங்கள் போலவே உள்ள அலுவலக அறைகள் யாவும் தொலைந்து ஆளரவமற்றுப்போய், இப்போது ஒழுங்கற்ற முறையில், அங்குமிங்கும் நடமாடிக் கொண்டிருக்கும் சொற்ப எண்ணிக்கையிலான எழுத்தர்கள்.

அதிக பவித்திரத்தன்மை கொண்ட தர்பார் உள் அரங்கம், நிர்வாகக்குழு அறைகள், மற்றும் மதிப்புடைய சுவர் மூலைகள், வாயிற்காவலர்கள், முக்கிய அலுவலக தினங்களில் மீச்சிறு ஆதாயப் பங்கைப்பிரகடனப்படுத்தும் பொருட்டு, நெடுங்காலம் முன்பே காய்ந்து போன பெரிய வெள்ளி மைக்கூடுகளைத்தாங்கிய, மங்கிய தோல்களினால் மூடப்பட்ட, பல காலமாய்ச்செல்லரித்துப் போன கருங்காலி மரத்தாலான மேசைகளின் பக்கமாய் அமர்ந்திருக்கும் கம்பெனி இயக்குநர்கள்.

மரித்துப்போன ஆளுநர்கள், துணை ஆளுநர்கள், ஆன் மகாராணியார், ப்ரன்ஸ்விக் வம்சாவளியைச்சேர்ந்த இரு சக்கரவர்த்திகளின் உருவங்கள் ஆகியவற்றைத்தாங்கிய கருவாலி மரத்தாலான பலகைகள் பதிக்கப்பட்ட சுவர்கள். பிற்காலக் கண்டுபிடிப்புகளால் காலாவதியாகிப்போன மெக்ஸிகோ தேசத்து தூசி படிந்த பூகோளப்படங்கள், பனாமா வளைகுடாவின் அலைகளின் சப்தங்களை ஒலித்துக்கொண்டிருக்கும்.

நெடிய தாழ்வாரப்பாதைகளில், சுவர்களின் அருகே, நெருக்கமாக, வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் (மணல்) வாளிகள். அந்த வாளிகளில் உள்ள மணல், ஊழிக்காலப்பெருந்தீயைத் தவிர பிற யாவற்றையும் அவித்து விடும். இவைகள் யாவினும் கீழாக உள்ள பல ரகங்களிலான நிலவறைகள். அந்த நிலவறைகளில் உள்ள தங்க ஷில்லிங் பணம், சூரிய ஒளி படாத இருட்டில் உள்ள மேமனுக்கு[2] மனத்திருப்தி ஏற்படுத்தும் செல்வம், பிற்பாடு நுரை வெடித்தது போல் (பொருளாதார வீழ்ச்சியில்) காற்றில் சிதறி, காணாமலேயே போய் விட்டது.

இவ்வண்ணமாய் இருந்தது தென்கடல் இல்லம். சற்றொப்ப நாற்பது வருஷங்களுக்கு முன்பு நான் அறிந்த தென் கடல் இல்லம்

இவ்வண்ணமாய் இருந்தது. அது ஓர் பிரமிக்கத்தக்க சிதிலம். அதில் காலம் கடந்த பின் எத்துணை மாற்றங்கள்?! அவை என்னென்ன என்று சரி பார்த்துக்கொள்ள எனக்கு வாய்ப்புக்கள் இல்லை. காலம் என்பதை ஒரு பொருட்டாகக்கொள்ளவில்லையெனினும், காலம் அந்தக் கட்டிடத்தைப்புதுப்பிக்கவில்லை.

அந்த சலனமற்ற நீர் நிலையைக்காற்று மறு உயிர்ப்பு செய்யவில்லை. அக்கட்டிடத்தின் மேல், கனத்த பொருக்கு படர்ந்து நிற்கிறது. அதன் காலம் கடந்து போன கணக்குப்புத்தகங்கள் மற்றும் நாள் கணக்குப்புத்தகங்களை, புத்தகப்பூச்சிகள் தாக்குதல் செய்வதை நிறுத்திக்கொண்டு, ஓய்வு எடுத்துக்கொண்டு விட்டன. எனினும், சிறகுள்ள சிறு பூச்சிகள் அப்பணியைத்தொடர்ந்து செய்து, ஓர் அட்டவணைப்பதிவு, இரு அட்டவணைப்பதிவுகளில் நேர்த்தியான சித்திர வேலைப்பாடுகளைச்செய்து வைப்பதில் வெற்றி கண்டுள்ளன. ஒரு அடுக்கின் மேல் மற்றொரு அடுக்கு தூசி படிந்து, அது ஆன் மகாராணியாரின் காலத்தில் கணக்குப்புத்தகம் எங்ஙனம் பராமரிக்கப்பட்டது என ஆவலாதி கொண்டு கண்டறிவதற்கும், மிகப்பெரிய ஊழல் குறித்த புதிரை வெளிக்கொணரவும், இந்நாளைய மோசடி வணிகர்கள் அந்நாளில் நடைபெற்றவைகளைப்பார்த்து, பிரமித்து, அதைப் போலவே மோசடி வியாபாரம் செய்யப்பேராசை கொள்ளவும் ஆர்வமுள்ளவரைத்தவிர வேறு ஒருவராலும் தொடப்படாமலே இருந்து விட்டது.

அல்லது சற்று மரியாதைக்குறைவான வகையில், எவ்வாறு திடீரென்று பொருளாதார மோசடி செய்யப்பட்டது என்பதன் சூட்சுமத்தைக்கண்டறிய, இன்றைய சாமானியர்களால் ஆராயப்பட்டு, அதன் ஈடு இணையற்ற தன்மையைக்கருதி வியக்கும் போது, நவீன காலத்தின் சதிச்செயல்களை வாக்ஸ் வெடிகுண்டு சதியுடன்[3] ஒப்பிட்டு எண்ணும் போது, அதன் பரிமாணம் சிறுத்துப்போவதைப்போல கூனிக்குறுகிவிடும்.

'பெரும் பொருளாதாரச்சரிவு' எனும் பிசாசுகளுக்கு சமாதானம் உண்டாகக் கடவது! நினைவுச்சின்னமாகிப்போன பெருமை கொண்ட உன் இல்லம் அமைதியாய், அநாதையாகிப்போனதே!!

சுரமும், பரபரப்பும் கொண்ட யூக வணிகத்தில், எப்போதும் சுறுசுறுப்பான சந்தடியுள்ள வணிகத்தின் மையத்தில், வங்கியுடன் நீ அமைந்திருக்கிறாய். உன்னை அடுத்துள்ள செலாவணி மாற்று அலுவலகம், 'இந்தியா இல்லம் ' ஆகியவை ஒரு காலத்தில் ஓங்கி உயர்ந்து, பல எளிய வணிகங்களைத்துரத்தியடித்து, நீ தற்போது அசைவற்று, ஆழ்ந்த எண்ணங்களில் ஆழ்ந்துள்ளாய் - என்னைப் போலவே.

பழைய இல்லமே! உன் அமைதியிலும் ஒரு வசீகரம்! - ஒரு செயலற்ற நிலை – வர்த்தகத்தில் இருந்து வெளியேறி வெப்பத்தை ஆற்றிக்கொள்ளுதல், ஒரு துறவி மடத்திற்கே உரித்தான ஆசுவாசமுள்ள ஒரு ஆனந்தம். உன் விசாலமான வெற்று அறைகளில், மாலை நேரங்களில், நான் எப்படியெல்லாம் பவ பவ்யமாய் நடமாடியிருக்கிறேன்! மாயமாய்த்தோன்றும் ஒரு பேனாவைக்காதில் சொருகியபடி, ஒரு மரித்துப்போன கணக்காளர் உயிருடன் மிடுக்காக வந்து, என்னைக்கடந்து, விரைந்து செல்வது போல பிரமை ஏற்படும். அது பழங்காலத்தை எனக்குச்சொல்லும். தற்போது உயிருடன் உள்ள கணக்குகளும், கணக்காளர்களும் எனக்குப்புதிராய் இருக்கிறது. எனக்கு கணக்கு எழுதுவதில் திறமையில்லை.

தொன்மையான பரந்த தோற்றமும், குறுக்கும், நெடுக்குமான சிவப்புக்கோடுகளும் கொண்ட உன் மகத்தான பெரிய புத்தகங்களை, அவை ஸ்தாபிக்கப்பட்ட அலமாரிகளிலிருந்து, தற்போது உள்ள மிக மோசமான மூன்று எழுத்தர்கள் சேர்ந்து தூக்கக்கூட இயலாது.

மூன்று அட்டவணை கொண்ட கணக்குகளின் தலைப்பில், ஆசாரமான புனித வாக்கியங்கள் எழுதப்பட்டிருக்கும். நமது முன்னோர்களோ அப்படியின்றி வியாபாரக்கணக்குப் புத்தகங்களையோ அல்லது கப்பல் சரக்குக்கான ரசீதுகளையோ எழுதியதேயில்லை. அக்கணக்குப்புத்தகங்களின் விலையுயர்ந்த வழுவழுப்பான தோல் உறைகளைப்பார்த்தமட்டில், ஏதோ ஒரு நல்ல நூலகத்துக்குள்ளே நுழைந்து விட்டோமோ என்ற பிரமையை நமக்கு ஏற்படுத்தும்.

எனினும், இணக்கமான, நின்று பார்க்க வைக்கும் காட்சி. இந்த செயலற்றுப்போன டிராகன்களை மன நிறைவுடன் நோக்குகிறேன். உன் கனத்த விசித்திர வடிவங்கள் கொண்ட தந்தத்தாலான சிறு கத்திகள் (நமது மூதாதையர் நம் உள்ளத்தை விட சகலத்தையும் பரந்ததாகவே வைத்துக்கொண்டிருந்தனர்) ஹெர்குலேனியம்[4] நகரத்தின் எந்தப் பொருளைப்போலவும் நனி சிறந்தன.

நமது காலத்திய மை ஒற்றும் பொடி வைக்கும் சிறு பெட்டிகள் யாவும் மிகவும் பிற்போக்கானவை.

நாற்பது வருஷங்களுக்கு முன்பு, தென்கடல் இல்லத்தில் பணிபுரிந்த எழுத்தர்களை நினைவு கூருகிறேன். அவர்கள் என் காலத்தில் இருந்த அரசு அலுவலர்களைப்போலல்லாமல், வித்தியாசப்பட்டுத்தெரிந்தார்கள். அந்தப்பணி செய்யும் இடத்தின் அறிவு ஜீவிதச்சூழலில் அவர்கள் பங்கெடுத்துக்கொண்டனர்.

மிகையான சம்பளம் தருவதற்கு நிறுவனம் அனுமதிக்காத காரணத்தால், அவர்கள் பெரும்பாலும் பிரம்மச்சாரிகளாகவே இருந்தனர். அதிகப்பணி செய்ய வேண்டியிராத நிலைமை இருந்ததால், அவர்கள் யாவரும் விநோதமாயும், ஸ்திரமில்லாத மாறுபடும் மனம் கொண்டவர்களாய் இருந்தார்கள். அதனாலேயே அவர்கள் பழம்பாணியிலான ஆட்களாய் இருந்தார்கள். நகைச்சுவை உணர்வு கொண்ட அவர்கள், சுபாவத்தில் பல விதமாய் இருந்தனர். இளமைப் பருவத்தில், பலதரப்பட்ட மக்களும் ஒன்றாகக் கலந்து உறவாடுகின்றனர். ஆனால், இந்த எழுத்தர்கள் பெரும்பாலும், தங்கள் நடுத்தர வயதிலோ அல்லது முதிர்ந்த வயதிலோ, இந்த அலுவலகத்தில் சேர்ந்தபடியால், தங்களின் சொந்த சுபாவத்தில், தனித்தனியாய், விந்தையாய், நான் இன்னும் சரியாகச் சொல்லப்போனால், தகுதியற்ற பழக்க வழக்கங்களைப்பொதுவான நடைமுறையில் கொண்டிருந்தனர். ஆதலில், அவர்கள் யாவரும் சேர்ந்து நோவாவின்[5] பேழையைப்போலவே இருந்தனர். தனிப்போக்குடைய மீன்கள். சாமானியர்களின் மடாலயம். ஒரு பெரிய நிறுவனத்தில் குடும்ப உறுப்பினர்கள் போலவே தக்க வைத்துக் கொள்ளப்பட்டவர்கள். பணி செய்ய அன்றி, ஒரு அலுவலகத்

தோற்றத்திற்காக மட்டும். எனினும், இனியவர்கள். எப்போதும் கதைப்பவர்கள். அவர்களில் ஒரு சிலர் கூட ஜெர்மானியப் புல்லாங்குழலைக்கற்றுத் தேர்ந்திருக்கவில்லை.

அற்றை நாளில், வேல்ஷ் பிரதேச ஆங்கிலேயரான இவான்ஸ் என்பவர் காசாளராக இருந்தார். அவருடைய பிரதேசத்தைச் சேர்ந்தவர்களிடம் இருக்கும் ஒருவித முன்கோபம் கொள்ளும் தன்மை அவரது முகத்தில் தெரியும். எனினும், உள்ளத்தில் உள்ள வண்ணமாய், என் இளமைக்காலங்களில் 'மக்கரோனிகள்' என்று கேலிச்சித்திரக்காரர்களால் சொல்லப்படும் ஒரு விதமான அலங்காரம் போல, தன் தலையின் நுனி வரை பவுடர் தெளித்து, தலைமுடியைச் சுருள்சுருளாய்ச் சுருட்டியிருப்பார். பகட்டுக்காரர்கள் என்ற இனத்தின் கடைசி ஆள். தன் வசிப்பிடத்தின் வாசலில் முற்பகல் முழுவதும் அமர்ந்திருக்கும் ஒரு பூனை போல மனச்சோர்வு கொண்டவர்.

அவர் பணத்தை எண்ணும் போது, அவரைச்சுற்றி உள்ள யாவருமே மோசடிக்காரர்கள் என எண்ணிக்கொண்டு, (அதில் தானும் ஒரு மோசடிக்காரன் என்ற மனோபாவம் உள்ள விசித்திரமான மனநோயுடன்) வெரு ஜாக்கிரதையாக நடுங்கும் விரல்களுடன் பணத்தை எண்ணுவார். மதியம் இரண்டு மணிக்கு ஆண்டர்டன் உணவகத்தில், வறுக்கப்பட்ட இளம் பசுவின் இறைச்சியினைச் சாப்பிடும் போது, அவரது உக்கிரமான முகம் சற்றே தளர்வுறும். இருபத்தி ஐந்து ஆண்டுகளாக சென்று சாப்பிட்டுக்கொண்டிருந்த அந்த உணவகத்தின் உரிமையாளரின் விருப்பத்தின்படி, இவான்ஸ் இறப்பதற்கு சற்று முன்பாக வரையப்பட்ட இவான்ஸின் உருவம் தாங்கிய ஓவியம் ஒன்று அந்த உணவகத்தின் சுவரில் தொங்குகிறது.

உச்சிப்பகல் பொழுது கடந்து, மாலை நேரத்தேநீர் குடித்து விட்டு பணி முடிந்து செல்லும் வேளை வரும் வரை, இவான்ஸிற்கு உற்சாகம் ஏற்படாது. கடிகாரம் ஆறு அடிக்கும் சமயமும், அவர் அலுவலகக் கதவைத் தட்டிக் கொண்டு திறந்து வெளியேறுவதும் ஒரு சம கால நிகழ்வு. இந்தப் பிரம்மச்சாரி சென்று மகிழ்வூட்டும் இல்லங்களில் எல்லாம் மேற்சொன்ன சம கால நிகழ்வு என்பது தொடர்ந்து எப்போதும் மகிழ்ச்சியுடன் பேசப்பட்டு வந்தது.

அந்தச் 'சம கால நிகழ்வு' அவர் செம்மையாய்ச்செயல்படும் உன்னத நேரம். ஒரு சிறு கேக் ஒன்றைக்கடித்தபடி அவர் எப்படியெல்லாம் நேர்த்தியாகக்கதைத்தபடி, விவாதத்தை வளர்த்துக் கொண்டு போவார் !? பென்னன்ட்[6] உள்ளிட்ட அவரது பிரதேசத்து ஆள் கூட பழைய மற்றும் புதிய இலண்டன் நகரை ஒப்பிட்டு விவரிப்பதில் (இவான்ஸை) அறிவுத்திறனில் விஞ்ச இயலாது. அம்மாநகரின் பழைய நாடகக்கொட்டகைகள், தேவாலயங்கள், ஒரு காலத்தில் ரோஸமண்ட் நீர்த்தேக்கம் இருந்து பின்னாளில் உருவான வீதிகள் பாழடைந்து போனது குறித்தும், பெரிய தோட்டங்கள், ஈயத்தண்ணீர்த்தொட்டி, தனது 'நண்பகல்' புத்தகத்தில் நம் பழைய பிதுரார்ஜித மரபுகளைச்சார்ந்து, ஹோகர்த் சித்தரித்த அவலட்சணமான உருவங்கள் ஆகியவற்றைக் குறித்தும் குறுங்கதைகள் பேசிக் கதைப்பார்.

பதினான்காம் லூயி மற்றும் அவரது குதிரை சைன்யத்தின் கோபத்திலிருந்து தப்பித்து இந்த தேசத்திற்கு வந்த பகிரங்க மத விசுவாசிகளின் சிறந்த வாரிசுகள், ஹாக்லேன் தெருவின் மறைவிடங்களிலும், ஏழு சூரியக்கடிகார அலகுகள் கொண்ட ஸ்தூபியின் சமீபத்திலும், நம் தூய சமய ஜோதி தொடர்ந்து எரிந்து பிரகாசிக்க யத்தனம் செய்ததையும் குறித்து எப்படியெல்லாம் கதைப்பார்?!!

இவான்ஸின் கீழ் பணியாற்றியவர் தாமஸ் டேம் ஆவார். அவர் குடிமகனுக்குரிய மிடுக்கும், பணிவும் கொண்டவராய் இருந்தார். வெஸ்ட்மின்ஸ்டர் அரங்கிற்குச்செல்லும் பாதைகளில் ஒன்றில், அவரை அவ்வண்ணமே கருதியிருப்பீர்கள். பணிவு என்று சொல்லும் போது, தனக்குக் கீழே உள்ளவர்களின் கோரிக்கைகளுக்குச்செவிமடுக்கும் போது உண்டாகும் பழக்கப்பட்ட, அந்த மிக நாசூக்கான உடல் முன் வளைப்பைப்பற்றி நான் சொல்லுகிறேன். அவருடன் நீங்கள் உரையாடும் போது, நீங்கள் அவரது உயரத்திற்கு ஏற்ப உங்கள் கழுத்தை மடக்கி, உயரே பார்ப்பதால், கழுத்து வலியை உணர்வீர்கள்.

உரையாடல் முடிந்ததும், அவரைக்குறித்து நீங்கள் கொண்ட, கருத லாயக்கற்ற, பசப்புத்தன்மையான மேதைமை குறித்து, நீங்கள் பரிகசித்து சிரிப்பீர்கள். அவரது அறிவுத்திறன், ஆழமே இல்லாத ஒன்று.

அது ஒரு பழமொழியையோ அல்லது மூதுரையையோ உதிர்க்க இயலாது. ஒரு வெள்ளைக்காகிதம் போலவே அவரது அறிவும் இருந்தது, ஒரு விரல் சூப்பும் குழந்தை கூட கேள்வி கேட்டு அவரைத் திடுக்கிட வைக்க முடியும்.

பின், அவரது ஸ்திதி என்ன? அவர் செல்வந்தரா? அய்யகோ, அப்படியும் இல்லையே! தாமஸ் டேம் மிகவும் வறியவர். அவரும், அவரது மனைவியும் வெளிப்புறத்தோற்றத்தில் மேட்டுக்குடியினர் போலவே தோன்றினாலும், எல்லாச்சமயங்களிலும் உள்ளார்ந்து மிகவும் மோசமாக இருந்தார்கள் என எண்ணுகிறேன். அப்பெண், மிகவும் எளிமையாய், ஆனால் பளிச்செனத்தெரிந்தாள். அதிலிருந்தே அவர் அதிகமாக சுகபோக வாழ்க்கையில் ஆழ்ந்து பாவப்படவில்லை என்று தெளிவாகத் தெரிந்தது. ஆயினும், அவரது ரத்தம் உயரிய மனுஷரின் ரத்தம். ஒரு சிக்கலான குடும்பக்கொடி வழி மூலமாக அவர் மிகவும் துரதிருஷ்டவசமான டெர்வன்ட்வாட்டர் குடும்பத்துடன் தூரத்து சொந்தம் என்று உறவு முறை கொண்டாடினார். அந்த உறவு முறை குறித்து எனக்கு ஒரு போதும் புரியவில்லை.

அத்துடன், அது குறித்து, அந்நாளில் பகிரங்கமாய், பலர் முன்னிலையிலும் விவரிக்க இயலவில்லை. இதுவே தாமஸ் அவர்களின் பணிவின் ரகசியம். இந்தக்கற்பிதமே தாமஸ் டேம் தம்பதியினரின் எண்ணம்-உணர்வு. அவர்களது வாழ்வில் இருந்த ஒரே நம்பிக்கை நட்சத்திரமே அது தான். மகிழ்ச்சியான தம்பதியினரே! இந்த வம்ச அடையாளமே உங்கள் இருளடைந்த அறிவு சூன்ய நிலையிலும், தங்கள் இருப்பு அறியப்படாத மறைவு என்றிருந்த போதிலும் உங்களை மகிழ்ச்சியுற வைத்தது. ஆதலின், அறிவுத்திறத்தால் ஜ்வலிக்கும் உயரிய நிலையை நீங்கள் எட்டவில்லை. எனினும், செல்வத்திற்கும், அந்தஸ்திற்கும் பதிலாக, அதற்குச்சமானமாக, இந்தத் திரட்சியே உங்களிடம் இருந்தது. அதைத்தக்க வைத்துக்கொண்டு, நீங்கள் ஒருவரையும் அவமதிக்கவில்லை. அதை ஒரு காக்கும் கேடகமாக மட்டும் பயன்படுத்தியுள்ளீர்கள். அதன் மூலமாய் அவமதிப்பு எதுவும் உங்களை வந்து அடையவில்லை. மகிமையோடும், ஆறுதலோடும் இருப்பீராக!

மற்றொரு குணாம்ச பிரகிருதி, அந்தக்கணக்காளரான ஜான் டிப் என்பவர். அவர் உயர் குடிப்பிறப்பைச்சேர்ந்தவராக பாசாங்கு செய்து கொள்ளவில்லை. அதை ஒரு பொருட்டாகவும் அவர் கருதவில்லை. உலகில் கணக்காளரே உயர்ந்தவர் என்றும் அதில், தானே மிகச்சிறந்த கணக்காளர் என்றும் அவர் கருதிக்கொண்டிருந்தார். ஜானுக்கு பொழுதுபோக்கும் பழக்கம் இல்லாமல் இல்லை. ஓய்வு நேரங்களில் பிடில் வாத்தியம் அவரை ஆசுவாசப்படுத்தியது. ஆர்ஃபிய யாழ் வாத்தியத்தினைத்தவிர பிற ஸ்வரங்களுக்கு திண்ணமாய் அவர் பாடக்கூடியவர். உண்மையில், அவர் கிரீச்சிடும் சப்தத்துடன் இம்சிக்கும் அளவு கர்ண கடூரமாகக்கத்தினார். த்ரெட்--நீடில் தெருவில் இருந்த அற்புதமான அலுவலக அறைகள், பெரிய அளவிலான பொருட்களோ, அமைப்புகளோ இணைக்கப்படாமல் இருந்தது. அதில் இருந்த மனிதனுடைய எண்ண ஓட்டங்களை விசாலமாக்கப் போதுமானதாக இருந்தது. (அந்த அலுவலக அறைகளில் இப்போது யார் இருக்கிறார்கள் என்று தெரியாது)

கிளப் அறைகள் மற்றும் இசைக்குழுக்கள் - கோஷ்டிப்பாடகர்கள் - மற்றும் இரண்டாம் நிலை செல்லோ வாத்தியங்கள், மிகப்பெரிய வயலின், கிளாரிநெட் வாத்தியங்கள் ஆகியவை இசைக்கப்பட, நமது முன்னோர் இயற்றிய 'இனிய கீதங்கள்' எனும் இசைப்பொழிவின் ஸ்வரக் குறிப்புகளைக்கொண்டு மாதமிருமுறை அந்த அலுவலகத்தின் அறைகளில் எதிரொலித்த ராக இசை நிகழ்வுகளில், நமது அய்யா ஜான் டிப் தந்த குளிர்ந்த மாமிசம் மற்றும் பஞ்ச பானம்[8] ஆகியவற்றைச் சாப்பிட்டு விட்டு, அவரது இசையுணர்வைப்புகழ்ந்தனர் வந்திருந்தோர். அவர்கள் நடுவே ஜான் டிப், மன்னன் மைதாஸ்[9] போல அமர்ந்திருந்தார். ஆனால், அலுவலக மேசையில் அவர் வேறு ஒரு மனிதர். அங்கு, முழுக்க முழுக்க அலங்காரமான எண்ணங்கள் யாவும் புறந்தள்ளப்பட்டன. யாரிடமாவது கிளர் உணர்வு விஷயங்களைப் பேசினால், கடிந்து கொள்ளாமல் இருக்க மாட்டார்கள். அரசியல் விஷயங்கள் தடை செய்யப்பட்டவை. ஒரு தினசரி செய்தித்தாள், மிகவும் திட்டமில்லாததாகக்கருதப்படுகிறது.

ஆதாயப்பங்குகளைக்காகிதத்தில் எழுதித்தருவது ஒன்றே ஒரு மனிதனின் முழு நேரக்கடமையாகக் கருதப்பட்டது. கம்பெனியின் கணக்குப்புத்தகங்களில், முந்தின வருடத்தின் கையிருப்பிற்கும், தற்போது உள்ள துவக்க இருப்பிற்கும் உள்ள வித்தியாசம் ஒரு வேளை

25 பவுண்டுகள், 1 ஷில்லிங், 6 பென்ஸ் என்ற அளவில் இருந்தால், அந்த வித்தியாசத்தைச்சரி செய்வதற்கு வருடக்கணக்கை முடிப்பதற்கு முன்பு, ஒரு மாதமாக இரவும், பகலும் அவர் பாடுபட வேண்டியிருந்தது. அதனால், அவர் தனது அபிமானத்துக்குரிய அலுவலகத்தில் உள்ள விஷயங்களைக்கண்கொண்டு பாராமல் இல்லை. முன்னொரு காலத்தில், பிரகாசமாய் இருந்த அந்த தென்கடல் நிறுவனத்தின் இலாப வளர்ச்சி மீண்டும் திரும்புமா என்று அவர் ஏக்கம் கொள்ளாமல் இல்லை.

அற்றை நாளில் கொடிகட்டிப்பறந்த கம்பெனிகளில் உள்ள கணக்காளர்களுக்கு அவர் சமானமானவர். ஆனால், ஒரு நல்ல கணக்காளருக்கு பரிவர்த்தனைகளில் ஏற்படும் கணக்கு வித்தியாசத்தின் அளவு முக்கியமில்லை. அவரிடம் இருந்த கணக்குகளில், ஒரு காசு வித்தியாசமும், பல ஆயிரம் பண வித்தியாசமும் ஒன்றே. அவர் ஒரு நல்ல நடிகர். அது அரசிளங்குமரன் என்ற பாத்திரமோ அல்லது ஒரு குடியானவனோ, அவர் அதில் ஆழ்ந்து நடிப்பார். ஜான் டிப்பிற்கு வடிவம் ரொம்ப முக்கியம். அவரது வாழ்வு திட்டமாக, நேர்த்தியாக இருந்தது. அவரது செயல்கள், ஒரு அளவுகோல் கொண்டு அளக்கப்பட்டவை போல நேர்த்தியாக இருந்தன. அவரது இருதயம் போலவே, அவரது பேனாவும் தவறு செய்யாதிருந்தது. உலகின் சிறந்த செயல் வீரராக அவர் திகழ்ந்தார். தொடர்ந்து அவர் செயல்வீரராக இருக்க வாய்ப்புகள் வந்தன. ஆதலால், அவரது செயல் வேகம் தூண்டப்பட்டு, அவரது மேம்போக்கான பகட்டு மட்டுப்படுத்தப்பட்டது.

ஜான் டிப் அடிக்கடி சத்தியம் செய்வார். அவர் இளம் அநாதைகளின் பேரில் சத்தியம் செய்து, அவர்களை அரவணைத்துக்காப்பார். அப்பிள்ளைகளின் நலன் குறித்த விஷயங்கள் அவரது பொறுப்பிற்கு வந்தன. அதற்காக மரணத்தருவாயில் உள்ள ஒருவர் கைப்பிடித்துக் கொள்வது போல, அநாதைப்பிள்ளைகளின் நலன் குறித்து உறுதி மொழி தருவார். இவை தவிர, அவரிடம் ஒரு வித வெட்கப்படும் சுபாவம் இருந்தது. (அவரது விரோதிகள் சிலர் அதற்கு ஒரு மோசமான பெயரிட்டிருந்தனர்). அவ்வெட்கம் மரித்துப்போனவர்கள் குறித்த மரியாதையாகும். சுயப்பாதுகாப்பு எனும் கருத்தை, இயற்கை போதுமான அளவிற்கு அவருக்குத் தந்திருந்தது. கீழ்மையும், வஞ்சக

எண்ணமும் இல்லாதபடிக்கு ஒரு வித கோழையான சுபாவம் அவரிடம் இருந்தது. அதை நாம் வெறுக்கவில்லை. அது தன்னையே வெளிப்படுத்திக் கொள்ளும். உங்களை அன்று. அது ஒரு மனோபாவம் மட்டுமே. கிளர் உணர்வு இல்லாத நிலை. அது, தான் வரும் வழியில் ஒரு சிங்கத்தை மட்டும் பார்க்கும். ஃபார்ட்டின்ப்ராஸ் போல புகழ் பெறுவதற்காக அல்ப விஷயங்களுக்காகச் சண்டையிடாது.

ஜான் டிப் ஒரு போதும் கோச் வண்டியில் ஏறியதே இல்லை. மாடியின் பலகணியில் உள்ள குறுக்குக்கம்பிகளின் மீது சாய்ந்தது இல்லை. மாடிச்சுவர் விளிம்பை ஒட்டி நடந்ததே இல்லை. மலை உச்சியில் நின்று கீழே பார்த்ததில்லை. ஒரு துப்பாக்கியைக்கொண்டு சுட்டதில்லை. ஒரு நதி தீர  விருந்திற்குப்போனதில்லை. உங்களுக்கு உதவக்கூடுமானால், அப்படி உதவாது உங்களை வெறுமனே அனுப்பியதில்லை. ஆதாயத்திற்காகவோ அல்லது அச்சுறுத்தலுக்காகவோ அவர் ஒரு நண்பனையோ அல்லது தன் கொள்கையையோ  உதறியதில்லை.

அடுத்ததாக சாதாரண  விஷயங்களில் அசாதாரண குணம் கொண்ட எந்த ஒருவரை மரித்துப்புதையுண்ட மண்ணிலிருந்து நாம் மீள அழைத்துக் கொள்ள முடியும்?! நல்ல அறிவும், நாகரீகமான எழுத்தும் எழுதிய தென்கடல் நிறுவனத்தின் எழுத்தாளரான ஹென்றி மான் என்ற உன்னை நான் மறக்க இயலுமோ?

உம்முடைய அலுவலகத்திற்குள் ஒரு போதும் காலையில் உள்ளே நுழைந்து, நண்பகலில் வெளியேறியதே இல்லை. (நீர் ஒரு அலுவலகத்திற்குள் என்ன செய்து கொண்டிருந்தீர் அய்யா? ) ஒரு போதும் விநோதமான ஒரு விமர்சனத்தால் குத்தலாகப்பேசி, மனதைத் தைக்காமல் சென்றதில்லை. உமது குத்தலான பகடிகளும், நகைச்சுவையும் இப்போது வழக்கொழிந்து போய் விட்டன. ஆயினும், அவை மறந்து போன இரு தொகுதிகளில் இப்போது ஜீவனோடு உள்ளன. அத்தொகுதிகளை, நான், நகரின் பார்பிகான் பகுதியில் உள்ள கடை ஒன்றில் நல்ல வேளையாகக்கண்டெடுத்து மீட்டுக் கொண்டு வந்து, மூன்று நாட்கள் கூட ஆகவில்லை. உம்முடைய எழுத்து நடை ரத்தினச்சுருக்கமாயும், பளிச்செனப்புதுக்கியதாகவும், கருத்தில் நறுக்குத்தெரித்தாற் போலவும் ஜீவனோடு இருக்கிறது.

மிகவும் புதியதாய் உள்ள பிரசித்தி பெற்ற இந்நாளைய எழுத்துக்களின் முன்பாக, உமது படைப்பு கொஞ்சம் பின்தங்கி விட்டது.

சம காலத்தில், பகட்டாய்ப்படைக்கப்பட்ட புதியவைகளின் முன்பாக உமது பொருண்மைகள் சுவையற்றுப் போய்விட்டன. எனினும், சாத்தம் ஷெல்பர்ன், ராக்கிங்கம்[11] ஹோரவே, பர்கய்ன், க்ளின்டன் ஆகியோர் மீதும், பிரித்தானியக்காலனிகள், அரசுக்கு எதிராகச்செய்த போரின் விளைவாக அந்தக்கிளர்ச்சிக்காரக்காலனிகள் விடுதலை பெற்றதைக் குறித்தும், கெப்பல், வில்க்ஸ், ஸாப்ரிட்ஜ், புல், டன்னிங், ப்ராட், ரிச்மண்ட் மற்றும் இதர சிறு அரசியல்வாதிகளைக்குறித்தும், வர்த்தகச் செய்தித்தாளிலும், 'காலை நாளாகமம்' தினசரியிலும் நீர் எழுதியுள்ளவை மிக அற்புதமானவை.

சற்று அறிவார்ந்தவராகவும், அதிகம் இரைச்சல் செய்பவராகவும், சிறந்த வாயாடியாகவும் இருந்தவர் ப்ளம்மர். அவர், தான் ஹெர்ட் ∴போர்ட்ஷயர் பிரதேசத்தின் ப்ளம்மர்ஸ் எனும் வம்சத்துடன், நேரடிச் சந்ததிக்கிளையாக அல்லாமல் (அவரது சுபாவம் போலவே) கொஞ்சம் கோணலாகச்சுற்றி[12] வளைத்துக்கொண்டு உறவு கொண்டாடினார். ஆதலால், பாரம்பரியம் அவரைக் கைவிட்டுவிட்டது. அவரைக்குறித்துச் சொல்ல வம்ச குணாம்சங்கள் எதுவும் இல்லை. ஆனால், முதிர்ந்த வால்டர் ப்ளம்மர், அவரது இளமைக்காலத்தில் சிற்றின்பப்பிரியராக இருந்திருக்கிறார். இத்தாலியின் பெரும் பகுதியைச்சுற்றிப் பார்த்திருக்கிறார். அத்தோடு உலகையும் சுற்றிப்பார்த்துள்ளார். நம் தேசத்தின் பிரதிநிதியாக, பாராளுமன்றத்தில் தொடர்ந்து இருந்து வந்து, தற்போதும் உயிருடன் இருக்கின்ற வயதான விக் பிரிவு அரசியல்வாதியின் திருமணமாகாத மாமன் தான் இந்தக் கிழவன் வால்டர் ப்ளம்மர். அவருக்கு வேயர் பிரதேசத்தில் நல்ல ஒரு பழைய மாளிகை உண்டு. மன்னர் இரண்டாம் ஜார்ஜின் காலத்தில் வால்டர் கொடி கட்டிப்பறந்தார். இலவச தபால் சலுகை தொடர்பாக மார்ல்பரோ சீமாட்டிக்கு எதிராக அவர் எழுப்பிய ஆட்சேபத்தினைக்குறித்து விளக்குமாறு, மக்கள் பாராளுமன்ற சபைக்கு அவர் அழைக்கப்பட்டார். வயதான மார்ல்பரோ சீமாட்டியின் முன்பாகவும் அழைக்கப்பட்டார். இது குறித்து ஜான்சன் எழுதிய 'கேவ் அவர்களின் வாழ்க்கை வரலாறு' எனும்

நூலில் நீங்கள் படித்திருக்கலாம். அந்த சர்ச்சையிலிருந்து கேவ் மிகவும் திறமையாக வெளிவந்தார். தன்னைக்குறித்த வதந்தியைப் பொய்யாக்க ப்ளம்மர் முயற்சி எதுவும் செய்யவில்லை. மாறாக அந்த வதந்திகளைக்குறித்து மகிழ்ச்சியடைந்தார். மிகவும் பண்பாக அவர் அவற்றை நல்லவையல்ல என்று குறிப்பிட்டுக்காட்டினார். தன் குடும்பம் குறித்த பெருமைகள் ஒரு புறம் அவரிடம் இருந்தாலும் ப்ளம்மர் இணக்கமாகப்பழகக்கூடியவர். மிகவும் அற்புதமாகப்பாடக்கூடியவர்.

நீங்கள் ஒரு குழந்தையைப்போல, மெல்லிய குரலில் நாடோடிப் பாடல்களைப்பாடுவது போல இனிமையாக ப்ளம்மர் பாடவில்லை. உங்கள் ஆர்கேதிய[13] மெல்லிசையை விட மட்டுப்பட்ட புல்லாங்குழலின் இசையை நீங்கள் இசைப்பீர்கள். ஆர்தன் வனாந்திரத்துக்கு லாயக்கான ஸ்வரங்களில் நாடு கடத்தப்பட்ட பிரபுவுக்கு ரமியன்ஸ்[14] பாடிய இசையைப்போல உங்கள் பாடல்கள் இருக்கும்.

ப்ளம்மர் அவர்களே! பிஷப்ஸ்கேட் தேவாலயச்சொத்துக்களின் பாதுகாவலராக நியமிக்கப்பட்ட, இடையனைப்போல தூய, எளிய சுபாவம் கொண்ட மே... என்பவனது வம்சமல்லவா உன் வம்சம் ! முரட்டுக் கார்காலத்தின் மெல்லிய பிள்ளையாக வசந்தம் வருவது போல, அந்த மே... என்பவன் ஏதோ தெரியாமல் உன்னைப் பெற்றெடுத்து விட்டான். மெல்லியதாயும், சாந்தமாயும் அன்னபட்சியின் இனிய கடைசிப்பாடல் போலவும் உன் முடிவு இருந்திருக்க வேண்டும்! ஆனால், அந்தோ! உன் முடிவு தான் மிகவும் பரிதாபமாய் இருந்தது[15].

இன்னும் சொல்ல வேண்டியது நிறைய உண்டு. ஏராளமான அற்புத உருவங்கள் மேலெழும்புகின்றன. ஆனால், அவை எனக்கு அந்தரங்கமானவை. ஏற்கெனவே, என் வாசகரை என்னால் எவ்வளவு முடியுமோ அந்த அளவிற்கு முட்டாளாக்கி விட்டேன். இல்லாவிட்டால், ஏடாகூடமான வழக்குகளில் ஈடுபாடு கொண்டு, வழக்குகளை விரும்பி நடத்திய அந்த விசித்திர ஆளான உல்லட் என்பவனைப்பற்றிச் சொல்லாமல் எப்படி விட்டுவிட முடியும்?.... அந்நியனாகவும், அடியொற்ற முடியாதவனாகவும், மிகவும் அழுத்தமான ஆளாகவும், விளையாட்டுத்தனம் இல்லாத ஹெப்வர்த் என்பவனிடமிருந்து நியூட்டன் ஒரு வேளை புவி ஈர்ப்பு விசை கோட்பாட்டை உருவாக்கியிருக்கக்கூடும்.

எப்படி பிரமாதமாக அவர் பேனாவின் முனையைக்கடித்தபடி இருப்பார் ! (தேநீர் அருந்தும் சமயம்) ஒரு மொறு மொறு பிஸ்கட்டை எப்படி அவர் சுவைத்தபடி இருப்பார் !!...

ஆனால், இதை முடித்துக்கொள்ள வேண்டிய தருணம் இதோ. ஏற்கெனவே, இரவின் சக்கரங்கள் தடதடவென என் மீது ஓடுகின்றன. இந்தக் கருத்தூன்றிய பகடி செய்வதை இங்கு இத்துடன் நிறுத்திக்கொள்வதுதான் சரி.

வாசகரே! இதுகாறும் உங்களுடன் நான் ஏதோ விளையாட்டுப் போக்காய் இருந்து பேசிவிட்டேன். மேற்சொன்ன ஒவ்வொரு நிகழ்விலும் சொல்லப்பட்ட பெயர்கள் யாவும் ஆதாரமற்ற கற்பனையே – ஹென்றி பிம்பர்னல் மற்றும் கிரேக்கத்தின் கிழவன் ஜான் நேப்ஸ்[16] போலவே அவை ஆதாரமற்றவை.

அவர்களைக்குறித்து எதிர்மொழியாய்ப்பேசியது உயிரோட்டமுள்ளதாய் இருந்தது என்ற அளவில், அது பற்றி திருப்தி கொள்வீராக. அது பழமையானது என்பதே அதன் முக்கியத்துவம்.

-----------------------------

## மேற்குறிப்புகள்

### 1. பால்க்லூதா

'நான் பால்க்லூதாவின் சுவர்களைக்கண்டேன். அவை பாழடைந்து கிடந்தன' என்று கத்தன் ஆஸ்ஸியன் தனது இதிகாசத்தில் குறிப்பிடுகிறார்.

### 2. மேமன்

மனத்தைச்சீரழிக்கும் அளவிற்கு உள்ள பெரும் செல்வம். பார்க்க: புதிய ஏற்பாடு மத்தேயு 6:24

### 3. வாக்ஸ் வெடிகுண்டு சதியுடன்

கை ∴பாக்ஸ் (கி.பி. 1570-1606) என்பவன், வெடிகுண்டு வைத்து பிரித்தானியப்பாராளுமன்றத்தைத் தகர்க்க முயற்சித்தான். அவனுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது.

### 4. ஹெர்குலேனியம்

பழைய காலத்தில், இத்தாலியில் இருந்த ஒரு நகரம். கைவினைப் பொருட்கள் தயாரிப்பதில் புகழ்பெற்று விளங்கியது.

### 5. நோவா

பல வகை மிருக ஜாதிகளின் ஒரே தொகுப்பு நோவா கட்டிய மரப்பேழைக்குள் இருந்தது. ( பார்க்க, ஆதியாகமம் 6: 19,20)

### 6. பென்னன்ட்

முழுப்பெயர் தாமஸ் பென்னன்ட் . வெல்ஷ் பிரதேச இயற்கைவியலாளர், 'இலண்டன் பற்றிச்சில குறிப்புகள்' என்ற புத்தகத்தை 1790-ல் இவர் வெளியிட்டார்.

### 7. ஹோகர்த்

வில்லியம் ஹோகர்த் (கி.பி. 1697 – 1764) சிறந்த ஓவியர். கேலிச்சித்திரக்காரர். சிறந்த கைவினைஞர்.

**8. பஞ்ச் பானம்**

இந்தி வார்த்தை 'பஞ்ச்' என்ற வார்த்தையிலிருந்து வந்தது. சர்க்கரை, எலுமிச்சைச்சாறு, நறுமணப் பொருட்கள், மது மற்றும் நீர் என்ற ஐந்து பொருட்களைக்கலந்து தயாரிக்கப்படும் ஒரு வித பானம்.

**9. மன்னன் மைதாஸ்**

'அறிவில்லாத, பணக்காரப்புரவலன்' என்று அர்த்தம். ஃபைர்ஜியா நாட்டு மன்னன் மைதாஸ் கடவுள்களான பான் மற்றும் அப்பல்லோ ஆகியோருக்கிடையே நடந்த இசைப்போட்டியில் நடுவராக இருந்தான்.

**10. ஃபார்ட்டின் ப்ராஸ்**

ஷேக்ஸ்பியரின் '**ஹேம்லட்**' நாடகத்தில் வரும் பாத்திரம், நார்வே தேசத்து அரசன்.

**11. சாத்தம், ஷெல்பர்ன், ராக்கிங்கம்**

அந்நாளின் இங்கிலாந்து பிதாமகர்கள்

**12. கோணலாகச் சுற்றி**

உயர்குடி வம்ச குடும்பத்தினரின் வழியில் முறை தவறிப் பிறந்தவர் என்பதை மறைமுகமாகக்குறிப்பிடுகிறார் லேம்ப்.

**13. ஆர்கேதிய**

தென் கிரேக்கத்தில் உள்ள ஒரு கிராமப்புறப்பகுதி

**14. ஏமியன்ஸ்**

ஆர்தன் வனாந்திரத்தில் ஏமியன்ஸ் பாடிய பாடல். வில்லியம் ஷேக்ஸ்பியரின் ***உன் விருப்பப்படியே*** (*As you like it*) நாடகத்தில் அங்கம் 2, காட்சி 7-ஐப் பார்க்கவும்.

**15. பரிதாபகரமாய் இருந்தது**

ப்ளம்மர் இறுதியில் தற்கொலை செய்து கொண்டு இறந்து விட்டார்.

**16. ஹென்றி பிம்பர்ன்ஸ் மற்றும் கிரேக்கத்தின் கிழவன் ஜான் நேப்ஸ்**

இந்த இடத்திற்காகக்குறிப்பிடப்படும் கற்பனையான நபர்கள் அல்லது பெயர்கள்

# 3. விடுமுறைக்காலத்தில் ஆக்ஸ்ஃபோர்டு வளாகம் (மூலம் - *Oxford in the Vacation*)

இக்கட்டுரையின் அடியில், அச்சுக்கலையை தேர்ந்து ரசிக்கும் ஒரு தேர்ந்த நபரைப்போல, அடியில் உள்ள ஆக்கியோனின் பெயர் தோன்றியும், தோன்றாதது போலவும் தென்பட, அதில் ஒரு விரைவான பார்வையைச் செலுத்தி விட்டு, விவாரஸ் அல்லது உல்லட்[1] செதுக்கிய கைவினைப்பொருளைக்கண்டு விட்டு, அதைச் செதுக்கியது யார் என தவறாது விசாரித்தல் போலே, என் வாசகரே, நீங்கள் எலியா எனப்படுபவர் யார் ? என ஆச்சரியத்தோடு கேட்பதாக நான் எண்ணுகிறேன்.

என்னுடைய முந்தைய கட்டுரையில், வெகு காலத்திற்கு முன்பே ஒழிந்து போன, ஒரு பாதி அளவுக்கு மறந்து போன, பழைய வியாபார நிறுவனத்தில், தற்போது இல்லாது போன, குமாஸ்தாக்களின் குணாம்சங்களை விவரித்து, உங்களின் கவனத்தைத்திசை திருப்பி விட்டேன். ஆதலின், நீங்கள் என்னையும் அவ்வண்ணமே அதே வகையைச் சேர்ந்தவன் எனவும், மேசையை வணங்கும் தலைமுடியை ஒட்ட வெட்டிக்கொண்ட எழுத்தர் எனவும், சில நோயாளிகள் தங்கள் திரவ ஆகாரத்தை ஒற்றைச்சிறகின் நீண்ட குழல் துவாரம் வழியாக உறிஞ்சுதல் போலே, என் ஜீவனத்தை இறகுப்பேனாவின் வழியாகப் பெறுகிறேன் என்றும் கருதியிருக்கலாம்.

நல்லது. நான் ஒரு விதத்தில் அவ்வாறானவன் என்பதை ஒப்புக்கொள்கிறேன். அத்துடன், நீங்கள் நன்கு அறிந்த என்னுடைய முற்பகல் வேளையில், சற்று நேரம் ஆசுவாசம் கொள்ள நேரிடும்போது, என்னுடைய ஆசையும், விருப்பமும் ஆன வாசித்தலைத் தவிர வேறு எதுவும் எனக்கு வெறுப்பூட்டும் எனவும் அறிவீரா?

கருநீலச்சாயம், பருத்திப்பஞ்சு, கச்சாப்பட்டு, செயற்கைப்பூ வேலைப்பாடு செய்யப்பட்ட நிர்ணய அளவிலான சரக்குகள் மற்றும் இதர வகைகளுடன் எனது சிறந்த நாழிகைப்பொழுதுகளைக் கழித்துள்ளேன்.

இவ்வாறு இருப்பதால், முதலாவதாக, வீடு செல்லும் போது, புத்தகங்கள் மீது அதிக ஆவலோடு அது என்னை அனுப்புகிறது. நீங்கள் கழித்துக்கட்டும் காகிதக்குப்பைகள், கழிவு ஃபுல்ஸ்கேப் அட்டைகள், யாவும் மிக நன்றாய், இயற்கையாகவே ஸானட் கவிதைகள், குறுஞ்சொற்றொடர்கள், கட்டுரைகள் எழுதப்பயன்பட்டு, வியாபார அலுவலகத்தில் உள்ள கழிவுக்காகிதங்கள் யாவுமே ஒரு எழுத்தாளரை உருவாக்கியுள்ளன.

சாலையில் தடம் பதித்துச்செல்லும் குதிரை வண்டி போலே, பகல் முழுதும், அலுவலக பதிவேடுகளில் எண்கள், பூஜ்யங்கள் என்ற ஆழ்ந்த தடம் பதித்துத்தொடர்ந்து எழுதிக்கொண்டிருக்கும் இறகுப் பேனா, அந்த சலிப்பூட்டும் வேலையிலிருந்து விடுதலை அடைந்து, பூப்போன்ற தரை விரிப்பு போன்ற நெடுங்கட்டுரையை நள்ளிரவில் தயார் செய்வதில் மகிழ்வடைதல் உண்டு. அந்த இறகுப்பேனா தனது விடுதலையை உணரும். எனவே, மொத்தத்தில் தனது தகுதியை விடக் குறைத்துக் கொண்டதால், எலியா அவர்களின் இலக்கிய யோக்கியதை மிகக்குறைவே.

ஒரு பொது அலுவலகத்தில் உள்ள பணியில், யோசேப்பு அணிந்த பல வண்ண மேலங்கி[2] போலே, இயல்பாகவே தொடர்புடைய எண்ணற்ற விஷயங்களை விவரித்துச்சொல்லும் என் ஆர்வத்தினால், இதில் உள்ள சில குறைபாடுகளைக்கண்டறிவது ஒரு தந்திர புத்தியுள்ளவனுக்கு சாத்தியமாக இருக்கக்கூடும்.

ஒரு வருடத்தில் உள்ள நான்கு பருவங்களில் கிட்டிய முக்கிய விடுமுறை தினங்கள் எனக்கு தந்து வந்த ஆறுதலான இடைவெளிகள் மற்றும் கொஞ்சம் விடுதலை ஆகியவற்றை ஒழித்தது குறித்து முழு இருதயத்தோடு எனது வருத்தத்தை இந்தச்சந்தர்ப்பத்தில் தெரிவிக்க உங்கள் அனுமதி கோருகிறேன்.

அந்நாளைய விடுமுறை நாட்களானவை – பரிசுத்த பவுல், ஸ்தேவான், பர்னபா, அந்திரேயா மற்றும் யோவான்[3] ஆகியோரின் தினங்கள். அவை யாவும் தற்போது எல்லாவிதத்திலும் வழக்கொழிந்து போயின. அந்நாளில் நாங்கள் கிறித்தவப்பள்ளியில் படித்தபோது, இந்த தினங்களையெல்லாம் பரிசுத்தமாக ஆசரித்தோம். அந்த நாட்களை

நான் நினைவு கூரும் போது, பழைய காலத்து பாஸ்கட்[4] அவர்களின் ஜெபப்புத்தகத்தில் உள்ள உருவங்களை நினைவு கூருகிறேன். அவற்றில் பரிசுத்த பேதுரு[5] அவர்கள் அசௌகரியமான விதத்தில் (தலைகீழாகத்) தொங்கிக் கொண்டிருப்பதையும், பர்த்தலோமியு[5] அவர்கள் சவுக்கடியினால் துன்பப்படுவதையும், ஸ்பக்னோலட்டி[6] அவர்களின் ஓவியத்தில், புகழ் பெற்ற மர்சியாஸ்[7] (சவுக்கடி வாங்குவது) சித்தரிக்கப்பட்டது போல, பரிசுத்த பர்த்தலோமியு அவர்கள் சவுக்கடியினால் துன்பப்படுவது போன்ற எல்லா சித்தரிப்புகளையும் மதித்தேன். அதே போல, யூதாஸ் காரியோத்து[8] தடம் மாறி காட்டிக் கொடுத்த போது, கிட்டத்தட்ட அழுது விட்டேன்.

புனித பரிசுத்தவான்களின் நினைவுகளைப்போற்றி, அனுசரிக்க பெரிதும் நாங்கள் விரும்பினோம். பரிசுத்த யூதா மற்றும் பரிசுத்த சீமோன் ஆகியோரின் நினைவு தினங்கள் ஒன்றாக்கப்பட்டது, ஏதோ அவர்களின் பரிசுத்தமும் ஒன்றாக்கப்பட்டது போல ஒரே ஒரு நாள் கொண்டாட்டமாக மாற்றப்பட்டதில் எனக்கு சிறிது நெருடல் உண்டு. இந்தச்சிக்கனம், எமது ஆன்மீகத்திட்டத்திலே பயனற்ற ஒன்றாகும்.

இவையாவும், ஒரு கல்விமானின், ஒரு மாணவனின் வாழ்வில் வரும் பிரகாசமான நாட்களாகும்.

'தூரத்தே அவை ஒளிரியபடி வருகின்றன'[9].

அந்நாளில், நான் ஒரு சிறந்த பஞ்சாங்கம் போலவே இருந்தேன். அடுத்த வாரத்தில் அல்லது அதற்கு அடுத்த வாரத்தில், எந்த பரிசுத்தவானின் தினம் வருகிறது என்று உங்களுக்கு என்னால் சொல்ல முடியும்.

ஒரு உதாரணத்திற்கு, இபிபனி தினம்[10], சில கால துரதிருஷ்டத்தால், ஆறாண்டுகளுக்கு ஒரு முறை, ஸேபத்[11] ஞாயிற்றுக்கிழமை அன்று வந்து விடும். இப்போது மத நிந்தனை செய்பவனை விட ஒரு படி மேலே சிறந்தவனாக இருக்கிறேன். எனது மூதாதையர்களின் ஞானத்தை நான் விசாரணை செய்வதாக என்னைக் குறித்து எண்ண வேண்டாம். இந்த பண்டிகை ஆசரிப்புகள் யாவும் 'போப்பாண்டவர்தனமாகவும் ' மூடநம்பிக்கையாகவும் இருப்பதாக என் மூதாதையர்கள் கூறியுள்ளனர். நீண்ட நாளைய பழக்கவழக்கம்

குறித்து, மிக நாசூக்காக பிஷப்புகளின் கருத்தை முதலில் கேட்டிருக்க வேண்டும். ஆனால், இவ்விஷயத்தில் என் திறனுக்கு அப்பாற்பட்ட பிரச்னையில் நான் போராடிக் கொண்டிருக்கிறேன்.

பொது ஜன மற்றும் திருச்சபை அதிகார எல்லைகள் குறித்து முடிவெடுக்க நான் சரியான ஆள் அல்ல. தற்போது கல்வியின் மய்யமான மகத்தான பாட்லி[12] நூலக நிழலில் அமர்ந்து ஸெல்டன்[13] அல்லது தலைமைப்பேராயர் அஷர்[14] ஆகியோர் எழுதியுள்ள அநேக புத்தகங்களில் நான் ஆழ்ந்திருப்பினும், நான் அவர்களைப்போன்றவன் அல்ல. நான் வெறும் எலியா.

நான் இங்கு கனவானைப்போலவோ அல்லது மாணவனைப் போலவோ நடந்து கொள்ளலாம். என் இளமைப்பருவத்தில், இனிய கல்விச்சாலையில் கல்வி பெறும் வாய்ப்பை இழந்த எனக்கு, இதைப் போலவோ அல்லது வேறொரு பல்கலைக்கழகத்திலோ ஒரு சில வாரங்களை வெகு மகிழ்வாய்ச்செலவிட இயலாது. அவர்களின் (பல்கலைக்கழகத்தின்) விடுமுறையும் எமது விடுமுறையும் ஒரே நேரத்தில் அமைந்தது வசதியாக இருக்கிறது. இங்கு நான் இடையூறுகள் இன்றி உலா வர முடியும். எனக்குப்பிடித்தமான பட்டப்படிப்பில் சேர்ந்திருப்பதாக கற்பனை செய்து கொள்ள இயலும். நுழைவுத்தேர்வு இன்றி பல்கலைக்கழகப்படிப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டதாக ஒரு பிரமை. நான் தொலைத்த வருடங்களை சரி செய்து கொள்ளமுடியும். காலையில் உள் வளாக தேவாலய மணி ஒலிக்கும் போது விழித்தெழுந்து, அது எனக்காக ஒலிப்பதாய் எண்ணிக்கொள்ள முடியும்.

மற்ற எளிய தருணங்களில், நான் ஏழை மாணவனைப்போலவோ அல்லது உணவு பரிமாறும் ஆளைப்போலவோ ஆக முடியும். சில மேட்டிமையான, பெருமை கொள்ளும் தருணங்களில், நான் பணக்கார மாணவர்களைப் போல நடந்து போக முடியும். சில சீரிய தருணங்களில், நான் முதுநிலைப்பட்டப்படிப்பிற்கும் உயர்வு பெற்றுச் செல்ல முடியும். உண்மையில், நான் அத்தகைய மாணவனின் நடத்தையைப்போலவே நடந்து கொள்கிறேன்.

நான் கடந்து செல்லும்போது, என்னைக் கல்விமானாகக்கருதி, மங்கிய பார்வை உடைய வளாகப்பணியாளர்களும், படுக்கைகளை விரிக்கும் கண்ணாடி அணிந்த முதிய பெண்களும் எனக்குப் பணிந்து மரியாதை செய்வதையும் பார்க்க முடிகிறது. நான் கருப்பு அங்கி அணிந்து செல்வதைப்பார்ப்பதால், அவர்கள் அவ்வாறு எண்ணுகிறார்கள். பரிசுத்த கிறிஸ்து சபை வளாகத்தில் என்னை இறையியல் பட்டம் பெற்ற அல்பேனா[15] பேராயராகவே எண்ணுகிறார்கள்.

இந்த இடங்களில், இச்சமயங்களில், நடப்பது ஒருவருடைய தனிப்பட்ட, தனித்துவ அனுபவம். உயர்ந்த மரங்கள் உள்ள கிறிஸ்து சபை, தோப்புகள் உள்ளடங்கிய மாட்லின்[16]. ஆளரவமற்ற கூடங்களின் கதவுகள் திறந்திருக்கின்றன. யாரும் அறியா வண்ணம் உள்ளே நுழையவும், அவற்றின் பூர்வ ஸ்தாபகருக்கு மரியாதை செய்யவும் நம்மை அழைக்கின்றன. உயர்குடிப்பிறந்தவர் அல்லது நமது புரவலரின் ஓவியம், தனக்காக மணிமாலையுடன் ஜெபம் செய்பவரைப்பார்த்துப் புன்னகைக்கின்றது.

பின்பு, மளிகைச்சாமான்கள் மற்றும் மது வைக்கும் அறையைப் பார்க்கலாம். அல்லது பாத்திரங்கள் கழுவும் அறையைப்பார்க்கலாம். இந்த அறைகளின் பிரம்மாண்ட விரிவு, அக்கால விருந்தோம்பலின் தாராளத்தன்மையை எடுத்துக் காட்டுகிறது.

சமையலறையின் பெரிய குகை போன்ற உள்ளிடம், அடுப்பங்கரை, அதன் சுவர்களில் உள் வாங்கிய இடைவெளிகள், நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு, முதல் பணியாரங்கள் சுடப்பட்ட பானைகள், சாஸருக்கு நெருப்பில் மாமிசம் சுடுவதற்கு பயன்படுத்தப்பட்ட கூரிய, நீண்ட கம்பிகள். அவரது கற்பனையில் மரியாதை செய்யப்படாத சமையல்காரன் ஒருவனும் இல்லை. சமையற்காரன் ஒரு மேற்பார்வையாளன் போலே கனப்படுத்தப்பட்டான்.

பழமையே ! என்னே உன் அற்புதமான கவர்ச்சி ! நீ யார் ? ஒன்றும் இல்லாதிருந்தும், நீயே சர்வமும்!! நீ நிகழ்காலத்தில் உள்ள போது, நீ பழமையல்ல. நீ ஒன்றுமல்ல ! எனினும், மிகப்பழமை எனும் போது, அது கண்மூடித்தனமான மரியாதையோடு பார்க்கப்படுகிறது. நீ உன்

காலத்தவைகளை பழமையற்றதாகவும், சாதாரணமானதாகவும், நவீனமானதாகவும் கருதினாய். பழமையானவைகளைத் திரும்பிப்பார்ப்பதில் என்ன மர்மம் உள்ளது ?

தன் இரு முகங்களில், முதுகுப்புறமாய்ப்பழமையை மட்டும் பார்க்கும் ஒரு முகம். அல்லது இரு முகங்களில், முன்புறமாய்ப் பார்க்காது, முதுகுப்புறமாய்ப்பழமையை மாத்திரம் பார்க்கும் ஜானுஸ்[17] தேவதையினைப்போல, ஒன்றுமில்லாதிருந்தும் எதிர்காலமே சர்வமும். எல்லாமாயிருந்தும் பழமை என்பது ஒன்றுமில்லை.
உன் இருண்ட பழமைக்காலம் எங்கே? அந்த நாளிலும் இப்போதுள்ளது போலவே கண்டிப்பாக சூரியன் பிரகாசமாக உதித்திருப்பான். அந்தப்பழமையைக்குறித்துச்சொல்லும்போது, கரிய இருள், பழைய நிகழ்வுகளை இருட்டடிப்பு செய்தது போலவும், நம் மூதாதையர்கள் இருளில் தட்டுத்தடுமாறி நடமாடிக் கொண்டிருந்தனர் என்ற வகையான உணர்வு தோன்றாமல் இருப்பதில்லையே ! அது ஏன்?

பழைய ஆக்ஸ்.ஃ.போர்டே! உன் அரிய தன்மை எல்லாவற்றிற்கும் மேலாக, எனக்கு திருப்தியும், மன சாந்தியும் தருவது, மெதுவாய் செல்லரித்துக்கொண்டிருக்கும் புத்தகங்கள் அடுக்கப்பட்ட அலமாரிகள்.

அந்தப்பழைய நூலகம் என்பது என்ன ஒரு அருமையான இடம்! எல்லா எழுத்தாளர்களின் ஆன்மாக்களும், தங்கள் உழைப்பையெல்லாம் இந்தப் பல்கலைக்கழக பாட்லி நூலகத்திற்கு தத்தம் செய்து விட்டது போலத்தோன்றுகிறது. அவை யாவும் தங்கும் விடுதியில் தங்குவது போல, இங்கேயே தங்கி விட்டன. நான் அந்தப் புத்தகங்களின் பக்கங்களைப்புரட்டி, அவற்றின் மேல் உள்ள துணி உறைகளைப்புரட்டி, பாவச்செயல் செய்ய விரும்பவில்லை. நான் அவ்வாறு செய்தால், அதன் உள்ளே இருக்கும் ஆவி வெளியேறி விடும். இந்தப்புத்தகங்களுக்கு நடுவில் நடந்து கொண்டிருக்கும் போது, அதன் வாசத்தை சுவாசிக்கிறேன். அதன் மேல் உள்ள மேல் உறைகளின் புத்தகப்பூச்சிகளின் மணம் மகிழ்ச்சியான (ஏதேன்) தோட்டத்தில் வளர்ந்த நன்மை, தீமை அறியத்தக்கதான கனியின் வாசம் போலவே இருக்கிறது.

அந்தக்காலம் கடந்த கையெழுத்துப்பிரதிகளின் நீண்ட உறக்கத்தினைக்கலைக்க எனக்குக்கிஞ்சிற்றும் ஆர்வம் இல்லை. நல்ல கல்விமானின் ரசனைக்கு ஏற்ற பல தரப்பட்ட புத்தகங்கள் என்னைச்சலனப்படுத்தி, என்னைக்கவர்ந்திழுத்து, என் மன உறுதியைக்குலைக்கின்றன. நான் பழையவைகளைத்தோண்டி எடுக்கும் புதை பொருள் ஆராய்ச்சியாளன் அல்ல. என்னைப் பொறுத்தமட்டில், திரித்துவம்[18] குறித்த சாட்சிகளின் நம்பகத்தன்மை சர்ச்சையின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது.

இந்த ஆவலாதிகள் யாவற்றையும், பாஸன் மற்றும் ஜார்ஜ் டையரிடம்[19] விட்டு விடுகிறேன். இவர்கள் இருவரும், ஓரியல் கல்லூரியின் மூலையில், ஏதோ ஒரு போதும் தேடப்படாத ஒரு அச்சகத்திலிருந்து எடுக்கப்பட்ட பழைய புத்தகங்களின் மீது, ஒரு பூச்சியைப்போல சுறுசுறுப்பாய் இயங்கிக்கொண்டிருப்பதைக் காணுகிறேன். நீண்ட வாசிப்பினால் அவர் கிட்டத்தட்ட புத்தகமாகவே மாறி விடுகிறார். அவர் பழைய அலமாரிகளின் அருகே செயலற்று நிற்கிறார். நான் அவருக்குப்புதிய ரஷ்யத் தோல் உறையை அணிவித்து அவருக்கென ஒரு தனி இடத்தை ஒதுக்கித்தர ஆசைப்படுகிறேன். ஸ்காப்புலா[20] தொகுத்த உயரமான அகராதி என்று அவரை யாராவது கருதி விடலாம்.

இந்தக் கல்வி மையங்களுக்குச்செல்வதில் ஜார்ஜ் டையர் சிரத்தையாய் இருக்கிறார். இந்த மையங்களுக்கும், க்ளி.ஃ.ப்.ஃ.போர்டு நீதி சங்கத்திற்கும் இடையே பயணிப்பதற்கு, அவர் நிறைய பணத்தைச்செலவழித்திருப்பார். அச்சங்கத்தில், ஒருவருக்கொருவராய்த்தொடர்பற்ற வழக்கறிஞர்கள், வக்கீல் குமாஸ்தாக்கள், நீதிமன்ற ஏவலர்கள், சட்டப்பூச்சிகள் ஆகியோருக்கு மத்தியில், விஷப்பாம்புகளின் புற்றுக்கு மேல் அமர்ந்த புறாவினைப் போல, அவர் பாவம் ஏதும் இல்லாத அமைதியில், தன் சுயப்பிரக்ஞையற்ற இருப்பிடத்தில் அமர்ந்திருக்கிறார். சட்டத்தின் விஷப்பற்கள் அவரைக்கடித்ததில்லை. சட்டத்தின் காற்று அவரது எளிய அறையின் ஊடே வீசும். நீதிமன்ற அதிகாரி அவரது அறையைக் கடந்து செல்லும் போது, தன் தொப்பியை உயர்த்துகிறார். சட்டப்பூர்வமான அல்லது சட்ட விரோதமான மரியாதைக்குறைவு எதுவும் அவருக்கு நேருவதில்லை. யாரும் அவருக்குத்துன்பமோ

அல்லது அநீதியோ செய்ய முனைவதில்லை. அவரைக்குறித்து நீங்கள் ஒரு திடமில்லாத எண்ணமே கொள்ள முடியும்.

இரு பெரும் பல்கலைக்கழகங்களுடன்[21] தொடர்புடைய எல்லாப் புதுமையான விஷயங்களைக்குறித்தும், பல ஆண்டுகளாகவே மிகவும் கஷ்டப்பட்டு ஆய்வு செய்து வருவதாக ஜார்ஜ் டையர் என்னிடம் தெரிவிக்கிறார். சமீபத்தில், அவருக்கு ஒரு கையெழுத்துப் பிரதி கிட்டியதாகவும், அது கேம்பிரிட்ஜ் தொடர்பான பல சாசனங்களின் தொகுப்பு எனவும், இதன் மூலமாக சில சர்ச்சைக்குரிய விஷயங்களை அவர் தீர்க்க இயலும் என நம்புவதாகவும், குறிப்பாக முதலாவதாக ஸ்தாபிக்கப்பட்ட நிறுவனம் எது என்ற விஷயத்தில், இரு நிறுவனங்களுக்கிடையே நிலவும் நீண்ட கால சர்ச்சையைத் தீர்க்க இயலும் எனவும் தெரிவித்தார். இந்தப்பரந்த தேடல்களில், அவர் செலுத்துகின்ற ஆர்வத்திற்கு ஈடு கொடுக்கும் வண்ணம், அதற்குத் தேவையான ஆதரவு இங்கோ அல்லது கேம்பிரிட்ஜிலோ கிட்டவில்லை என நான் ஐயுறுகிறேன்.

உங்கள் நிறுவனத்தலைவர்களும், கல்லூரி முதல்வர்களும், இந்த விஷயத்தில், மற்ற எல்லாரையும் விடக்குறைவாகவே அக்கறை கொள்வதாக எண்ணுகிறேன். தாங்கள் கல்வி கற்கும் தாயகத்தின் மடுக்களிலிருந்து பாலை மட்டும் உறிஞ்சிக்குடித்து, ஊட்டம் பெற்று விட்டு, தாங்கள் கல்வி கற்ற வணங்கத்தக்க வரலாற்றை ஆய்ந்து பாராமல், அவை குறித்து ஆர்வம் கொள்ளாமல், அவை சம்பந்தமில்லாத விஷயங்கள் என்றும், அவை மதிப்பிற்குரியதல்ல என்றும் அவர்கள் கருதினர்.

அவர்கள் தங்களுக்கென நல்ல நல்ல இறையிலி நிலங்களை வைத்துள்ளனர். அந்த நிலங்களின் மூலப்பத்திரங்களைக்குறித்து அவர்கள் தேடி ஆராய்வதில்லை. இது குறித்து நான் பிறர் வாயிலாக இவ்வளவு தகவல்களைப்பெற்றுள்ளேன். ஏனெனில், புகார் செய்வதற்கு டையர் சரியான நபர் அல்ல. டையர் ஒரு அடக்க முடியாத முரட்டுப்பசு போல தன் வாழ்வைத் துவக்கினார். நான் அவர் வாழ்வில் குறுக்கிட்டேன். நாங்கள் ஓரியல் கல்லூரியில் சந்தித்தோம் என்பதற்கு ஆதாரம் இல்லை. அது வெறும் கற்பிதமே. ஆனால், கிளி∴ப்∴போர்டு நீதி சங்கத்தில் அல்லது கல்லூரியில் அவர் தனித்து நடந்து

கொண்டிருந்த போது, அவரைச் சந்தித்துப்பேசினேன். பின்னிரவு மற்றும் நள்ளிரவில் நெடுநேரம் வாசிப்பதால், அவருக்குக் கிட்டப்பார்வை ஏற்பட்டுள்ளது. அத்துடன் டையர், மனிதர்களுக்குள்ளே பெரிதும் ஞாபக மறதி கொண்டவர்.

அன்றொரு நாள், பெட்.்.போர்ட் சதுக்கத்தில், நமது நண்பர் பசில் மான்டேக் அவர்களின் வீட்டுக்குகாலையில் வந்தார். அவர் வந்த போது, அவ்வீட்டில் யாரும் இல்லாததால், அவர் வீட்டின் கூடத்தினுள் அழைத்துச்செல்லப்பட்டார். அங்கு அவர், காகிதமும், மையும் தருமாறு கேட்டார். அத்தகைய வீடுகளில் வெகு சாதாரணமாக வைக்கப்பட்டிருக்கும் புத்தகத்தில் தன் வருகையினைக்குறித்து மிகத் துல்லியமாக எழுதி, தன் பெயரையும் எழுதியதோடு, வீட்டிற்குத்தக்க நேரத்தில் வருகை தராத தன் துரதிருஷ்டத்தையும் அதில் பதிவு செய்கிறார்.

வழக்கமான பல சம்பிரதாயங்களுடன், வருத்தத்தை வெளிப்படுத்தியபடி அவர் விடை பெறுகிறார். சுமார் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் கழித்து, விதி வசத்தினால் அதே இடத்திற்கு மீண்டும் வந்து விடுகிறார். அங்கே வீட்டினுள் நெருப்புக்கூட்டிற்கு அருகே பசில் மான்டேகு அவர்களின் குடும்பம் வட்டமாக அமர்ந்து குளிர் காய்ந்து கொண்டிருப்பது போலவும், திருமதி. பசில் மான்டேகு வீட்டின் லார் அரசியார்[22] போல அதற்கு தலைமையேற்றிருப்பது போலவும், அவர் மனத்தில் கற்பனை செய்து கொள்கிறார். அந்த வீட்டினர், அந்த வாரத்தின் இறுதி நாளுக்கு முன்பாக கிராமத்திலிருந்து திரும்பி வரப்போவதில்லை என்ற உண்மையை மறந்து விட்டு, இரண்டாவது தடவையும் ஏமாற்றம் அடைந்து, முன்னதாகக்கேட்டது போலவே, பேனா மற்றும் காகிதம் ஆகியவைகளைக்கேட்கிறார். வருகையாளர் புத்தகம் கொண்டு வரப்படுகிறது. அவருடைய பெயர் எழுதப்பட்ட மை கூட இன்னும் காயவில்லை. எனினும், அதற்கு மேலே தன்னுடைய பெயரை மீண்டும் ஒரு தடவை எழுதுகிறார். அது இன்னொரு சோசியா[23] போல அவரைப்பார்க்கிறது. அல்லது ஒரு மனிதன் தன் நகலைத்திடீரென்று சந்தித்தது போல ஆகி விடுகிறது. இதன் விளைவு என்னவென்று நீங்கள் ஊகித்திருக்கலாம். எதிர்காலத்தில் இத்தகைய தவறுகள் நேரக்கூடாது என ஜார்ஜ் டையர்

நல்லதொரு முடிவு மேற்கொள்கிறார். அம்முடிவை நீண்ட காலத்திற்கு மிகக்கடுமையாக அனுசரிக்க மாட்டார் என நான் நம்புகிறேன்.

ஏனெனில், ஜார்ஜ் டையர் அவர்களைப்பொறுத்தமட்டில், உடலால் ஞாபக மறதி கொள்வது என்பது, உள்ளத்தால் கர்த்தரோடு இணைந்திருப்பது ஆகும். உங்களைச்சந்திக்கின்ற தருணத்தில், உங்களை அடையாளம் கண்டு கொள்ளாமல், அவர் கடந்து செல்கிறார். அல்லது, அவரை நீங்கள் தடுத்து நிறுத்தினால், அவர் ஆச்சரியமடைந்தவர் போலே பேசத் துவங்கி, தாபோர்[24] மலையில் அல்லது பர்னாஸஸ்[25] மலையில் இருப்பது போலவும், அல்லது பிளாட்டோ அவர்களுடன் தத்துவார்த்த விவாதத்தில் ஈடுபட்டிருப்பது போல, அல்லது அரசியல் எழுத்தாளரான ஹாரிங்டன்[26] அவர்களுடன் 'அழியாத குடியரசு' நாடு ஒன்றை உருவாக்கி, அதை முன்னேற்றுவது குறித்தோ, அல்லது உங்களைப்போன்றவர்களை முன்னேற்றுவது குறித்தோ, சில தனிப்பட்டவர்களுக்கு அல்லது உங்களுக்குக்காட்ட வேண்டிய நற்பண்புகள் அல்லது மரியாதையைக்குறித்து எண்ணிக் கொண்டிருக்கலாம். கவனத்தை ஈர்த்த உங்களின் தனிப்பட்ட பிரசன்னம், கற்பனையிலிருந்து அவரை மீண்டும் நனவுலகத்திற்குக் கொண்டு வந்து, அது குறித்து அவர் குற்றவுணர்வு கொள்ளத் தொடங்குகிறார்.

ஜார்ஜ் டையர், இம்மானுவேல் கல்லூரியில் கடினமாகப் படித்துவிட்டு, பிறகு தன் வாழ்வைத் தொடங்கினார். அவர் ஒரு மதப்பற்றுள்ள, நயவஞ்சகமான பள்ளிக்கூட தலைமை ஆசிரியர் ஒருவரிடம் வருடத்திற்கு எண்பது பவுண்டுகள் என்ற சம்பளத்தில் உதவியாளராக வேலைக்குச்சேர்ந்தார். அவருக்குத்தங்குமிடமும், சாப்பாடும் இலவசம். இந்த எளிய சம்பளத்தில், அவர் அந்த மனுஷனிடம் கடினமாக வேலை பார்த்த காலத்தில், பாதிச் சம்பளத்துக்கு மேல் வாங்கியதே இல்லை.

அவர் ஒரு இனிய சம்பவத்தைச்சொல்கிறார். அவருடைய கால் சட்டை கிழிந்து, அதன் துவாரத்தின் வழியாக அவரது வறுமை அவரை வெறித்துப்பார்த்தபோது, அவருடைய கூச்ச சுபாவத்திற்கு மாறாக, தன்னுடைய சம்பள பாக்கி குறித்து தன் எஜமானனிடம் குறிப்புக்

காட்டினார். ஆனால், டாக்டர்_________ அந்தப்புகாரைக்கவனத்தில் கொள்ளாமல், இரவுச்சாப்பாடு முடிந்ததும், பள்ளி மாணவர்கள் கலந்து கொள்ளும் திருச்சபை ஆராதனையில் ஈடுபட்ட போது, செல்வத்திற்கு எதிராக உபதேசம் செய்ததுடன், பணத்தாசையால் இருதயம் எந்த அளவு சீரழிகிறது என்றும் பிரசங்கம் செய்து விட்டு, 'கர்த்தாவே, உமது அடியார்களை மற்ற எவற்றையும் விட, பேராசைக்கு மேலே உயரே வையும் '. ஆகாரமும், உடையும் கிடைக்கும் பட்சத்தில், அவற்றோடு அவர்கள் திருப்தி கொள்ளட்டும். 'தரித்திரத்தையும், ஐசுவரியத்தையும் எனக்குக்கொடாதிருப்பீராக' என்று சாலமோன் நீதிமொழிகளில் விருப்பப்படுவது போலவே எனக்கும் வரம் தாரும்' என்பார். இது கேட்பவர்களுக்கு முழுக்க முழுக்க கிறித்தவ நாணமும், எளிமையும் கொண்ட தாத்பர்யம் போலே தான் ஒலிக்கும். ஆனால், டையர் அவர்கள் கோரிய காலாண்டு சம்பளத்திற்குப்பதிலாக அவருக்கு முழுமையாகக்கிடைத்தது இந்த பிரசங்க உபதேசம் தான். அத்துடன், டையர் அவர்கள் மிகக்குறைந்த சம்பளத்தில் முன்னெப்போதும் இல்லாத வகையில், சிறு தொகைக்கு, தன்னைப்பாராட்டாத புத்தக வெளியீட்டாளர்களுக்காக கடின வேலை செய்து கொண்டிருக்கிறார்.

பழைய செம்மொழி இலக்கியங்களைப்பிழை திருத்தித் தருவதில் அவரது பாண்டித்யத்தை வீணடித்துக்கொண்டிருக்கிறார்.

தங்கள் கல்வியை, முழுமையான பண ஆதாயத்திற்கு விற்க மனமில்லாத கடும் உழைப்பாளிகளான அறிஞர்களுக்குத்தரப்படும் பகட்டில்லாத, திடமான கல்விப்பணிகள் யாவிலும் தன்னை ஈடுபடுத்திக்கொண்டுள்ளார். அவர் கவிதைகள் வெளியிட்டு, அவரைப் போலவே யாருடைய கவனத்தையும் ஈர்க்கவில்லை.

அவர் பழைய இலக்கியத்தில் ஆழ்ந்து மூழ்கி, கவிதை என்பதன் பிரசித்தமான அடையாளம் என்ன என்பதை அறிந்திருந்தார். அதை அவர் தொட்டுக்காட்டியிருக்கவும் கூடும். சுயமாய் எழுதிய ஆசுகவிகள் என்றே அவர் அவைகளை அழைக்கிறார்.

அக்கவிதைகள், சுதந்திரம் மற்றும் வசந்த காலத்திற்கான புகழ்ச்சிப்பாக்கள். மிகை உணர்ச்சி வெளிப்பாடுகள். அவர்

புனிதப்பயணம் மேற்கொண்ட போது, அவரை மரியாதையுடன் ஏற்ற (அல்லது சகித்துக்கொண்ட) விருந்தோம்பல் செய்த சத்திரங்கள் மற்றும் அவரது நண்பர்களின் வீடுகளில் இருந்து விடைபெற்றுச் செல்லும் போது, மேஜைகளிலும், ஜன்னல் அருகிலுள்ள இருக்கைகளிலும் சிறு புகழுரைகள், சமர்ப்பணங்களை, எழுதி விட்டுச் சென்றுள்ளார்.

அவரது கவிதை தேவதை சற்று தொய்வு கொள்ளும் போது, கிளர்ச்சியை விரும்பும் காலத்திற்கு ஏற்றவாறு நவீனமாய் உள்ள வசன கவிதைகளை எழுதினார். அவரது உரை நடை உலகிலேயே சிறந்தது. அது அவரது ஆரோக்கியமான, இயற்கையான, உற்சாகமுள்ள, களங்கமில்லாத உரையாடலின் அப்பழுக்கற்ற எழுத்து வடிவமாகும்.

டையர் எல்லா இடங்களிலும் இனிமையானவர். ஆனால், இத்தகைய மேற்சொன்ன இடங்களில் அவர் மிகச்சிறந்து நடந்து கொள்வார். அவர் பாத்[27] என்ற இடத்தினைக்குறித்து அக்கறை கொள்ள மாட்டார். அவரைப்பொறுத்தமட்டில், பக்ஸ்டன், ஸ்கோர்பரோ அல்லது ஹேரோகேட்[28] ஆகிய இடங்களில் கேம் மற்றும் ஐசிஸ்[29] ஆகிய (நதிகள்) டமஸ்கு[30] நகரின் தண்ணீர்களை விடச்சிறந்தவை.

கவிதா தேவதையின் மலையின் மேலே, அவர் மகிழ்வோடு, மிக நல்லவராகவும், சுவர்க்கத்தின் அருகில் உள்ள இனிய மலைகளில் உள்ள ஆட்டிடையர்களில் ஒருவன் போலவும் இருக்கிறார் அவர் உங்களுடனேயே கூட வந்து, அங்குள்ள அரங்கங்கள், கல்லூரிகள் ஆகியவற்றை வழிகாட்டியாக இருந்து சுற்றிக்காட்டுகிறார்.
நீங்கள் ஒரு அழகிய வீட்டின் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளர் உங்களுடன் இருப்பதாக எண்ணுகிறீர்கள்.

--------------------------------

## குறிப்புகள்

**1. விவாரஸ் அல்லது உல்லட்**:

விவாரஸ் ஒரு பிரெஞ்ச் சிற்பி. வில்லியம் உல்லட் ஒரு ஆங்கிலச் சிற்பி. இருவருமே பதினெட்டாம் நூற்றாண்டைச்சேர்ந்தவர்கள்.

**2. பல வண்ண மேலங்கி**

பார்க்க, ஆதியாகமம் 37 : 32. 'அவர்கள் யோசேப்பின் அங்கியை எடுத்து, ஒரு வெள்ளாட்டுக்கடாவை அடித்து அந்த அங்கியை இரத்தத்திலே தேய்த்து, பல வருணமான அந்த அங்கியைத்தங்கள் தகப்பனிடத்துக்கு அனுப்பி…'

**3. பரிசுத்த பவுல், ஸ்தேவான், பர்னபா, அந்திரேயா மற்றும் யோவான்**

அந்திரேயா மற்றும் யோவான் இருவரும் இயேசு கிறிஸ்துவின் சீஷர்கள். பரிசுத்த பவுல் மற்றும் பர்னபா இருவரும் அப்போஸ்தலர்கள்.

**4. பழைய காலத்து பாஸ்கெட்**

ஜான் பாஸ்கெட் என்பவர் 1749-ல் வெளியிட்ட ஜெபப்புத்தகம். இதில் புனிதர்களின் சித்திரங்கள் இருந்தன.

**5. பர்த்தலோமியு** :

இயேசு கிறிஸ்துவின் பன்னிரு சீஷர்களில் ஒருவர்.

**6. ஸ்பக்னோலட்டி** :

கி.பி. பதினேழாம் நூற்றாண்டைச்சேர்ந்த ஸ்பானிஷ் ஓவியர்.

**7. மர்சியாஸ்**:

ஸ்பக்னோலட்டி வரைந்த புகழ் பெற்ற ஓவியம். இதில் மர்சியாஸ், அப்போலோ தேவனால் சவுக்கடி படுவது போல வரையப்பட்டிருக்கிறது.

**8. யூதாஸ் காரியோத்து**

இயேசு கிறிஸ்துவைக்காட்டிக் கொடுத்த சீஷன். பன்னிரு சீஷர்களில் ஒருவன்.

**9. 'தூரத்தே அவை ஒளிரியபடி வருகின்றன'**

ஜான் மில்டனின் 'இழந்த சுவர்க்கம்' புத்தகத்திலிருந்து ஒரு மேற்கோள். காதை VI – 768

**10. இபிபனி தினம்** ( Epiphany )

புறஜாதியினருக்கு இயேசு கிறிஸ்து தன் சொரூபத்தைக்காட்டிய தினம். கிறிஸ்துமஸ் முடிந்த பன்னிரண்டாம் தினத்தில் இது கொண்டாடப்படுகிறது.

**11. ஸேபத்**

(Sabbath) – எபிரேய மொழி வார்த்தை. ஓய்வு நாள் என்று பொருள். யூதர்களுக்கு சனிக்கிழமையும், கிறித்தவர்களுக்கு ஞாயிற்றுக்கிழமையும் ஓய்வு நாட்கள்.

**12. பாட்லி**

ஆக்ஸ்.ஃபோர்டு பல்கலைக்கழகத்தின் நூலகம் பாட்லி என அழைக்கப்படுகிறது. சர் தாமஸ் பாட்லி (கி.பி. 1544 – 1610) என்பவர் இதன் ஸ்தாபகர்.

**13. ஸெல்டன்**

ஜான் ஸெல்டன், முதலாம் ஜேம்ஸ் மற்றும் முதலாம் சார்லஸ் ஆகியோரின் காலத்தைச்சேர்ந்த புகழ் பெற்ற வழக்கறிஞர். இவர் 'தசம பாகத்தின் வரலாறு' என்ற நூலை எழுதினார்.

**14. அஷர்**

அயர்லாந்து நாட்டைச்சேர்ந்த ஜேம்ஸ் அஷர், அர்மாக் பகுதியின் தலைமைப்பேராயர். தனது பல படைப்புகளிலும் திருச்சபை மற்றும் அரசு இரண்டிற்கும் இடையிலான உறவை எடுத்துக்காட்டுகிறார்.

**15. அல்பேனோ**

கி.பி. 13-ம் நூற்றாண்டைச்சேர்ந்த இத்தாலியின் அல்பேனோ பிரதேச பேராயரைப்போலவே தன்னையும் பார்க்கிறார்கள் என லேம்ப் குறிப்பிடுகிறார்.

**16. மாட்லின்**

கிறிஸ்து சபை மற்றும் மாட்லின், இவை இரண்டுமே கல்லூரியின் பெயர்கள்.

**17. ஜானுஸ்**

பின்புறம் ஒரு முகமும், முன்புறம் ஒரு முகமும் கொண்ட ரோமக்கடவுள்.

**18. திரித்துவம்**

பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்ற இம்மூன்றும் கிறித்தவ மதத்தின் அடிப்படைக்கோட்பாடாகும். ரிச்சர்ட் பாஸன் என்ற அறிஞர் இந்தக் கோட்பாட்டைத்தகர்க்கிறார். பார்க்க, புதிய ஏற்பாடு 1 யோவான் 5 : 7, 8.

**19. ஜார்ஜ் டையரிடம்**

இம்மானுவேல் கல்லூரியில் கற்ற அறிஞர். கேம்ப்ரிட்ஜ் பல்கலைக்கழக வரலாற்றைப்பற்றி புத்தகம் வெளியிட்டுள்ளார்.

**20. ஸ்காப்புலா**

கி.பி. 16 ம் நூற்றாண்டைச்சேர்ந்த ஜெர்மன் அறிஞர் ஜோஹேன் ஸ்காப்புலா, மிகப்பெரிய அகராதி ஒன்றைத்தொகுத்தார்.

**21. இரு பெரும் பல்கலைக்கழகங்களுடன்**

ஆக்ஸ்.ஃ.போர்டு மற்றும் கேம்ப்ரிட்ஜ் பல்கலைக்கழகங்கள்.

**22. லார் அரசியார்**

வீட்டை ஆட்சி செய்யும் பெண் கடவுள். லாரஸ் மற்றும் பெனாட்ஸ் இருவருமே, ரோம புராணத்தின்படி வீட்டுக்கான கடவுள்கள்.

**23. சோசியா**

பிளாட்டஸ் எழுதிய **'ஆம்பிட்ரியான்'** நாடகத்திலிருந்து ஒரு குறிப்பு. ஆம்பிட்ரியானின் அடிமை சோசியாவைப்போலவே மெர்க்குரி உருவம் கொள்கிறான்.

**24. தாபோர்**

நாசரேத் நகருக்குக்கிழக்கே உள்ள மலை. இங்கு தான் இயேசு ஸ்வாமி மறு ரூபம் கொண்டார் எனக்கருதப்படுகிறது. பார்க்க, மத்தேயு 17 : 1,2

**25. பர்னாஸஸ்**

கிரேக்கத்தில் போசிஸ் என்ற இடத்தில் உள்ள மலை. கவிதா தேவதைகளுக்கும், கவிதையின் கடவுளான அப்போலோ தேவனுக்கும் இது புனிதமான இடம்.

**26. ஹாரிங்டன்**

ஜேம்ஸ் ஹாரிங்டன் (கி.பி. 1611 –1677). அரசியல் எழுத்தாளர், மெய்யியல்வாதி. ஒரு கற்பனைக்குடியரசைக்குறித்து 'ஓசியானா' என்ற நூலை எழுதினார்.

**27. பாத்**

இங்கிலாந்தில் உள்ள ஒரு நகரம்.

**28. ஹேரோகேட்**

இங்கிலாந்தில் உள்ள ஒரு  நகரம்.

**29. கேம் மற்றும் ஐசிஸ்**

இவையிரண்டும் முறையே கேம்ப்ரிட்ஜ் மற்றும் ஆக்ஸ்.·.போர்டு நகரங்களில் ஓடும் நதிகள்.

**30. டமஸ்கு**

சிரியா தேசத்தின் தலைநகரம்

---------------

# 4. கிறித்தவ உறைவிடப் பள்ளி : முப்பத்தி ஐந்து வருடங்களுக்கு முன்பு [*Christ Hospital : Five and Thirty Years ago* ]

ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு வெளியிடப்பட்ட சார்லஸ் லேம்ப் எழுதிய "படைப்புகளில்" என் பழைய பள்ளிக்கூடத்தைக்குறித்த மிக உன்னதமான புகழ்ச்சி உரையை நான் காண்கிறேன். அவை 1782-ல் துவங்கி 1789-ம் வருஷம் வரை உள்ள காலகட்டத்தில் அவருக்கு எங்ஙனம் அப்பள்ளி தோன்றியதோ, அல்லது தற்போது எவ்வாறு உள்ளதோ அது பற்றியதாகும். நான் கிறித்தவப் பள்ளியில் படித்த அதே கால கட்டத்தில், என் சம காலத்தில் அவரும் அங்கு இருந்ததால், இந்த அரிதான விசித்திரம் நிகழ்ந்துள்ளது. அவருடைய பழைய துறவி மடம் குறித்த ஈடுபாட்டிற்கு நான் நன்றி சொல்லுகிறேன். அந்தக் குறிப்புகளில், ஒரு சிலவற்றைச் சாமர்த்தியமாகத்தவிர்த்து விட்டு, அப்பள்ளியைக்குறித்து எவற்றைப் புகழ்ச்சியாகச் சொல்ல முடியுமோ, அவையெல்லாம் தேடிக் கண்டுபிடித்து, திரட்டிச்சொல்லியிருக்கிறார்.

லேம்ப் என்பவர் பள்ளியில் படித்ததை நான் நினைவில் வைத்திருக்கிறேன். அவருக்கு இருந்த சில அனுகூலமான சலுகைகள் பற்றி நன்கு நினைவு கூர்ந்திட என்னால் இயலும். அச்சலுகைள் எனக்கும் என் பள்ளித் தோழர்களுக்கும் கிடைக்கவில்லை. அவரது (லேம்ப்) நண்பர்கள் நகருக்குள்ளே வெகு சமீபமாய் இருந்தார்கள். ஆதலால், எப்போதெல்லாம் அவருக்கு விருப்பம் இருந்ததோ, அப்போதெல்லாம் அவர்களைச்சென்று பார்க்கக்கூடிய விசேஷ சலுகை அவருக்கு இருந்தது. பொறாமை அடையும் அளவுக்கு இருந்த அந்தத் தனியான சலுகை, எங்களுக்கு மறுக்கப்பட்டிருந்தது.

தற்போது பள்ளியின் உள் வளாகத்திற்கு மதிப்பிற்குரிய துணைப் பொக்கிஷதாரராக இருப்பவர், இது எவ்வாறு ஏற்பட்டது என விளக்கம் அளிக்கக் கூடியவர்.

காலையில், அவர் (லேம்ப்) தேநீரும், சூடான மிட்டாய்ச்சுருள்களும் சாப்பிடும்போது, நாங்கள் ஒரு பென்னி நாணயத்திற்கு வாங்கப்பட்ட ரொட்டித் துண்டின், நான்கில் ஒரு பகுதியை 'உண்டு கொழுத்துக்' கொண்டிருப்போம். எங்கள் ரொட்டியோடு, தார் பூசப்பட்ட தோல் குடுவையின் கரி வாசம் வீச, அதிலிருந்து மரக்கெட்டிலில் ஊற்றி வைக்கப்பட்ட நீர் கலந்து நீர்த்துப்போன பியர் பானத்தை நாங்கள் பருக வேண்டும். திங்கள் கிழமைகளில் எங்களுக்குத் தரப்பட்ட பால் கலந்த பயறுக்கஞ்சி நீல நிறமாயும், சுவையற்றதாயும் இருந்தது.

சனிக்கிழமைகளில் தரப்பட்ட பட்டாணி சூப்பு நன்கு பக்குவப்படாததால், தொண்டையை அடைத்தது. ஆனால், லேம்ப் அவர்களுக்கு மட்டும் உள் வளாகத்தில் இருந்து சுடச்சுட சிறந்த ரொட்டியும், வெண்ணையும் தரப்பட்டது.

எங்களுக்கு வாரத்தில் மூன்று நாட்கள் சைவ உணவும், நான்கு நாட்கள் அசைவ உணவும் தரப்பட்டது. புதன்கிழமைகளில் தரப்பட்ட சிறுதானியக் கஞ்சி அவ்வளவு மோசமில்லை. ஆனால், லேம்ப் அவர்களுக்கு மட்டும், அதை எளிதாகச்சாப்பிட நல்ல சர்க்கரையும், ருசி கொடுக்கும் இஞ்சியும், நறுமண இலவங்கப்பட்டையும் தரப்பட்டது.

ஞாயிற்றுக்கிழமைகளில் எங்களுக்குத்தரப்பட்ட மாட்டுக்கறி அல்லது வியாழக்கிழமைகளில் மஞ்சள் சாமந்தி மிதக்கும் வாளியில் சுவை போக்கும்படி வைக்கப்பட்டிருந்த புதிதாக வெந்த (குதிரை மாமிசம் போன்ற கடினமுள்ள) மாட்டுக்கறி – அல்லது அவற்றுக்குப் பதிலாக வெள்ளிக்கிழமைகளில் தரப்பட்ட அற்பமான, எலும்புகள் மிகுந்த மாமிசம் - அல்லது அதே மாமிசத்தின் கொஞ்சம் சுவையுள்ள பகுதிகள் கெட்டுப்போய், மிகையாக வறுக்கப்பட்டு அல்லது அரைகுறையாய் வேக வைக்கப்பட்டு செவ்வாய்க்கிழமைகளில் தரப்படும். அந்த உணவு எங்கள் பசியைத்தூண்டும். அதே சமயம் வயிற்றுக்குச்சேராது. ஆனால், லேம்ப் அவர்களுக்கு மட்டும் அவரது தந்தையின் சமையலறையில் அற்புதமாய்த்தயார் செய்யப்பட்ட,

சூடான, இளம் பசுவின் மாமிசம், பெண் பணியாளர் அல்லது அவரது அத்தையால் தினசரி கொண்டு வந்து தரப்படும்.

இந்த அரிய உணவு வகைகளை நாங்கள் சுவைத்ததே இல்லை. லேம்ப் அவர்களின் வயது முதிர்ந்த உறவினர் யாராவது துறவி மடத்தின் ஏதாவது ஒரு மூலையில், கல் இருக்கையில் அமர்ந்து கொண்டு பெருமையற்ற அன்புடன், தான் கொண்டு வந்த கேக்குகளை (திஸ்பியனுக்கு[1] காகங்கள் கொண்டு வந்த அப்பங்களை விட மகிழ்வு தந்த) லேம்ப் அவர்களுக்குத்திறந்து காட்டும் போது, அவரது பொங்கும் உவகை அப்போது வெளிப்படும். கொண்டு வந்தவரிடம் அன்பு உண்டு. பெற்றுக் கொண்ட பொருளாலும், கொண்டு வந்த விதத்தாலும் வெட்கம் உண்டு. அதைப் பகிர்ந்து கொள்ளும் எண்ணிறந்த ஆட்களை எண்ணி பச்சாதாபம் உண்டு. இவை யாவற்றிற்கும் மேலாக, பசி என்ற ஒரு வலிய, பெரிய ஆக்கிரமிக்கும் உணர்வு, வெட்கம், விகாரம் மற்றும் சுய மன உணர்வுகளின் கல் வேலிச்சுவர்களைத் தகர்த்து விடும்.

அப்போது, நான் நண்பர்களற்ற ஏழை மணவன். என் மேல் அக்கறை காட்ட வேண்டிய பெற்றோர்கள் வெகு தொலைவில் இருந்தார்கள். முதன் முதலில் நான் அந்நகருக்கு வந்தபோது, அந்தப் பெருநகரில், என் பெற்றோர்களின் சொற்பமான உறவினர்கள், சிறு வலிய அறிமுகத்திற்குப் பின்பு, கருணையுடன் என்னை ஏற்றுக்கொண்டார்கள். ஆயினும், பிற்பாடு பல விடுமுறைகளில் (அவர்களது வீடுகளுக்குப் போன போது), சோர்வடைந்தார்கள். அவர்களுக்கு என் வரவு அடிக்கடி நிகழ்ந்தது போலத்தோன்றியிருக்க வேண்டும். ஆயினும், அது சில தடவைகள் தான் என்று எனக்குத்தெரிந்தது. அந்த உறவினர்கள் யாவரும், ஒருவர் பின் ஒருவராக என்னைக்கைவிட்டு விட்டனர். ஆதலால், அறுநூறு சக மாணவர்களின் மத்தியில் நான் தனித்திருப்பதாய் உணர்ந்தேன்.

ஒரு எளிய சிறுவனை, அவனது வீட்டில் இருந்து விலக்கி தூரத்தில் வைக்கும் கொடுமையை என்னென்பது?! சிறகு முளைக்காத

அந்தக்காலங்களில், என் உள்ளத்தில் இருந்த ஆசைகள் எத்தனை, எத்தனை!!

என் கனவுகளில், தொலை தூர மேற்கில் இருந்த என் சொந்த ஊர் நினைவுக்கு வருமே!! அவ்வூரின் தேவாலயமும், மக்களும், மனித முகங்களும்! நான் இரவில் கண் விழித்து, வில்ட்ஷயர் பிரதேசத்தில் இருக்கும் கான் என்ற என் இனிய ஊரை எண்ணி எப்படியெல்லாம் இருதயத்தில் துயரம் பொங்க அழுவேன்!!

இப்போதும், என் முதிர்ந்த வயதில், நண்பர்களற்ற அந்நாளின் விடுமுறைகள் விட்டுச்சென்ற நினைவுத்தடங்களை தேடிப் பார்க்கிறேன். நெடிய, வெம்மையான வேனில் காலம், அந்நாளைய முழு விடுமுறைக்கால நினைவுகளின் சோகத்தையும் சேர்ந்தே கொண்டு வருகிறது. அந்நாளில், எங்களுக்குப் போய்ச்சேர்ந்து கொள்ள வெளியில் நண்பர்கள் இருந்தார்களோ, இல்லையோ, என்பதையெல்லாம் கருத்தில் கொள்ளாது, ஒரு விசித்திர ஏற்பாட்டின்படி, எங்களையெல்லாம் நாட்பொழுதில் வெளியே ஊர் சுற்றி வர அனுப்பி விடுவார்கள்.

புது நதியில் நீராடி வரச்சென்ற பயணங்களை மனத்திருப்தியுடன் நினைவு கூரும் லேம்ப் அவர்களை விட, நான் அதி நன்றாய் அவற்றை நினைவு கூருகிறேன். ஏனெனில் லேம்ப், மனதில் வீட்டையே நாடியிருப்பவன். ஆதலால், நதி நீர் பொழுதுபோக்குகளில் அவன் ஆர்வம் கொள்ளவில்லை. எவ்வளவு குதூகலமாய் நாங்கள் வயல் வெளிகளுக்குள் சென்று வெம்மையான சூரிய ஒளியில் தோயும்படி எங்கள் உடைகளைக்களைவோம் !?!! நல்ல தண்ணீரில் துள்ளி விளையாடும் சிறு மீன்கள் போல நதி தீரத்தில் எப்படியெல்லாம் விளையாடுவோம்!!

காலை உண்ட சின்ன ரொட்டித் துண்டு ஏற்கனவே செரிமானம் ஆகி விட்டபடியால், எங்களுக்கு உச்சிப்பகல் வேளையில் பசியெடுக்கும். அச்சமயம், எங்களில் நயா பைசா கூட பையில்

இல்லாதவர்கள் பசியைத்தணிக்க வழியின்றித்தவிப்போம். எங்களைச் சுற்றியுள்ள கால்நடைகளும், பறவைகளும், மீன்களும் கூட உணவருந்திக்கொண்டிருக்கும் போது, எங்கள் பசியினை ஆற்ற வழியின்றி இருந்தோம். அந்த மிக அழகான நாள், ஓய்வு நேரத்தின் செயல்பாடுகள், சுதந்திர உணர்வு, ஆகியவை யாவும் அந்நேரம் ஒன்றாய் எங்கள் மீது அழுத்தும்!

எத்தகைய தளர்ந்த சோர்வு!! இரவு கவிழும் முன், நாங்கள் பள்ளி விடுதிக்குத் திரும்பி, நாங்கள் பசியோடு, பள்ளி உணவை அரை மனதோடும், அரை மகிழ்ச்சியோடும் உண்டு, எங்களது அசாதாரணமான விடுதலை நேரம் முடிந்து விட்டதே என்று ஏங்குவோம்!!

மழைக்காலங்களில் அது இன்னமும் மோசம். எவ்வித குறிக்கோளும் இன்றி, தெருக்களில் அலைந்து திரிவோம். இழைத்த வேலைப்பாட்டு ஓவியங்கள் விற்கும் கடைகளின் முன்பாக, குளிர்ந்த ஜன்னல்களின் அருகே நின்று கொஞ்சம் மனக்களிப்பு கொள்வோம். அல்லது வேறு வழியின்றி, இலண்டன் கோபுரத்திற்கு அருகே மிருகக்காட்சி சாலையில் உள்ள சிங்கங்களை இலவசமாய்ப் பார்வையிட, பல காலமாகவே சிறப்பு அனுமதி இருந்ததால், ஐம்பது தடவைகள் மீண்டும், மீண்டும் அங்கு செல்வோம். அதனால், அந்த மிருகக்காட்சி சாலைப்பொறுப்பாளருக்கு அங்கு உள்ள மிருகங்களின் முகங்கள் நன்கு பரிச்சயமாய் இருந்தது போலவே எங்கள் முகங்களும் நன்கு பரிச்சயப்பட்டிருந்தது.

லேம்ப் அவர்களின் பள்ளி ஆளுநர் (பள்ளியின் இலவசக்கல்வி முறைக்கு ஏற்பாடு செய்த அவரை அப்படித்தான் அழைத்தோம்), லேம்ப்பின் அப்பாவின் வீட்டில் தான் குடியிருந்தார். ஆதலால், அவர் தெரிவித்த புகார் எதுவாயினும், உடனடியாக பரிசீலிக்கப்படும். இது கிறித்தவப்பள்ளியில் புரிந்து கொள்ளப்பட்ட ஒன்று. அத்துடன், அது

ஆசிரியர்களின் கடுமைக்கும், வகுப்பின் சட்டாம்பிள்ளைகளின் கொடுங்கோன்மைக்கும் எதிரான ஒரு திரை மறைவு. இந்த இளம் கொடுமைக்காரர்களின் அடக்குமுறையை நினைவு கூர்ந்தாலே உள்ளம் அவதியுறும்.

மிகக்கடுமையான பனி பொழியும் மழைக்கால ராத்திரிகளில் என் படுக்கையிலிருந்து எழுப்பப்பட்டு, தோல் வாரினால் என் சட்டையின் மேல் அடிப்பார்கள். இது ஒரு முறையல்ல. பல தடவைகள் இப்படி நடந்தது. என்னுடன் இருந்த மற்ற பதினோரு பேருக்கும் இதே தண்டனை தான். எங்களுக்கு மேற்பார்வையாளராய் இருந்தவன், இரவில் எல்லோரும் படுக்கைக்குச் சென்ற பின், ஏதாவது பேச்சுக்குரலைக்கேட்டால், பலர் தூங்கும் அறையில் உள்ள மிகவும் இளைய வயதினருக்கு நாங்கள் படுக்கையை விரித்துத்தயார் செய்யும்படி ஏவுவான். அவர்கள் செய்த தவறு என்ன என்று கேட்டால் அதை விளக்கக்கூடிய துணிவு அவர்களுக்குத் கிடையாது. அல்லது அத்தவறை மறைத்துக்கொள்ளும் திராணியும் கிடையாது. அதே மோசமான கொடூரத்துடன், பனியின் கொடுமையில் எங்கள் கால்கள் மரத்துப்போய்க்கொண்டிருக்கும் போது, எங்களில் இளையவர்களை மூட்டிய தீ இருக்கும் இடத்தை விட்டு விரட்டி விடுவார்கள்.

இருப்பதிலேயே இரக்கற்ற தண்டனை என்பது, உறக்கமற்ற வேனிற்கால இரவுகளில், கோடை கால வெப்பத்தாலும், பகல் பொழுதின் விளையாட்டுகளாலும் சூடாகி, நாங்கள் தூக்கமற்றுத்தவித்த போது, எங்களுக்குக்குடிதண்ணீரை மறுத்ததாகும்.

அக்காலத்தில் ஹாட்ஜஸ் என்பவன் இருந்தான். அவன் ஏதோ ஒரு குற்றத்திற்காக பழைய கப்பலில் அமைக்கப்பட்ட சிறைச்சாலை ஒன்றில் தண்டனையைக்கழித்து விட்டு வெளியே வந்தவன் என்று பின்னாளில் அவனைக்குறித்துத் தெரிந்து கொண்டேன். (இவன் தான் அந்நாளில்

நெவிஸ் அல்லது செயின்ட் கிட்ஸ் தீவுகளுக்குச் சென்று இன்னலுற்றான் என்று சொல்வதில் நான் என் மேதைத்தனம் குறித்து சுயப்புகழ்ச்சி செய்து கொள்கிறேனா?! அவனைத்தூக்கு மேடைக்கு கொண்டு வருவதற்கு என் நண்பர் டோபிள் தான் ஒரு கருவியாக இருந்தார்)

இந்தக் கொடிய நீரோ, தன்னை அவமதித்த ஒரு பையனை பழுக்கக்காய்ச்சிய சூட்டுக்கோலால், மெய்யாகவே ஒரு இழுப்பு இழுத்து விட்டான். எங்களில் நாற்பது பேரிடமும், அனுதினமும், சாப்பாட்டுக்குத் தரப்பட்ட ரொட்டியில் சரி பாதியை பிடுங்கிக்கொண்டு, எங்களை கிட்டத்தட்ட பட்டினி போட்டு விட்டான். அந்த ரொட்டித்துண்டுகளை, ரகசியமாக பள்ளிக்குள் கொண்டு வந்து ஒளித்து வைத்திருந்த ஒரு கழுதைக்குக்கொண்டு போய் கொடுத்துக்கொண்டிருந்தான். அப்படி ஒரு கழுதையைப்பள்ளிக்குள்ளே கொண்டு வர, பள்ளி வளாகத்தில் உள்ள அவனது "அபிமானத்திற்குரிய" செவிலியின் மகள் உடந்தையாக இருந்தாள்.

இந்த விளையாட்டு ஒரு வாரத்திற்கும் மேலாக தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. ஆனால், அந்த முட்டாள் மிருகமோ, அந்தோ, அந்த உண்மையெல்லாம் ஏற்றுக்கொள்ளாமல், வறுத்த மாமிசம் வேண்டும் என்று கேட்கும் விதமாக (காலிகுலா[2] வைத்திருந்த வேலையாளை விட, மகிழ்வாக இருந்த போதிலும்) – தன் ஆலோசனைகளைத் தனக்குள்ளேயே வைத்துக்கொள்ளாமல், - மற்ற கதைகளில் வரும் தன்னுடைய சக தோழர்களை விடவும் நன்கு செல்லமாக வளர்க்கப்பட்டு, எட்டி உதைக்கும் சுபாவமும் கொண்டு, ரொட்டித்துண்டுகளை முழுமையாக உண்ட திருப்தியில், ஒரு துரதிருஷ்டமான நேரத்தில், தன்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தைக்கீழே உள்ள உலகுக்கு பறை சாற்றும் விதமாய், கர்ண கடூரமாய்க்கத்தியது. அது எரிக்கோவின்[3] சுவர்கள் இடிந்து விழும் வண்ணம் மறைத்து வைக்கப்பட்டிருந்த அதனுடைய பாதுகாப்பையே தகர்த்து அழித்து விட்டது.

மேற்படி கழுதை, பள்ளியை விட்டு வெளியேற்றப்பட்டு, பின்பு ஸ்மித்ஃ.பீல்டு விலங்கு சந்தைக்குக்கொண்டு போகப்பட்டது. ஆனால் அந்த விலங்கின் போஷகரை யாரும் கண்டிக்கவில்லை. லேம்ப் அவர்களுடைய மரியாதைக்குரிய பள்ளி மேற்பார்வையாளர் பெர்ரி என்பவர் இருந்த போது இது நடந்தது.

அதே திறமையான பள்ளி நிர்வாகத்தில், எங்கள் பள்ளியின் தலைமைச் செவிலி, இரவு உணவுக்காக, மிகக் கவனமாக நிறுத்து வைத்த மாமிசத்துண்டுகளில், இரண்டு துண்டுகளுக்கு ஒன்று என்ற கணக்கில் எடுத்துக் கொண்டு, செவிலிகள், பலர் அறிய பகிரங்கமாகவே திறந்த தட்டில் வைத்து எடுத்துக் கொண்டு போய் விடுவார். இதை லேம்ப் அவர்கள் மறந்திருப்பாரா? இவை யாவும் அந்த அற்புதமான கட்டிடத்தில் தினசரி நிகழ்ந்தவை. (ஆனால், அச்சமயத்தில் லேம்ப் அவர்கள் நல்ல கலாரசிகராக மாறி விட்டார் என எண்ணுகிறேன்). ஆதலால், அவர் அப்பள்ளியின் சுவர்களை அலங்கரித்துத்தொங்கிய வெர்ரியோ[4] மற்றும் இதர நபர்கள் வரைந்த கம்பீரமான ஓவியங்களை மிகவும் புகழ்கிறார். ஆனால், போஷாக்கான, மின்னுகின்ற கருநீல மேல்கோட்டு அணிந்த மாணவர்கள் தோன்றும் ஓவியங்கள், அக்கால கட்டத்தில் அவருக்கு கொஞ்சம் ஆறுதலைத் தந்திருக்க வேண்டும். ஆனால், எங்களுக்கோ, எங்கள் கண் முன்னே எங்களுக்கு உரித்தான பெரும்பாலான உணவுப்பொருட்கள் காகங்கள் போலே சிலரால் கடத்தப்பட்டு, கொண்டு செல்லப்படுவதை பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும். நாங்கள் அந்த அறையில் இருந்த ட்ரோஜன் போர் ஓவியங்களில் இருந்த ட்ரோஜன் உருவங்களைப் போல் செயலற்று (வெறும் பார்வையாளராய் இருப்போம்).

**'மனத்தை சலனமற்ற காட்சிகளால் நிரப்புதல்[5]'**

லேம்ப் அவர்கள் புதிதாய் வேக வைக்கப்பட்ட மாட்டு மாமிசத்தின் கொழுப்பு துண்டுகளைக்குறித்துத் தனக்கு இருந்த வெறுப்பைக் குறிப்பிடுகிறார். அதை ஒரு மூட நம்பிக்கையோடு தொடர்புபடுத்திப்

பார்க்கிறார். ஆனால், அந்த வெறுப்புண்டாக்குகிற உணவு, சிறு பிள்ளைகளுக்கு எப்போதும் திருப்தி தருவதில்லை. உலகம் முழுவதுமே பிள்ளைகள் கொழுப்பு உணவை வெறுக்கிறார்கள். அதிலும், கடினமான, பதமாகாத, வேக வைத்த, உப்பிடாத மாமிசம் மிகவும் வெறுக்கத்தக்கதே.

எங்கள் காலத்தில், கொழுப்பு நிறைந்த கழிவு மாமிசத்தை உண்பவன் பிணம் தின்னும் பிசாசிற்குச்சமமாகக் கருதப்பட்டான். அத்துடன் வெறுக்கப்பட்டான்.

**'அவன் விசித்திரமான மாமிசம்**
**உண்டதாகச் சொல்லப்படுகிறது! [6]'**

என்ற ரீதியில் அவன் மேல் குற்றம் சாட்டப்பட்டது.

எங்கள் உணவு விடுதியில், இரவு உணவு முடிந்த பின், மேசையின் வெளியே சிந்தியுள்ள மாமிசத்துண்டுகளை ஒருவன் மிகக் கவனமாக விசேஷமாகச்சேகரித்து, (அவை அதிகமில்லை, கொஞ்சம்தான். என்னை நம்புங்கள். நல்ல தேர்ந்த மாமிசத்துண்டுகளுமில்லை). அந்த இழிந்த மாமிசங்களை ரகசியமாகக்கொண்டு சென்று, தன் படுக்கைக்கு அருகே உள்ள பெட்டிக்குள் ரகசியமாக வைத்து விடுவான். அவன் அதைச்சாப்பிட்டு யாரும் பார்த்ததில்லை. இரவு நேரத்தில் அவன் அவைகளை விழுங்குவதாக வதந்தி பரவியது.

அவனை நன்கு உளவு பார்த்ததில், அத்தகைய நள்ளிரவு நடவடிக்கைகள் எதுவும் காணப்படவில்லை. விடுமுறை நாட்களில், பெரிய நீல நிறக்கைக்குட்டையில், ஏதோ பெரிய மூட்டையாகச்சுமந்து கொண்டு, அவன் சென்றதாகச்சிலர் தகவல் சொன்னார்கள். ஆக, இதுவே அந்தப் பாவமான காரியம் என முடிவானது. அப்படிக்கொண்டு சென்ற கழிவு மாமிசங்களை அவன் என்ன செய்தான் என்று ஊகங்கள் எழுந்தன. அவன் அவைகளைப்பிச்சைக்காரர்களுக்கு விற்று விட்டதாகச்சிலர் சொன்னார்கள். இந்த நம்பிக்கையே பொதுவாக நிலவியது. ஆனால், அவனோ தொடர்ந்து சிந்தும் உணவைப் பொறுக்கிக் கொண்டிருந்தான். யாரும் அவனிடம் பேசவில்லை. யாரும்

அவனுடன் விளையாடவில்லை. அவன் பள்ளிச்சமூகத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டான். அவன் நல்ல பலமுள்ள பையனாய் இருந்ததால் அவனை அடிக்க முடியவில்லை. ஆனால், எல்லாவிதமான எதிர்மறையான தண்டனைகளையும் அவன் தாங்கிக்கொண்டான். அது சவுக்கால் விளாருவதை விடத் துயரமானது. இருப்பினும், அவன் தாங்கிக் கொண்டான். ஒரு விடுமுறை நாளில், அவனது ரகசிய நடவடிக்கையைக்கண்டறிய இருவர் அவனைப்பின்தொடர்ந்தனர்.

சான்ஸரி வீதியில் வெவ்வேறு விதமான தரித்திரர்களுக்குத் தரப்பட்டிருப்பது போன்ற கட்டிடங்களில் ஒன்றைப்போல உள்ள ஒரு மிகப்பெரிய சிதிலமடைந்த கட்டிடத்தின் திறந்த கதவுகளின் உள்ளே அவன் நுழைவதையும், அதன் பின் பொதுவான மாடிப்படிகளின் வழியாக நான்காவது மாடிக்கு மேலேறிச்செல்ல, அவனை ரகசியமாகப் பின்தொடர்ந்தார்கள். அவன் அங்கு இருந்த சிறு கதவு ஒன்றைத் தட்டியவுடன், அதைத் திறந்த ஒரு வயதான பெண், மிகக்குறைவாகவே உடலை மறைத்துக்கொண்டிருந்ததையும் கண்டார்கள். சந்தேகம் இப்போது உறுதி செய்யப்பட்டு விட்டது. ஒற்றர்கள் தங்கள் ஆளைப் பிடித்துவிட்டார்கள். அவர்களின் கஷ்டத்திற்குப்பின் அவனைப்பிடித்து விட்டார்கள்.

குற்றச்சாட்டுகள் வனையப்பட்டன. தண்டனை உறுதி என்பதற்கு அறிகுறிகள் இருந்தன. என் பள்ளிப்பருவம் முடிந்த சிறிது காலத்திற்குப் பின்பு நடந்த இச்சம்பவத்தின் போது இருந்த மேற்பார்வையாளர் திரு ஹாத்தவே அவர்கள், தன் அணுகுமுறை அனைத்தையும் பொறுமையுள்ள விவேகத்துடன் செயல்படுத்தும் அவர், இந்த விஷயத்தில் தீர்ப்பு அளிப்பதற்கு முன் தீர விசாரிப்பது என்ற முடிவுக்கு வந்தார்.

அதன் விளைவாக, அந்தக் கழிவு உணவுகளைப்பெற்ற அல்லது விலைக்கு வாங்கிய பிச்சைக்காரர்கள் இருவரும் அந்த ---------------------

என்பவனின் பெற்றோர் எனக் கண்டறியப்பட்டது. மிகவும் நேர்மையான வாழ்க்கை வாழ்ந்த அந்தத் தம்பதியினர் வறுமையால் கீழான நிலைக்கு வந்து விட்டனர். அவர்கள் மோசமான பிச்சையெடுக்கும் நிலைக்குப் போகாததற்குக்காரணம், இந்த மகன் என்னும் கொக்கு, தன் எல்லா அவமானங்களையும் தாங்கிக்கொண்டு, இத்தனை காலமும் அந்த முதிய, பறவைகளை காப்பாற்றி வந்தது தான். உடனடியாக, பள்ளியின் ஆளுநர்கள், அந்தப் பையனை கௌரவிக்கும் முகமாக அவனது குடும்பத்திற்கு உடனடியாக ஒரு நிவாரணத்தொகையைக் கொடுத்தனர்.

அவனுக்கும் ஒரு வெள்ளிப்பதக்கம் பரிசளிக்கப்பட்டது. அந்த வெள்ளிப்பதக்கத்தை வழங்கும் தினத்தில், பள்ளியின் மேற்பார்வையாளர் தெரிவித்த நீதி அறிவுரை அந்தப் பையனின் காதுகளை விட்டு அகலவே அகலாது. அந்தச்சமயத்தில், நான் பள்ளியை விட்டு விலகி விட்டேன். அவன் மிகவும் அவலட்சணமான இளைஞன். அவனைப்பற்றிய எந்த விதமான தவறான அபிப்ராயத்தையும் நீக்குகிற எண்ணம் கொஞ்சம் கூட அவனிடம் இல்லை என்பதை அவன் பார்வையால் தெரிவித்தான். அவன் ரொட்டிக்கூடையை வலியச்சுமந்ததில், அவனது பெற்றோர்கள் வெற்றி பெற்றதைப்போல அவன் வெற்றி பெற இயலவில்லை.

தனக்கு நோய் உள்ளதென பொய்யாய் நான் நம்புபவன். நான் முதலில் கருநீல உடை அணிந்து முதல் நாள் அன்று இயற்கையான ஆரம்ப பயத்துடன், பள்ளிப்படிப்பிற்குத் தயாராகும் நாளில், என் கண்ணெதிரே ஒரு பையனின் கைகளில் விலங்கிடப்பட்ட போது, எனக்கு ஏற்பட்ட பயம் கொஞ்சமும் மட்டுப்படவில்லை. நான் வெறும் ஏழு வயதே அடைந்த இளம் பருவத்தில், அத்தகைய விஷயங்களையெல்லாம் புத்தகங்களில் மட்டுமே படித்துள்ளேன். அல்லது அவைகளை என் கனவில் மட்டுமே கண்டுள்ளேன். அவன் பள்ளியை விட்டு ஓடிப்போனவன் என்று எனக்குச்சொல்லப்பட்டது. அந்த முதல் குற்றத்திற்கு இதுவே தண்டனை.

பிற்பாடு, இருளான சிறைக்கொட்டடி எப்படி இருக்கும் என்று எனக்குக்காட்டுவதற்காக அங்கு கொண்டு செல்லப்பட்டேன். மனநோய் மருத்துவமனையில் உள்ள அறைகளில் உள்ளது போன்ற சிறிய படுக்கைகள் இருந்தன. வைக்கோல் பொதியின் மீது உள்ள ஜமுக்காளத்தில், ஒருவன் மாத்திரம் படுத்துக் கொள்ள முடியும். பிற்பாடு, அங்கு அதற்குப்பதிலாக மெத்தை தரப்பட்டது. அந்தச்சிறையின் மேலே உள்ள சிறு துவாரத்தின் வழியே சாய்வாக வெளிச்சம் அந்த அறையில் விழும். அந்த வெளிச்சத்தில் புத்தகம் வாசிக்க மட்டுமே முடியும். இங்கே தண்டனை பெற்ற பள்ளி மாணவன் நாளெல்லாம் அடைத்து வைக்கப்பட்டான். அவன் வேறு யாரையும் பார்க்க முடியாது. சிறைக்காவலாளி மட்டும் ரொட்டியும், தண்ணீரும் கொண்டு வந்து தருவான். ஆனால், அவன் அந்தப்பையனிடம் எதுவும் பேச மாட்டான். வாரமிருமுறை அந்த அறைக்கு வரும் பாதிரி ஒருவர், அவனைக் கூப்பிட்டு அவனுக்குத்தர வேண்டிய தண்டனையைத் தருவார். அது அவனுக்கு நல்ல நிவாரணம் போல. ஏனென்றால், அவனது தனிமையின் கொடுமையிலிருந்து கொஞ்ச நேரம் அது அவனை விடுவிக்கும்.

எந்த விதமான வெளிச்சப்தங்களும் கேட்காத அளவுக்கு, அவன் இந்த இடத்தில் இரவுகளைக்கழிக்க வேண்டும். அவனது பலவீன உணர்வுகளாலும், மூட நம்பிக்கைகளாலும், அவனைத் திகிலூட்டும் எதுவானாலும், அதில் அவன் கஷ்டப்பட வேண்டும். இதுவே இரண்டாம் தடவை தவறு செய்பவனுக்குத்தரப்படும் தண்டனை.

வாசகரே, அடுத்த (மூன்றாம்) தடவை தவறு செய்பவனுக்கு என்ன ஆகிறது என்று பார்க்க விரும்புகிறீரா?

ஒரு குற்றவாளி, மூன்றாம் தடவை குற்றம் இழைத்து, அவன் பள்ளியை விட்டு நீக்கப்படுவது கிட்டத்தட்ட தவிர்க்கவே இயலாது என்ற நிலை வந்து விட்ட போது, அந்தப் பையன் எல்லோர் முன்னிலையிலும் கொண்டு வரப்பட்டு, உயிரோடு மரத்தூணில் வைத்துக் கட்டி எரிக்கப்படும் தண்டனையைப்போல, அவனது கருநீல உடைகள் யாவும் அகற்றப்பட்டு, இலண்டன் நகரின் தெருவிளக்குக் கம்பத்தில்

விளக்கேற்றுபவர்கள் அணிவதைப்போல, மிக மோசமான, விகாரமான உடைகளும், அதே போல் ஒரு தொப்பியும் அவனுக்கு அளிக்கப்படும். இந்த உடை அகற்றும் நிகழ்வின் விளைவுகள், அந்த நிகழ்வினை வடிவமைத்த மேதாவிகள் எதிர்பார்த்த வண்ணமாகவே அமைந்தது.

கிலி பிடித்த, வாடிப்போன முகத்துடன் ஒருவன் அப்படிக்காட்சி தரும்போது, கவிஞர் தான்தே[7] சித்தரித்த விஷயங்கள் அவனையும் தொற்றிக்கொண்டதோ என்று தோன்றும். இந்த உருவச்சிதைவுடன், அந்தப்பையன் (லேம்ப் அவர்களுக்குப்பிடித்தமான மிடுக்கான) அரங்கிற்குக்கொண்டு வரப்படுவான்.

அவனுக்காக அவனது சக வகுப்புத்தோழர்கள் காத்துக் கிடப்பார்கள். இனி, அவன் அவர்களோடு இணைந்து பாடம் படிப்பதோ, விளையாடுவதோ நடக்காது. பள்ளி மேற்பார்வையாளரின் அதிர்ச்சி தரக்கூடியதான பிரசன்னம் தோன்றுவது இதுவே கடைசித்தடவை. தண்டனையை நிறைவேற்றுபவர் அதற்கான ராஜாங்க உடையில் தோன்றுவார். இந்நிகழ்ச்சிக்கெனவே, கொடிய வருகையாக, பள்ளியின் இரண்டு ஆளுநர்கள் வந்திருப்பார்கள். இத்தகைய விளிம்பு நிலைத் தருணங்களில் மட்டுமே தோன்றக்கூடியவர்கள் அவர்கள்.

விருப்பத்துடனோ அல்லது பள்ளியின் சாசன விதிகளின்படியோ அந்த இரு ஆளுநர்கள், அந்த "இறுதி தண்டனை" நிகழ்ச்சியில் அலுவல் பூர்வமாகக்கலந்து கொள்ளுவர். அது தண்டனையைக் குறைப்பதற்கு அல்ல. மாறாக அதிகபட்சமான தண்டனையைத் தருவதற்காக என்று மட்டும் அறிந்து கொண்டோம். அந்தக்காலத்தில் பேம்பர் கேஸ்கான் என்பவரும், பீட்டர் ஓபர்ட் என்பவரும், ஒரு தடவை இந்த தண்டனை நிகழ்வு நடந்த போது, சக ஊழியர்களாக இருந்தனர். இந்த மிக மோசமான தண்டனை வழங்கப்படும்போது, அதிகாரியாய் இருந்தவர் அதைப்பார்த்து சோர்வு அடைந்த போது, ஒரு கிண்ணம் பிராந்தி அவருக்கு வரவழைத்துத்தரப்பட்டது.

ரோமாபுரியில், ராஜரீகமாக, நெடிதாக தண்டனை தரப்பட்டது. சவுக்கடி தண்டனை எந்த அளவிற்கு உடல் ரீதியாகத்துன்பம் இழைத்தது என்பது குறித்து எங்கள் கண்களால் கண்டவற்றைத் துல்லியமாகத்தகவல் தெரிவிக்குமாறு எங்களுக்குச் சொல்லப்பட்டிருந்தது. ஆனால், தண்டனை தருவதற்கு முற்பட்ட வெறுப்புண்டாக்கும் சூழ்நிலையைக் காண்பது மயக்கமே உண்டாகும்படி இருந்தது. முதுகு மிகவும் கடினப்பட்டும், சிவந்தும் போயிருந்தது என்று நாங்கள் அறிக்கை தந்தோம். சவுக்கடி தண்டனை முடிந்ததும், அந்த மாணவனுக்கு, பிசாசு உருவங்கள் வரையப்பட்ட மஞ்சள் அங்கி அணிவிக்கப்படும். அவனுக்கு ஏதாவது நண்பர்கள் இருந்தால், அவர்களிடம் அவன் ஒப்படைக்கப்பட்டான்.

(ஆனால், பொதுவாக இந்த பரிதாபகரமான ஓடிப்போன பையன்களுக்கு நண்பர்கள் இருப்பதில்லை) அல்லது திருச்சபை அதிகாரியிடம் அவன் ஒப்படைக்கப்பட்டான். அவரோ, வாசல் கதவுக்கு வெளியே அவனை ஒதுக்கி விடுவார்.

எங்கள் பள்ளிச்சமூகத்தின் சந்தோஷத்தைக்கெடுக்கும் வகையில், இந்த அதிகார தோரணையுள்ள வேடிக்கைகள் அடிக்கடி நிகழ்த்தப்பட்டதில்லை. எங்களுக்கு பள்ளிக்கூடம் முடிந்ததும் ஏராளமாக படிக்க வேண்டியதும், பொழுதுபோக்கும் இருந்தது. என்னைப்பொறுத்தவரை அவைகளைத் தவிர வேறெவற்றிலும் நான் மகிழ்ந்திருந்ததில்லை என்று ஒப்புக்கொள்வேன்.

மேல்நிலை மற்றும் கீழ்நிலை செம்மொழி வகுப்புகள் ஒரே அறையில் நடத்தப்பட்டன. அந்த வகுப்புகளை ஒரு கற்பனைக்கோடு மட்டும் பிரித்தது. பிரினீஸ் நதியின் இருபுறங்களிலும் இருந்த மக்களின் குணாம்சத்தில் வித்தியாசம் இருந்தது போலவே, இரு வகுப்பு மாணவர்களின் குணாம்சத்திலும் வித்தியாசம் இருந்தது. மேல் வகுப்பின் ஆசிரியர் போற்றத்தக்க ரெவ. ஜேம்ஸ் பாயர் அவர்கள்.

ஆனால், போற்றத்தக்க ரெவ. மேத்யூ ஃபீல்ட் அவர்கள் முன்னின்று போதித்த வகுப்பில் ஒரு மாணவராக அமர்ந்திருக்கும் அதிர்ஷ்டம் எனக்குக்கிட்டியது.

நாங்கள் பறவைகளைப்போன்ற கவலையற்ற வாழ்க்கையை வாழ்ந்தோம். நாங்கள் கதைத்தும், எங்கள் இஷ்டம் போல் இருந்த போதும், எங்களை ஒருவரும் ஊறு செய்யவில்லை. நாங்கள் இலத்தீன் இலக்கணத்தில் உவமை உருபுகள் பற்றிய ஒரு புத்தகத்தை ஒரு பெயருக்காக கையில் வைத்துக் கொண்டிருந்தோம். அப்புத்தகம் எங்களை ஒரு தொந்தரவும் செய்யவில்லை. நாங்கள் செயப்பாட்டு வினையில் வரும் வினைச்சொற்களை முழுதும் கற்றுக்கொள்ள இரண்டு வருடங்கள் எடுத்துக் கொண்டோம். அதன் பின்பு, நாங்கள் கற்றவைகளை மறக்க இன்னும் இரண்டு ஆண்டுகள் எடுத்துக் கொண்டோம். எப்போதாவது, கற்ற பாடத்தை நாங்கள் ஒப்புவிக்க வேண்டியிருக்கும். அப்போது நாங்கள் சரி வரப் படித்து ஒப்பிக்காவிட்டால், எங்கள் தோள்பட்டையில் லேசாக ஒரு தட்டு விழும். (அது ஒரு சிறு பூச்சியை விரட்டப்போதுமானது). அதுவே மொத்த தண்டனையும். ரெவ. மேத்யூ ஃபீல்ட் அவர்கள் பிரம்பைப் பயன்படுத்தியதே இல்லை.

உண்மையில், அந்தப் பிரம்பை எந்தவிதமான உயரிய நல்லெண்ணத்துடனும் பயன்படுத்தவில்லை. நடனமாடுபவர் கையில் ஒரு குச்சி வெறும் அலங்காரப்பொருளாய் இருப்பது போல, அவரது கையில் பிரம்பு அதிகாரப்பிரயோகத்திற்கான கருவியாக இல்லாமல், வெறும் அடையாளம் போலவே இருந்தது. அதை வெறும் அடையாளம் போல பயன்படுத்துவதற்கும் அவர் வெட்கப்பட்டார்.

அவர் எதையும் இயல்பாய் எடுத்துக் கொள்ளும் நல்ல மனிதர். தன் மன அமைதி கூட சலனமடையாமல் கவனமாகப்பார்த்துக் கொண்டார். இளம் சிறுவர்களின் நேரத்தைக்குறித்து பெரிதும் அக்கறை செலுத்தாதவர் அவர். எப்பொழுதாவது அவர் எங்கள் மத்தியில் வருவார். பெரும்பாலும் நாள் முழுதும் எங்களை விட்டு விலகியே

இருப்பார். அவர் எங்கள் மத்தியில் வந்தாலும் எங்களுக்கு அது ஒன்றும் பெரிய வித்தியாசமாகத் தெரியவில்லை.

ஓய்வெடுப்பதற்காக தனி அறை அவருக்கு உண்டு. நாங்கள் அதிகமாகச் சத்தம் போடும் போதெல்லாம் அந்த அறைக்குச் சென்று கொஞ்ச நேரம் இருப்பார். எங்களது களிப்பும், கூச்சலும் தொடரும். நாங்கள் படிப்பதற்கு எங்கள் மத்தியில் புழங்கிய செம்மொழி இலக்கியங்கள் இருந்தன. எனவே, துடுக்கான கிரேக்கம் மற்றும் கர்வமுள்ள ரோமாபுரி (இலத்தீன்) ஆகியவைகள் இன்றி, கௌரவ கேப்டன் ராபர்ட் பாயில் அவர்களது சாதனையைச்சொல்லும் பீட்டர் வில்கின்ஸின்[8] கதைகள் எங்களிடம் இருந்தன. அல்லது நாங்களே இயந்திர, விஞ்ஞானக்கருவிகளை உண்டு பண்ணினோம். காகிதங்களைக்கொண்டு சூரியக்கடிகாரம் தயார் செய்தோம். அல்லது கை விரல்களுக்கிடையில் மெல்லிய நூலிழைகளைக்கட்டி தொட்டில் போன்ற பின்னல் வேலை செய்தோம். அவைகளை 'பூனைத் தொட்டில்கள்' என்றோம்.

காற்றை ஊதி, மெல்லிய தகரக்குழாயின் முனையில் உலர்ந்த பட்டாணியை நடனமிட வைத்தோம். அல்லது பெரிதும் புகழப்பட்ட 'ப்ரெஞ்ச் மற்றும் ஆங்கில[10] விளையாட்டை விளையாடினோம். நாங்கள் நேரத்தைப்போக்குவதற்கென்று எங்களுக்கு நூறு விதமான கருவிகளும், வகைகளும் இருந்தன.

ரூசோ அல்லது ஜான் லாக்[11] அவர்களின் ஆன்மாக்கள் எங்களைக் கண்டிருந்தால் மகிழும் வண்ணம், பயன்பாடு மற்றும் மகிழ்ச்சி என இரண்டும் ஒருங்கே தரக்கூடிய விதத்தில் விளையாட்டுக்கள் இருந்தன.

மேத்யூ ஃபீல்ட் அவர்களை, நாகரீகக் கனவான், அறிஞர் மற்றும் கிறித்தவர் என்ற மூன்று குணாம்சங்களையும் சம அளவில் தன்னிடத்தே கொண்டிருந்த அடக்கமான மதகுரு என்ற ரகத்தில் சேர்க்கலாம். ஆனால், இந்தக் கலவையில் எப்படி முதலாவது குணாம்சம் பெரிய அளவில் இருந்தது என்று நான் அறியேன். அவர்

மகிழ்வு தரும் விருந்துகளில் கலந்து கொள்வார். அல்லது எங்களைக் கவனிக்க வேண்டிய நேரத்தில், அவர் பிஷப் அவர்களை மிகப் பணிவோடு வரவேற்பதில் ஈடுபட்டிருப்பார். தன்னுடைய முதல் நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் செய்த கல்விப்பணியில், அவர் நூறு சிறுவர்களுக்குப்பொறுப்பாளராக இருந்தார்.

அவருடைய அதிகபட்ச அறிவு வெளிப்பாடு என்பது ஃபேட்ரஸ்[12] என்பவருடைய கதைகளின் துவக்க அறிமுகங்களில் முதல் இரண்டு அல்லது மூன்று கதைகளைத்தாண்டாது. இந்த விஷயங்கள் இப்படியே தொடர்ந்து வருவது எப்படி என என்னால் எண்ணிப்பார்க்க இயலவில்லை. இந்தத் தவறுகளை எல்லாம் சரி செய்தது பாயர். எப்போதும், தன்னுடைய எல்லைகளைக்கடந்து பிற விஷயங்களில் தலையிடுவதில் ஆர்வம் காட்டுபவர்.

அவர் பள்ளியை விட்டு விலகும் தருணத்தில், நாங்கள் அவரிடம் காட்டிய அணுகுமுறையைக்கண்டு, அவர் சங்கடப்பட்டிருக்க வேண்டும். இளம் ஸ்பார்ட்டன்களுக்கு, ஹீலாத்துகள் போல[13] நாங்கள் இருந்தோம். சில சமயங்களில், அவர் கீழ் வகுப்பில் உள்ள ஆசிரியரிடம் பிரம்பை வாங்கி வரும்படி ஒரு மாணவனை அனுப்பும்போது, அதில் முரண்பாட்டுடன் கூடிய "மரியாதை" தெரியும். அத்துடன் அவர் ஒரு நையாண்டியான சிரிப்புடன், மேல் வகுப்பு மாணவன் ஒருவரிடம் "இந்த பிரம்புக் குச்சிகள் எவ்வளவு சுத்தமாயும், புதிதாயும் உள்ளன!" என்று குறிப்பிடுவார்.

சோபை இழந்த அவரது மாணவர்கள் ஸெனோஃபான் மற்றும் பிளாட்டோ[14] ஆகியவைகளை மண்டையை உடைத்துக்கொண்டு படித்துக் கொண்டும், ஸாமியர்களைப்[15] போலவே ஆழ்ந்த அமைதியைக் கடைப்பிடித்துக்கொண்டும் இருந்த போது, நாங்களோ, எங்களது சிறிய கோசேன்[16] தேசத்தவர்களைப் போல எங்கள் சௌகரியப்படி இன்பமாய் இருந்தோம். அவருடைய ஒழுக்க நெறிகளின்

ரகசியம் குறித்து நாங்கள் அறிய முற்பட்ட போது, அதற்கான வாய்ப்பு சரி வர அமையவில்லை.

(ரெவ. ஜேம்ஸ் பாயர்) அவர்களின் இடி முழக்கம் எங்களை ஊறு செய்யவில்லை. அவரது புயல்கள் எங்களை நெருங்கி வந்தன. ஆனால், அவை எங்களைத்தீண்டவில்லை. அது கிதியோனின்[17] அற்புதத்துக்கு மாறாக இருந்தது. எங்களைச்சுற்றி இருந்தவர்கள் நனைந்து கொண்டிருந்தபோது, எங்கள் தோல் காய்ந்து இருந்தது. அவருடைய (ரெவ. பயர்) மாணவர்கள் சிறந்த அறிஞர்களாக உருவானார்கள். நாங்கள் இதமான மனோநிலையில் இருக்கின்ற சலுகையைப்பெற்றோம். அவருடைய மாணவர்கள் அவரைக்குறித்து நன்றி பாராட்டும்போது, அச்சம் ஏற்படுவதைத்தவிர்க்க இயலவில்லை.

ஃபீல்ட் அவர்களைக்குறித்த நினைவுகள் வரும்போது, இதமூட்டும் சோம்பலான பிம்பங்கள் தோன்றுகின்றன. வேனில் கால ஆழ்ந்த உறக்கங்கள், விளையாட்டு போன்றதான பணி, அப்பாவித்தனமான, கள்ளங்கபடமற்ற சோம்பேறித்தனம். சுவர்க்கம் போன்ற சுகபோகம், அத்துடன் வாழ்வே ஒரு "விளையாட்டுப் போக்கான விடுமுறை"[18].

நான் ஏற்கனவே சொன்னது போல், ரெவ. பயர் அவர்களின் அதிகார எல்லையை விட்டு நாங்கள் விலக்கி வைக்கப்பட்டிருந்தாலும், அவருடைய செயல் அமைப்பு குறித்து கொஞ்சம் தெரிந்து கொள்ள ஏதுவாய் அவருக்கு அருகே இருந்தோம். அங்கு ஊலூலாந்தஸ் சத்தமிடுவதையும், டார்டாரஸையும், அவ்வப்போது கண்டோம். ஜேம்ஸ் பாயர் அவர்கள் உக்கிரமான கல்விச்செருக்கு கொண்டவர். அவரது ஆங்கிலம் கிட்டத்தட்ட பழங்குடியினர் பேசுவது போல இருக்கும். அவர் அவ்வப்போது இயற்றிப்பாடிய ஈஸ்டர் கீதங்கள், நாராசமாய்க் கிரீச்சிடும் குழல் வாத்தியக் கருவிகள் போல இருக்கும். அவர் நன்கு மனம் விட்டுச் சிரிப்பார். ஆனால், அது கவிஞன் ஃப்ளாக்கஸ், ரெக்ஸ் என்ற வார்த்தையை வைத்து சிலேடையாய்ப்பாடியது போல இருக்கும்.

அல்லது மத ஆசாரவாதியின் முகம் கடுமையாக இருப்பது போல இருக்கும். அல்லது கவிஞர் டெரன்ஸ் சொன்னது போல

**'கண்ணாடியில் உற்றுப் பார்ப்பது போல**
**மனிதர்களின் வாழ்வை உற்று நோக்குதல் '**

சிறிய நகைச்சுவை மூலமாக ஏதாவது முயன்றாலும், அவரது முகத்தை இளக்கித்திறந்து அதில் புன்னகையைக்கொண்டு வர இயலாது. அவரிடம் இரண்டு தலை விக்குகள் இருந்தன. இரண்டுமே கல்விச்செருக்கு உள்ளவை. ஆனால், இரண்டுமே அவரது மன நிலையை முன்னறிவிப்பு செய்வதில் வித்தியாசப்பட்டவை. ஒரு தலை விக்கு, நல்ல சுப தினம் என்பதற்கு அடையாளம். மற்றொன்று, நிறமற்றது. ஒழுங்காக அமைக்கப்படாமலும், வாரி சீரமைக்காமல் முரட்டுத்தன்மையோடும், ஒரு ரத்தம் தோய்ந்த மரண தண்டனையை நிறைவேற்றுவதைக்குறிக்கும். அவர், உணர்ச்சி ததும்பும் அந்த விக்கை அணிந்து வந்தால், அன்றைய தினத்தில் பள்ளிக்கூடத்தில் யாவருக்கும் துன்பம் தான். எந்த ஒரு வால் நட்சத்திரம் கூட, அவரது தலை விக்கைப்போல, பின் வருவது குறித்து முன் உரைக்க முடியாது.
ஜேம்ஸ் பாயர் அவர்களின் கை முரட்டுக்கை. தன் உதடுகளில் தாயிடம் அருந்திய பால் கூட உலர்ந்திடாத ஒரு பையனிடம் தன் கை முஷ்டியை இரட்டையாக மடக்கி, 'ஏ அற்பனே! என்னிடமா உன் அறிவைப் பிரயோகம் செய்ய எண்ணினாய்?' என்று மிரட்டுவதைப் பார்த்திருக்கிறேன்.

தன்னுடைய அறையிலிருந்து அல்லது நூலகத்திலிருந்து வெளியேறி வகுப்பறையில் திடீரென்று தலையை நுழைத்து, ஆவேசமாய்ச்சுழலும் கண்களுடன், ஒரு சிறுவனைப்பார்த்து 'தேவன் என் ஜீவனாய் இருப்பதனால் உனக்குச்சொல்லுகிறேன்! '(இது அவருக்குப் பிடித்தமான பிரமாணம்).' உன்னைச்சவுக்கால் அடிக்க எனக்குப்பெருத்த எண்ணமுண்டு', என்று உறுமி விட்டு, பிறகு திடீரென்று பின்வாங்கி, தனக்கு ஒதுக்கப்பட்ட அறைக்குச் சென்று

விடுவார். அவர் எதற்காக அப்படி மிரட்டினார் என்பது சம்பந்தப்பட்ட மாணவனைத் தவிர எல்லோருக்கும் மறந்திருக்கும். பிறகு, சிறிது நேரம் கழித்து மீண்டும் தலையை உள்ளே நுழைத்து, ஏதோ ஒழுங்கற்ற அறிவை செம்மை செய்து கொண்டது போலவும், சாத்தானுடைய பிரசங்கத்தின் கோபம் தெறிக்கும் சப்தம் போல, 'ஆம், நான் அவ்வாறு செய்வேன்' என்று மிரட்டுவார்.

சில நல்ல சாந்தமான மன நிலை உள்ள தருணங்களில், அவரது நெருப்பு போன்ற கோபம் குறைந்து, மிக விசித்திரமாக, பாராளுமன்ற விவாதங்களின் அறிக்கைகளை வாய் விட்டுப் டித்துக் கொண்டே, ஒரு பையனை சிறு சவுக்கால் அடித்துக் காண்டும், மறுபடி ஒரு பத்தியை வாசித்து விட்டு, மறுபடி சவுக்கால் அடித்துக் காண்டும் இருப்பார் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

அந்நாளில் எமது பிரதேசத்தில், பாராளுமன்ற உரைகள் மிகவும் புகழ் பெற்று, உச்சத்தில் இருந்தது. அவ்வாசிப்புக்கள் பொறுமையாகக்கேட்பவர்களுக்கு, மங்கிப்போன வசீகரமான உரை வீச்சுக் கலையினைப்பற்றி மரியாதையோடு புகழ்ந்து பேசுவதற்காகச் செய்யப்பட்டதல்ல.

ஒரு முறை, ஒரே ஒரு முறை, ஜேம்ஸ் பாயர் அவர்களுடைய கையிலிருந்து உயர்ந்த பிரம்பு செயல்படாமல் கீழே வந்தது. அப்போது மாறுகண் பார்வையுடைய வெ…. என்பவன் ஆசிரியரின் மேசையின் உட்புறத்தைத்திறந்து ஏதோ செய்து விட்டான். அந்த மேசையை வடிவமைத்த தச்சர், அந்தச்செயலுக்காக அதை அப்படி வடிவமைக்கவில்லை. எனவே வெ… என்ற அம்மாணவன், தான் செய்த செயல் குறித்து, தனக்கு விதிகள் பற்றிய முன்னெச்சரிக்கை எதுவும் செய்யப்படவில்லை என்று மிகத்தெளிவாக விளக்கம் சொன்னான். இந்த விஷயத்தில், இதற்கு முன்பு வாய்மொழியாகவோ அல்லது பகிரங்கப்படுத்தப்பட்டதாகவோ, ஒரு சட்டம் எதுவும் நேர்த்தியான முறையில் இல்லாமல் இருப்பதாக ஆசிரியர் உள்பட சகலருடைய

மனங்களிலும் உறைத்தது. எனவே, அம்மாணவரை மன்னித்து விடுவது தவிர்க்க இயலாததாகி விட்டது.

லேம்ப் அவர்கள் ஜேம்ஸ் பாயர் அவர்களின் திறமைக்கு நற்சாட்சிப்பத்திரம் தருகிறார். தன்னுடைய இலக்கிய வாழ்வில், காலரிட்ஜ்[19] அவர்கள், இதை விட அறிவுப்பூர்வமாக, போதுமான புகழுரைகளை உதிர்த்துள்ளார். "நாட்டுப்புறப்பார்வையாளன்" இதழின் ஆசிரியரும்[20] மேற்படி பாயர் அவர்களை அந்நாளைய திறமை மிக்க ஆசிரியர்களோடு ஒப்பிடுவதில் தயக்கமின்றி இருக்கிறார்.

ஒரு வேளை, காலரிட்ஜ் அவர்கள் சொன்ன தூய கருத்துக்களை விட வேறொன்றைக்கொண்டு அவரைக்குறித்துச்சொல்வதை இறுதி செய்ய இயலாது. தன் முன்னாள் ஆசிரியர் மரணப்படுக்கையில் இருக்கிறார் என்று கேள்விப்பட்ட காலரிட்ஜ் அவர்கள் 'பாவம் அந்த ஜேம்ஸ் பாயர்! - அவரது பிழைகள் யாவும் மன்னிக்கப்படுவதாகுக! தலையும், செட்டைகளும் மட்டுமே கொண்ட சேரூப் தேவதைகள் அவரைக் காற்றின் வழியே மிதக்கச்செய்து பேரானந்தத்துக்குள் கொண்டு செல்லட்டும். அவர் பூமியில் இருந்த போது பிறருக்கு பிரம்படி தண்டனை கொடுத்ததைப்பற்றி அவருக்கு அங்கு நினைவுபடுத்தட்டும் ' என்றாராம்.

ஜேம்ஸ் பாயர் அவர்களின் கீழே மிகச்சிறந்த நல்ல அறிஞர்கள் உருவாக்கப்பட்டார்கள். என்னுடைய காலத்தில் பள்ளியினுடைய மூத்த வகுப்பு மாணவர் லேன்ஸ்லாட் பெப்பிஸ் ஸ்டீவன்ஸ், மாணவர்கள் மற்றும் மற்றவர்களிலும் மிகவும் பண்பானவர். அவரது இணை பிரியா சகா, முனைவர் திராலப்[21] இருவருமே செம்மொழி ஆசிரியர்கள். அவர்களுக்கு முற்பட்டவர்கள் செய்த சமூக இணக்கமற்ற செயல்களை நினைவு கூர்ந்தவர்களுக்கு, இந்த இருவரின் இணைந்த தோற்றம், எந்த அளவுக்கு மன விசாலத்தை ஏற்படுத்தக்கூடியது!! - நீங்கள் தெருவில் செல்லும் போது, இவ்விருவரில் ஒருவர் மட்டுமே தனியாக வருவதைப்

பார்த்து ஆச்சரியமடைவீர்கள். உடனே, உங்கள் ஆச்சரியம் குலைந்து, அந்த இணையில் மற்றொருவரும் அங்கே தோன்றி விடுவார்.

பொதுவாக, இந்த இரு ஆசிரியர்களும் இணைந்தே செயல்பட்டு, ஒருவரின் பணிச்சுமையை மற்றவர் நிறைவேற்றிப்பணிபுரிந்தனர். வயது முதிர்ந்த போது, இருவரில் ஒருவர், தான் பணியிலிருந்து ஓய்வு பெறுவதே சரியானது என்று கருதி, பணி ஓய்வு பெற்று பள்ளியிலிருந்து விலகிய பின்பு, மற்றவரும் நீண்ட நாட்கள் அங்கே இருக்காமல், தானும் தன் கைப்பிரம்பைக் கீழே வைப்பது தான் சரியானது என அவரும் பணியிலிருந்து விலகினார். உங்கள் கரங்களில் பதின்மூன்று வயதில் கரம் கோர்த்து உங்களை சீசரோ தே அமிசிடியாவைப்[22] புரட்ட வைத்த அதே கரங்கள் உங்களோடு நாற்பது வருஷங்கள் இணைந்திருந்தால், ஓ, அது எவ்வளவு அரிதான, ஆனால் எவ்வளவு அருமையான ஒரு விஷயம்!! இந்த பழைய காலத்து சிநேகிதம் குறித்த கதை போல ஒன்றைத்தன் வாழ்விலும் ஒரு இளம் பருவ வயதினன் ஒருவன் எதிர்பார்த்துக்காத்திருப்பான் !

மூத்த மாணவர் வகுப்பில் லேன்ஸ்லாட் பெப்பிஸ் ஸ்டீவன்ஸ் அவர்களுடன் இருந்தவர் சர். இ. தார்ன்டன் அவர்கள். சர். இ. தார்ன்டன் வட தேசங்களில் இருந்த அரசவைகளில் ராஜ தந்திரியாக திறம்பட பணி செய்தவர். தார்ன்டன் அவர்கள் உயரமாக, கருப்பாக, சோகமே வடிவான ஒரு இளைஞர். அதிகம் பேசாதவர். கடுமையாக ஒளிரும் தலைமுடி கொண்டவர். அவருக்குப்பின்னால் வந்தவர் தாமஸ் ஃபேன் ஷா மிட்டில்டன். (அவர் தற்போது கல்கத்தாவில் பிஷப்பாக உள்ளார்). மிட்டில்டன் இள வயதில் இருக்கும் நல்ல அறிஞர். அவர் சிறந்த விமர்சகர் என்ற புகழ் பெற்றவர். 'நாட்டுப்புறப்பார்வையாளன்' என்ற பத்திரிக்கையின் ஆசிரியர் என்பதைத் தவிர, ஷார்ப் அவர்களுக்கு எதிராக கிரேக்க மொழியில் ஒரு கட்டுரையும் எழுதியுள்ளார்.

இந்தியாவில் தனது மத அதிகாரம் செலுத்துவதில் மிட்டில்டன் அவர்களின் கை ஓங்கி நிற்கிறது. புதிதாக குருத்துவ பதவியில் நியமிக்கப்பட்டதால், அந்தப்புது வேகத்துடன் அவர் செயல்படுவது அதை நியாயப்படுத்துகிறது. ஜ்வல் அல்லது ஹுக்கர்[23] போன்று பழைய காலத்திய பணியிலான பணியைக் கொண்டு ஆங்கிலோ ஆசிய மதகுருமார்களின் மனதிற்கு ஒப்ப நடந்து கொண்டு, தங்களை ஸ்தாபித்த தலைமை நிறுவனத்திற்கும் மதிப்பு மரியாதை செலுத்திக் கொண்டிருப்பது என்பது சரிவரப் பொருந்தாது.

மிட்டில்டன் என்பவரின் பள்ளிக்கூட நடத்தை உறுதியானவை என்றாலும், மென்மையானவை. தன்னடக்கமானவர் அவர். மிட்டில்டன் என்பவருக்கு அடுத்த படியாக, இளையவராக ரிச்சர்ட்ஸ் என்பவர் இருந்தார். இவர் பிரித்தானிய பூர்வகுடிகளின் வரலாற்றைப்புத்தகமாக எழுதியவர். அத்துடன், ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழக கவிதைப் போட்டியில் சிறந்த கவிதை எழுதியவர். சோபையிழந்த மூத்த வகுப்பு மாணவர். அதன் பின், மிக எளிய ஸ்காட் அவர்கள். துரதிருஷ்டவசப்பட்ட மாண்டே அவர்கள், ஆகியோரைப்பற்றி எழுதும் போது இலக்கிய தேவதை அமைதியாகி விடுகிறாள்.

**'எட்வர்ட் வம்சத்தினர் சிலரைக்கண்டு,**
**துக்கமடைந்து, சித்திரக்குறிப்பு புத்தகங்கள் கடந்து சென்றன'**

உன் இளமைக்கால கற்பனையின் விடியல் துவக்கத்தில் நீ இருக்கும் போது, நம்பிக்கை என்பது அக்கினி ஸ்தம்பம்[24] போலவே, நினைவுகள் எனக்குள் திரும்பி விடுகின்றன.

சாமுவேல் டெய்லர் காலரிட்ஜ் சிறந்த தர்க்கவாதியாகவும், மெய்யியல்வாதியாகவும், கவிஞராகவும் திகழ்ந்தார். துறவி மடத்தின் வளைந்த அலங்காரப்பாதைகளில் நடந்து செல்லுவோர், (காலரிட்ஜின்) பேச்சினைக்கேட்டு, மிக்க மரியாதையுடன், பேச்சின்றி கட்டுண்டு கிடப்பதையும், இளம் மிராண்டுலாவின்[25] பேச்சிற்கும், அவர் அணிந்திருக்கும் உடைக்கும் இடையே உள்ள பொருத்தமற்ற தன்மையையும் எண்ணியபடியே செல்வர். உன் இனிய ஆழமான

குரலின் ஏற்ற இறக்கங்களில் ஜம்ப்ளிக்கஸ் அல்லது ப்ளாட்டினஸ்[26] ஆகியோரின் புதிர்த்தன்மைகளைக் குறித்துப் பேசிக்கொண்டிருப்பாய்.

அந்தக் காலத்திலும், தத்துவப்பொழிவுகளின் போது, நீங்கள் சோபையிழக்கவில்லை. அல்லது ஹோமரின் இலக்கியத்தை கிரேக்க மொழியிலும் அல்லது பிண்டாரையும்[27] நீங்கள் மொழிந்தபோது, அந்தப் பழைய குருமார் மடத்தின் சுவர்கள் யாவும் இந்த உற்சாகமுள்ள பையனுடைய உச்சரிப்பு த்வனிகளையல்லவா எதிரொலித்தது!!! (ஃபுல்லர் அவர்களின் வார்த்தைகளில் சொல்லப் போனால், சீரிய தன்மையின்றி ) அவருக்கும் (காலரிட்ஜ்), சார்லஸ் வேலன்டன் லெ கிரைஸ் அவர்களுக்கும் இடையே நடந்த 'அறிவார்ந்த மோதல்களைக்' கண்ட போது, ஒரு பெரிய நான்கடுக்கு கப்பலின் கேப்டன் மற்றும் ஆங்கிலப்போர் வீரனையும் போல அவர்கள் இருவரையும் நான் கண்டேன். செல்வன் காலரிட்ஜ் அவர்கள், மற்றவரைப்போலவே, கல்வியில் சிறந்தவர். திடமானவர். எனினும், மெதுவாகச்செயல்படுபவர். சார்லஸ் வேலன்டைன் லெ கிரைஸ் அவர்கள், அந்த ஆங்கிலப்போர் வீரனுடன் ஒப்பிடப்படும் போது, (கல்வி) அளவில் குறைந்தவர். எனினும், மிருதுவாகக்கப்பலைச் செலுத்துபவர். எந்த அலையிலும் எளிதாகத்திரும்பிப்பாதை மாற்றிச் செல்லக்கூடியவர். தன் விரைந்து எண்ணும் அறிவாலும், புதுமை காணும் திறத்தாலும், எல்லாக்காற்றின் போக்குகளையும் தனக்கு அனுகூலமாகக்கொள்ளக்கூடியவர்.

உங்களுடன் இருந்த இன்னொரு சகாவான ஆலன் என்பவரது உள்ளன்புள்ள புன்னகையையும், துறவி மடத்தில் சுவர் வளைவுகளை ஆட வைத்த அதனினும் சிறந்த சிரிப்பையும் எப்படி அவ்வளவு சீக்கிரமாய் மறக்க முடியும்?

அவர்களது கசப்பான சில விகடங்களையும் நீ பார்த்திருப்பாய். அல்லது அதை விடச்சற்று அறிவார்ந்ததாக, சாதனையாக ஏதாவது நிகழும் என்ற எதிர்பார்ப்பும் இருந்தது. பள்ளியின் நிரியஸ்

ஃபார்மோஸஸாக[28] மிக அழகிய முகத்துடன் சிரித்தவன் நீ. முதிர்ந்த அறிவுடன் இருந்த காலத்தில், நகரின் மிக அழகிய பெண்ணைக்கையால் கிள்ளி, அவளைக்கோபமூட்டி, ஒரு பெண் புலி போல ஆவேசமாகத் திரும்பியவள், உனது தேவன் போன்ற முகத்தைப்பார்த்ததும், வாயில் இருந்து சொல்ல வந்த வார்த்தையை மாற்றி, 'உன் அழகிய முகம் ஆசீர்வதிக்கப்படுவதாகுக! ' என்று சொல்லி மாற்றி விட்டாள்.

அதன் பின், இருவர் உள்ளனர். அவர்கள் இப்போது அநேகமாக உயிருடன் இருக்க வேண்டும். எலியாவின் நண்பர்கள் அவர்கள். ஒருவர் இளைய சாமுவேல் லெ கிரைஸ். மற்றவர் கேப்டன் சாமுவேல் பேவல். இதில் முன்னவரான சாமுவேல் லெ கிரைஸ் அவர்கள் படகு செலுத்தும் ஆசையால் உந்தப்பட்டவர். பின்னவரான கேப்டன் சாமுவேல் பேவல் அவர்கள் அஜாக்கிரதையாக நடப்பவர்.

நம்முடைய கல்வி நிலையங்களில் ஏழை மாணவர்கள் மிகவும் அலட்சியமாக நடத்தப்படுவது குறித்துப்பொறுத்துக் கொள்ளாதவர். அவர்கள் பல்கலைக்கழகத்தை விட்டு விட்டு ராணுவ முகாமுக்குச் சென்றவர்கள். ஒருவர் சீதோஷ்ண நிலை காரணமாக இறந்தார். இன்னொருவர் சாலமன்கா எனும் சமவெளியில் இறந்தார். சாமுவேல் லெ கிரைஸ் நிறைய நன்னம்பிக்கை கொண்டவர். அடிக்கடி தன் மனநிலையை மாற்றிக்கொள்பவர். இனிய சுபாவமுள்ளவர். சாமுவேல் பேவல் அவர்கள் உறுதியானவர். விசுவாசமுள்ளவர். அவமரியாதை ஏற்படும் என எதிர்பார்க்கக்கூடியவர். நல்ல இதயமுள்ளவர். பழைய ரோமானிய கம்பீரம் கொண்டவர்.

இனிய, வெளிப்படையான உள்ளமுள்ள ஃப்ராங்க்ளின்[29] மற்றும் மத மிஷனரிகளில் மிகவும் மென்மையான திரு. மர்மதியூக் தாம்ப்ஸன், இருவரும் இன்று வரை என் நல்ல நண்பர்கள். இவர்களோடு , என் காலத்திய உயர் வகுப்பின் மாணவர்களின் பட்டியல் முடிவடைகிறது.

-----------------------

## குறிப்புகள்

**1. திஸ்பியனுக்கு காகங்கள்,**

காகங்கள் திஸ்பியனாகிய எலியா தீர்க்கதரிசிக்கு உணவு கொண்டு வந்து தந்தன. பழைய ஏற்பாடு 1 ராஜாக்கள் 17 : 4, 6

**2. காலிகுலா**

பேரரசர் காலிகுலா, தன்னுடைய தலைமை மத குருவாக, ஒரு குதிரையை நியமித்திருந்தார். அக்குதிரைக்குத்தங்கக் குவளையில் திராட்சை மதுவைக்குடிக்கக் கொடுத்தார்.

**3. எரிக்கோவின்**

யோசுவா தீர்க்கதரிசி காலை நேரத்தில் எக்காளம் ஊதிய போது, அலங்கம் இடிந்து விழுந்தது. பழைய ஏற்பாடு , யோசுவா 6 : 5

**4. வெர்ரியோ**

ஆண்டனியோ வெர்ரியோ என்பவர் 17-ம் நூற்றாண்டைச்சேர்ந்த இத்தாலி நாட்டு ஓவியர்.

**5. மனத்தை சலனமற்ற**

விர்ஜில் எழுதிய கவிதை வரி. *'Animum picture pascit inani'*

**6. அவன் விசித்திரமான**

ஷேக்ஸ்பியரின் ' ஆன்டனியும், க்ளியோபாத்ராவும் ' நாடகத்தில் உள்ள ஒரு வசனம் இவ்வாறு மாற்றப்பட்டுள்ளது.

**7. கவிஞர் தான்தே**

கொடும் பாவம் செய்தவர்கள் எவ்வாறு தண்டிக்கப்படுகிறார்கள் என்று இலத்தீன் கவிஞர் தான்தே அவர்கள் தனது 'எரியும் பெருந்தீ' ( Inferno) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

**8. பீட்டர் வில்கின்ஸின்**

ராபர்ட் பல்டாக் எழுதிய 'பீட்டர் வில்கின்ஸின் வாழ்வும், தீரச் செயல்களும்' என்ற நூல் கி.பி. 1750ல் எழுதப்பட்ட புதினம். கப்பல் சேதத்தில் ஒரு தீவில் கரை ஒதுங்கும் ஒருவனுடைய கதை.

**9. நீல நிற மேலங்கி அணிந்த அதிர்ஷ்டக்காரப்பையன்**

இந்நூல் 1788-ம் ஆண்டு வெளி வந்தது.

**10. 'ப்ரெஞ்ச் மற்றும் ஆங்கில'**
கயிறு இழுக்கும் போட்டி

**11. ரூசோ அல்லது ஜான் லாக்**

ரூசோவும், ஜான் லாக்கும் கல்வி குறித்து எழுதிய நூல்களில், 'குழந்தைகள் செய்முறையால் மட்டுமே கற்க வேண்டும்; வெறும் வார்த்தைகளால் அல்ல' என்கின்றனர்.

**12. ஃபேட்ரஸ்**

அகஸ்டஸ் சீசரால் விடுதலை செய்யப்பட்டவன். இவன் ஈசாப்பின் நீதிக்கதைகளை இலத்தீன் மரபுக்கவிதைகளாகப்பாடி வைத்தான். இந்தக்கவிதை நூலே சார்லஸ் லேம்ப்பின் காலத்தில் இலத்தீன் படிக்கும் மாணவர்களுக்கு ஆரம்ப நிலைப்புத்தகமாக இருந்தது.

**13. ஸ்பார்ட்டன்களுக்கு ஹீலாத்துகள் போல**

இளம் ஸ்பார்ட்டன் வீரர்களுக்கு ஒழுக்க நெறியைச் சொல்லிக்கொடுக்க, பொது விருந்தின் போது இலக்கோனிய பிரதேச அடிமைகளான ஹீலாத்துகளை மது குடிக்க வைத்து, அங்கு கொண்டு வந்து அவர்கள் மூலமாக நன்னெறி போதனை செய்வது வழக்கம்.

**14. ஸெனோ.ஃபான் மற்றும் பிளாட்டோ**

ஸெனோ.ஃபான் (கி.பி. 430-534). கிரேக்க சரித்திர ஆசிரியர். சாக்ரட்டீஸின் மாணவர்.

பிளாட்டோ (கி.பி.424–348). கிரேக்க தத்துவவாதி. இவரும் சாக்ரடீஸின் மாணவர்.

**15. ஸாமியர்களை**

ஸாமியப்பிரதேசத்தைச் சேர்ந்த கிரேக்க தத்துவவாதி பித்தகாரஸ், தன் மாணவர்களை முதல் ஐந்தாண்டுகள் வரை வாயைத்திறந்து பேசக்கூட அனுமதிக்காமல், பாடங்களைக்கேட்க மட்டும் அனுமதித்தார்.

**16. கோசேன்**

புகலிடம். பாதுகாப்பான புகலிடம். எகிப்து தேசத்தில் இஸ்ரவேலர்கள் அடிமைகளாக இருந்தபோது, அவர்களுக்கென்று

ஒதுக்கப்பட்ட இருப்பிடப் பகுதி. பாரவோன் மன்னனும், அவன் மக்களும் எகிப்தில் கொள்ளை நோயால் பாதிக்கப்பட்ட போது, இஸ்ரவேலர் வாழ்ந்த கோசேன் பகுதி மட்டும் பாதிக்கப்படவில்லை. யாத்திராகமம் : 8 : 22; 9 : 23-26.

**17. கிதியோனின்**

கிதியோன், ஒரு தோலை எடுத்து, அதைப்பூமியில் போட்டு, அது பனி நீரால் நனைந்திருக்க, அதைச்சுற்றிலும் பூமி காய்ந்திருந்தது. (நியாயாதிபதிகள் 6 : 37, 38)

**18. வாழ்வே 'ஒரு விளையாட்டுப் போக்கான விடுமுறை'**

ஷேக்ஸ்பியரின் ஹென்றி- IV முதல் பாகம் நாடகத்தில் வரும் வசனம்.

**19. காலரிட்ஜ்**

சாமுவேல் டெய்லர் காலரிட்ஜ் (கி.பி. 1772-1834) ரொமான்டிக் கவிதை இயக்கத்தில் ஒரு முக்கிய கவிஞர். வில்லியம் வேர்ட்ஸ்வர்த்தின் நண்பர்.

**20. 'நாட்டுப்புறப் பார்வையாளன் இதழின் ஆசிரியரும்'**

'நாட்டுப்புற பார்வையாளன்' இதழின் ஆசிரியர் தாமஸ் ஃபேன்ஷா மிட்டில்டன் ஆவார்.

**21. முனைவர் திராலப்**

முனைவர் திராலப். இவர் ஜேம்ஸ் பாயருக்குப்பின்பு , உயர் வகுப்புகளுக்கு ஆசிரியரானார்.

**22. சீசரோ தே அமிசிடியா**

சீசரோ (கி.மு. 106 – 43) ஒரு ரோமானிய தத்துவவாதி. இவரது நூல் 'நட்பைக்குறித்து' என்பதாகும்.

**23. ஜ்வல் அல்லது ஹுக்கர்**

ஜான் ஜ்வல் (கி.பி. 1522 – 1571) என்பவர் ஸேலிஸ்பரி தேவாலய பிஷப். நல்ல கல்விமான். ரிச்சர்ட் ஹுக்கர் (கி.பி. 1544 – 1594) 'கிறித்தவ

மத குருமார்களின் நன்னடத்தை விதிகள் ' என்ற புத்தகத்தின் ஆசிரியர்.

**24. அக்கினி ஸ்தம்பம்**

பழைய ஏற்பாட்டில் வரும் சம்பவம். இஸ்ரவேலர்கள் இருளில் நடந்த போது, அவர்கள் முன்னே அக்கினி ஸ்தம்பம் ஒளி தந்தது.
யாத்திராகமம் 13 : 21, 22

**25. இளம் மிராண்டுலாவின்**

ஜியோவன்னி பிக்சா தெல்லா மிராண்டுலா (கி.பி. 1463–1494) ஒரு இளம் இத்தாலிய கனவான். நல்ல கல்விமான்.

**26. ஜம்ப்ளிக்கஸ் அல்லது ப்ளாட்டினஸ்**

ஜம்ப்ளிக்கஸ், கி.பி.நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த நவ-பிளாட்டோயிச தத்துவவியலாளர்.

ப்ளாட்டினஸ், கி.பி.203–270 ஒரு கிரேக்க தத்துவவாதி

**27. பிண்டார்**

இவர் ஒரு கிரேக்கர். (கி.மு. 522 – 443). இசைச் செய்யுள் இயற்றியவர்.

**28. நிரியஸ் ஃபார்மோஸஸ்**

ஹோமரின் 'இலியட் ' காவியத்தில் வரும் மிக அழகிய பையன்

**29. ஃப்ராங்க்ளின்**

ஃப்ராங்க்ளின் அவர்கள், ஆக்ஸ்ஃபோர்டு கல்லூரியின் தலைமை ஆசிரியர்.

…………..

# 5. வறுத்த பன்றி இறைச்சி குறித்த ஒரு நெடுங்கட்டுரை (*A Dissertation upon Roast Pig* )



என் நண்பர் தாமஸ் மேன்னிங் அவர்கள் பெரிதும் இசைந்து, ஒரு சீன கையெழுத்துப்பிரதியினை வாசித்து, அதன் விளக்கமும் தந்தார். அதன் படி, மனித குலம் ஆதியில் முதல் எழுபதினாயிரம் வருஷங்கள் வரை, உயிரோடு உள்ள விலங்குகளின் மாமிசத்தை அப்படியே பிய்த்தும், கடித்தும் உண்டதாகச்சொன்னார். இந்த வழக்கம் அபிசீனியா[1] பிரதேசத்தில் இன்னும் நடைமுறையில் உள்ளதாகவும் சொன்னார். இந்தக் கால கட்டம் குறித்து கன்பூசியஸ் எழுதிய 'சாதாரண மாற்றங்கள் ' என்ற நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் தெளிவாகவே சொல்லப்பட்டுள்ளது.

'சமையற்காரரின் விடுமுறை ஓய்வு' என்று பொருள் தரக்கூடிய 'சோ -ஃ.பேங்' என்னும் பதத்தைக்குறிப்பிடுகிறார். சமையலில் பொரிப்பது, சுடுவது போன்ற கலைகள் யதேச்சையாக எவ்வாறு கண்டுபிடிக்கப்பட்டது என்று அந்தக் கையெழுத்துப்பிரதி விளக்குகிறது. (சமையலில் சுடுவது என்பது பொரிப்பதற்கு முற்பட்டது என நான் எண்ணுகிறேன்.)

பன்றிக்கூட்டம் ஒன்றை மேய்த்து வந்த ஹோ-தி என்பவன், ஒரு நாள் காலையில் தன் வழக்கப்படி, பன்றிக் கொட்டத்திற்குத்தேவையான நீளமான குச்சிகளைக்கொண்டு வரப்போனான். தன் குடிசையைப்

பார்த்துக்கொள்ளும்படி, தனது பெரிய, விகாரமான போ-போ எனும் மகனிடம் சொல்லியிருந்தான். அந்த மகனோ, அவனையொத்த சிறு பையன்களுக்கே உரித்தான இயல்புடன், தீயுடன் விளையாடினான். அப்போது, சில தீப்பொறிகள் தவறுதலாக, வைக்கோல் பொதி ஒன்றின் மேல் விழுந்து, அது விரைவாகத்தூண்டப்பட்டு, அந்தத் தீ அந்த எளிய வீட்டின் எல்லாப்பகுதிகளுக்கும் பரவி, இறுதியில் வீடே சாம்பலாகி விட்டது. அந்தச் சிறு குடிசை எரிந்ததை விட (வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் கட்டிடம் என்ற வார்த்தைக்குப்பதிலாகச் சொல்லப்பட்ட வார்த்தை 'குடிசை').

அதில் மிக முக்கியமான விஷயம் என்னவென்றால், அந்தக் குடிசையின் உள்ளே இருந்த, ஒரே பன்றி ஈன்ற சிறந்த ஒன்பது எண்ணத்துக்குக்குறையாத புதிய பன்றிக்குட்டிகள் யாவும் தீயில் இறந்து விட்டன என்பது தான். கீழ்த்திசை பகுதிகள் யாவிலும், நாம் அறிந்த அளவில், சீனப்பன்றிகள் மிக உயர்ந்ததாக மதிக்கப்படுகின்றன. நீங்கள் எண்ணுவது போல, தன் வசிப்பிடம் தீக்கிரையானதற்காக போ-போ மிகவும் ஆழ்ந்த பயம் கொண்டிருக்கவில்லை. அந்த வசிப்பிடத்தை, அவனும், அவனது தந்தையும், எந்த நேரத்திலும், சில காய்ந்த மரக்கிளைகளைக் கொண்டு, ஓரிரு மணி நேரத்திற்குள்ளாகக் கட்டிக்கொள்ள முடியும். அவன் கவலைப்பட்டது தன் பன்றிகளைக்குறித்து தான்.

தன் தந்தையிடம் என்ன சால்ஜாப்பு சொல்லலாம் என அவன் எண்ணிக்கொண்டிருந்தபோது, அகாலமாகத்துன்புற்று எரிந்து போன பன்றிகளின் மீது அவனது கைகள் அலை பாய்ந்தன. அப்போது ஒரு கூரிய வாடை அவனது மூக்கைத்துளைத்தது. அதற்கு முன் அவன் அத்தகைய வாசத்தை நுகர்ந்ததே இல்லை. அது எங்கிருந்து வந்தது ? எரிந்த குடிசையிலிருந்து அல்ல – அதன் வாசத்தை அதற்கு முன்பே நுகர்ந்திருக்கிறான். உண்மையில், அந்த துரதிருஷ்டசாலி இளைஞனின் கவனக்குறைவால் நேர்ந்த முதல் தீ விபத்து அது அல்ல. அத்துடன், அந்த வாசம் ஒரு செடி, புல் அல்லது பூவின் வாசத்தை ஒத்திருக்கவில்லை. பின்னர் நடப்பதை முன்னறிவிக்கும் விதமாக அவனது கீழ் உதடுகளில் ஈரம் பெருக்கெடுத்தது. என்னவென்று சிந்திக்க அவன் அறியான். பன்றியைத்தொட்டுப்பார்த்து, அது

உயிரோடு இருப்பதற்கான அறிகுறி இருக்கிறதா எனப்பார்ப்பதற்காக அவன் குனிந்தான். அவன் தன் விரல்களைச்சுட்டுக்கொண்டான். சுட்டுக்கொண்ட விரல்களைக் குளிர்விக்க, அவைகளை எடுத்து, முட்டாள்தனமாகத் தன் வாயில் வைத்துக்கொண்டான். அவன் விரலுடன், சுடப்பட்ட மாமிசத்தோலின் துணுக்குகளும் அவனது விரலுடன் ஒட்டிக்கொண்டு வந்து விட்டன. அவனது வாழ்நாளிலேயே முதன் முறையாக (உண்மையில் உலகிலேயே முதன் முறையாக, ஏனெனில், அதற்கு முன்னால் எந்த மனிதனும் அதை அறிந்திருக்கவில்லை.) அவன் பன்றியின் முரட்டுத்தோலை ருசித்தான். மீண்டும் ஒரு முறை குனிந்து, பன்றியைத் தொட்டுப்பார்த்து, அதை உணர்ந்தான். அது இப்போது அவனது விரல்களைச் சுடவில்லையெனினும், பழக்கத்தின் காரணமாக, அவனது விரல்களை நக்கிக் கொண்டான்.

நீண்ட நேரத்திற்குப்பின்பு, அவனது மந்த புத்திக்கு, அங்கிருந்து வந்த வாசம் பன்றியின் வாசம் தான் என்று புரிந்தது. அத்துடன் பன்றிக்கறி அத்துணை ருசியாய் இருந்தது. கண்டறிந்த அந்த புதிய இன்பத்திற்கு அவன் தன்னை ஒப்புக்கொடுத்து விட்டான். பன்றியின் மேல் விழுந்து, தோலின் கீழ் இருந்த சுட்ட மாமிசத்தை தன் கை முழுக்க எடுத்து, மிருக வழக்கத்திற்கொப்பாக, அதைத்தன் தொண்டைக்குள் அடைத்துக் கொண்டான். அந்த சமயம், அவனது தந்தை எரிந்து புகைந்து கொண்டிருந்த வீட்டின் கூரையின் கட்டைகளுக்கு மத்தியில் உள்ளே நுழைந்தான். நடந்த விஷயங்களைக்கண்டு, உடனே தனது தண்டனை கொடுக்கும் பிரம்பைக்கையில் எடுத்துக்கொண்டு, அந்த இளம் அயோக்கியனின் தோள்களில், ஆலங்கட்டி மழை பொழிந்தது போல, சரமாரியாக அடிக்கத்தொடங்கினான். அந்த அடிகளை, ஈசல் பூச்சிகள் தன் மேலே விழுந்தது போலக்கருதி, போ-போ, கிஞ்சிற்றும் பொருட்படுத்தவில்லை. தன் உடலின் உள்ளே உண்டான கிளர்ச்சியான சுகத்தை உணர்ந்த அவன், தன் உடலின் மற்ற இடங்களில் ஏற்படும் அசௌகரியக் குறைவுகளைக்குறித்துக்கடினப்பட்டிருந்தான்.

அவனது தந்தையால் அவனையும், பன்றியையும் பிரிக்க முடியவில்லை. இறுதியில், அவர் அவனை அடிப்பதை நிறுத்தி,

சூழ்நிலையைக் கொஞ்சம் உணர்ந்த போது, கீழ்க்கண்ட உரையாடல் அங்கு தொடர்ந்தது.

- 'ஏ, அற்ப நரியே! நீ அங்கு எதை விழுங்கிக்கொண்டிருக்கிறாய்? உன்னுடைய நாய் சேஷ்டைகளால் எனது மூன்று வீடுகளையும் நீ எரித்தது போதாதா? எல்லாவற்றையும் தாறுமாறாக்கியதோடு, இப்போது நெருப்பையும் உண்டு கொண்டிருக்கிறாயா? நான் சொல்றேன், அது என்னவென்று எனக்குத் தெரியாது'.

- 'ஓ, என் தகப்பனே! இந்தப் பன்றி... பன்றி... வாரும். வந்து இதைச் சாப்பிட்டு, இந்தச் சுட்ட பன்றிக்கறி எவ்வளவு சுவையாய் இருக்கிறது என்று பாரும்! '.

ஹோ-தியின் காதுகள் திகிலால் அதிர்ந்தன. அவன் தன் மகனைச் சபித்தான். இதைப் போன்ற சுட்ட பன்றிக்கறியைத் தின்னும் மகனைப் பெற்றதற்காகத் தன்னையும் சபித்துக் கொண்டான்.

காலை முதலே, அதிசயமாகத்தன் நாசி உணர்வுகளால் கூர்மையாய் இருந்த போ-போ, இன்னொரு பன்றியை இழுத்து, அதைத் தன் கைகளால் கிழித்து, அதிலிருந்து ஒரு சிறு துண்டை எடுத்து ஹோ-தி யின் உள்ளங்கையில் வேகமாய் அழுத்தி, 'அப்பா, இந்தச் சுட்ட பன்றியைத்தின்னும். தின்னும். இதைக்கொஞ்சம் ருசி பாரும். என் தேவனே!' என்றபடி காட்டுமிராண்டித்தனமான கூச்சல்கள் இட்டு, பன்றி மாமிசத்தைத்தன் வாயில் போட்டு அதை அடைத்துக் கொண்டான்.

தன் கையில் இருந்த வெறுப்பூட்டும் ஒன்றைப்பற்றிய போதே, ஹோ-தி யின் உடலெங்கும் நடுக்கம் ஏற்பட்டது. ஒரு அசாதாரணமான, விகாரமான ஜந்து என்பதற்காகத்தன் மகனை ஏன் கொல்லக்கூடாது என அவன் மனம் அலை பாய்ந்தது.

பன்றி மாமிசம், அவனது மகனின் விரல்களைச்சுட்டது போலவே, அவனது விரல்களையும் சுட்டு விட்டது. அவனும் அதே போலவே, அதே நிவாரணமாக, தன் வாய்க்குள் விரல்களை வைத்துக்கொண்டான். மாமிச ருசியை அவனும் உணர்ந்தான். ஒரு பாசாங்கிற்காக, அவன் தன் முகத்தை கோணலாக்கிக்கொண்ட போதும், அதன் சுவை அத்துணை

மோசமானதாக இல்லை. இறுதியில், தகப்பனும், பிள்ளையுமாக கீழே அமர்ந்து, அங்கு கூளமாகக்கிடந்த பன்றிக்குட்டியின் மாமிசம் எதையும் மிச்சம் வைக்காமல், எல்லாவற்றையும் தின்று தீர்த்தனர்.

அந்த ரகசியத்தை வெளியே சொல்லக்கூடாது என போ-போ வுக்கு கட்டளையிடப்பட்டது. ஏனெனில், இது குறித்து தெரிய வந்தால், அவர்களது அக்கம் பக்கத்தார், அவர்களை ஏதோ வெறுப்புக்குரிய ஈனப்பிறவிகள் என்று முடிவு கட்டி, கல்லால் அடித்தே கொன்று விடுவார்கள். தங்களுக்குத்தேவன் அனுப்பிய நல்ல மாமிசத்தை எப்படி மேலும் மேம்படுத்துவது என்று எண்ணினர், தந்தையும் மகனும்.

அது மட்டுமின்றி, விசித்திரக்கதைகள் சுற்று வட்டாரத்தில் எழுந்தன. இப்போதெல்லாம் ஹோ-தி யின் குடிசை முன்னெப்போதும் இல்லாத வண்ணம், அடிக்கடி எரிய ஆரம்பித்தது கண்டுபிடிக்கப்பட்டது. அது முதல், நெருப்பால் மட்டுமே அந்தக் குடிசை அழிந்து கொண்டிருந்தது. சில சமயங்களில், நல்ல பகல் வெயில் நேரத்தில், அவன் வீடு எரியும். சில சமயம், இரவில் எரியும். பன்றிக்குட்டிகள் ஈன்றவுடனேயே, ஹோ தி யின் வீடு தீப்பற்றி எரிவது உறுதி என ஆனது.

ஹோ-தி கூட, தன் மகனைத் தண்டிப்பதற்குப்பதிலாக, முன்னெப்போதும் இல்லாத விதத்தில், அவனுக்குச்சலுகைகள் தர ஆரம்பித்தான். பிற்பாடு, தகப்பனும், மகனும் கண்காணிக்கப்பட்டார்கள். மிகவும் பயங்கரமான மர்மம் கண்டறியப்பட்டது. தகப்பனும், மகனும், பீகிங் நகருக்கு விசாரணைக்கு வரும்படி அழைக்கப்பட்டனர். அந்தக் காலத்தில், பீகிங், ஒரு சிறிய நகரம் மட்டுமே.

சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். வெறுப்புக்குரியதான அந்த உணவு நீதிமன்றத்திற்குக்கொண்டு வந்து காட்டப்பட்டது. தீர்ப்பு சொல்லப்படும் தருணம் வந்தது. அப்போது, வழக்கைக்கேட்ட முதன்மை நடுவர் ஒருவர், குற்றவாளிகள் குற்றம் சுமந்து நிற்பதற்குக்காரணமான சுட்ட பன்றி மாமிசத்தினைக்கொஞ்சம் எடுத்து ஒரு பெட்டியில் வைத்துத் தருமாறு கேட்டார். அவரும், மற்றெல்லாரும் அதைத்தொட்டுப் பார்த்தனர். போ-போ மற்றும் அவரது தந்தைக்கு சுட்டது போலவே, அவர்களுக்கும் விரல்கள் சுட்டது. இயற்கை வழிகாட்டியபடி, அவர்களும் அதே நிவராணத்தைக்கைக்கொண்டனர். எல்லா சாட்சிய

உண்மைகளும் இருந்த போதிலும், நீதிபதியானவர் அவர்களைக்குற்றமற்றவர் எனத் தீர்ப்பளித்தார்.

தீர்ப்பாயும் நடுவர்கள், தங்கள் இருக்கைகளை விட்டு அகலாது, அல்லது தங்களுக்குள் ஆலோசனை எதுவும் சொல்லாமலே, ஏக மனதாக, தகப்பனும், மகனும் குற்றமற்றவர்கள் எனத்தீர்ப்பளித்தனர். இது குறித்து, மொத்த நீதிமன்றமும், நகர மக்களும், அந்நியர்களும், நிருபர்களும் மற்றும் அங்கிருந்த எல்லாரும் ஆச்சரியமடைந்து போயினர். நீதிபதியோ ஒரு புத்திசாலியான ஆளாய் இருந்தபடியால், தரப்பட்ட அநீதியான தீர்ப்பைக் குறித்துப்பாராது தன் கண்ணை மூடிக்கொண்டார். நீதிமன்றம் கலைந்ததும், அந்நீதிபதி தனியாகச் சென்று, ஏராளமான பன்றிகளை பணம் கொடுத்தோ அல்லது அன்பளிப்பாகவோ வாங்கிக்கொண்டார்.

இன்னும் சில நாட்கள் கழிந்து, நீதியரசரின் நகரத்து வீடும் தீப்பற்றி எரிந்தது. இந்த விஷயம் எல்லோருக்கும் தெரிந்து, இதன் ரகசியம் எல்லா இடங்களிலும் இறக்கை கட்டிப்பறந்தது. இப்போது, எல்லாத்திசைகளிலும், வீடுகள் தீப்பற்றி எரிந்தன. மாகாணத்தில் எங்கு பார்த்தாலும் பன்றிகளும், எரிபொருளும் தென்பட்டன. எல்லா ஆயுள் காப்பீட்டு அதிகாரிகளும் தங்கள் அலுவலகத்தை மூடி விட்டனர்.

மக்கள் கட்டிடம் கட்டும்போது, நாளுக்கு நாள் மிகவும் மென்மையான கட்டிடங்களைக்கட்டத் தொடங்கினர். வெகு சீக்கிரத்தில், உலகில், கட்டிடக்கலையே அழிந்து விடுமோ என்ற அச்சம் ஏற்பட்டது. வீட்டைக்கொளுத்தும் இந்த வழக்கமும் தொடர்ந்தது. இறுதியில் நம் நாட்டு அறிஞர் லாக்[2] என்பவரைப்போல, அந்நாட்டிலும் ஒரு ஞானி உதயமாகி, மற்ற எல்லா விலங்கினத்தைப் போல, பன்றியையும் சமையல் செய்திட இயலும் எனவும், எனவே ஒரு முழு வீட்டையே கொளுத்தி, அதைப் பக்குவப்படுத்துவதற்குப்பதிலாக, அதை நெருப்பில் சுடவும் இயலும் என்பதைக்கண்டுபிடித்தார்.

அதற்குப் பின்பு, பன்றியை இரும்புக்கம்பியில் சுடும் கரடு முரடான வழக்கம் வந்தது. அதற்கு ஒன்று அல்லது இரண்டு நூற்றாண்டுகளுக்குப் பின்பு, நீளக்கம்பியில் அல்லது கூரான குத்துக்கம்பியில் கோர்த்து

வறுக்கும் வழக்கம் வந்தது. அது எந்த ராஜ வம்சத்தின் ஆட்சியின் போது வந்தது என்பதை மறந்து விட்டேன்.

அவ்வண்ணமாக, எல்லோருக்கும் தெரிந்த (சமையல்) கலை, மனித குலத்தில் சிறிது, சிறிதாகப் பரவியது, என அந்தக் கையெழுத்துப்பிரதியின் குறிப்பு முடிவடைகிறது.

மேற்சொன்ன விவரணக்குறிப்பில், நாம் முழு மனதாக நம்பிக்கை வைக்காத போதிலும், அந்நாளில் சமையல் செய்யும் குறிக்கோளோடு வீடுகளையே கொளுத்தும் ஆபத்தான முயற்சிகளில் ஈடுபட்டதற்கு ஒரு சாக்குப் போக்கு சொல்லக்கூடுமென்றால், அந்தச் சாக்குப் போக்கும், சமாதானமும், வறுத்த பன்றி இறைச்சியில் இருப்பதைக்கண்டு கொள்ளலாம்.

உலகில் உள்ள உணவுகளிலேயே மிகச்சிறந்த ருசியான உணவு, பன்றி மாமிசமே என நான் உறுதிபடக்கூறுகிறேன். நீங்கள் வீட்டிலேயே வளர்க்கும் பன்றிகள் - அதாவது மிகப்பெரிதான முற்றிய, சுடுவதற்கு லாயக்கற்ற, முரட்டு சுபாவம் கொண்ட பன்றிகளைப்பற்றிச் சொல்லவில்லை. மாறாக, இளைய, மென்மையான, சிறு பன்றிகளைப் பற்றிச் சொல்லுகிறேன்.

அவை ஒரு மாதத்திற்கும் குறைவான வயதுடைய, மல ஜல அசிங்கங்களால் பாதிக்கப்படாதவை. அதன் பெற்றோருக்கே உரித்தான அசூயை குறித்த பிரியம் கொஞ்சமும் அற்றவை. குரல் இன்னும் உடைபடாதவை. ஒரு குழந்தைக்குரிய உச்சஸ்தாயி குரலுக்கும், முனகலுக்கும் இடைப்பட்ட குரல். மெல்லிய உறுமலின் துவக்க ஆலாபனை.

அந்தப் பன்றி பொரிக்கப்பட வேண்டும். எமது மூதாதையர்கள் அதைக் கொதிக்க வைத்தோ, வேக வைத்தோ உண்டனர் என நான் அறிந்திருக்கிறேன். ஆனால், அந்த வெளிப்புறத்தோலை எப்படி தியாகம் செய்ய வேண்டியுள்ளது!!

மிகவும் கவனத்துடன், மிகைப்படாமல் சுடப்பட்ட, பழுப்பு நிறத்தாலான மொறு, மொறு தோலின் நறுமணத்திற்கு ஈடாக எதுவும்

இல்லை என அறுதியிட்டுக்கூறுகிறேன். பற்களால் கடிபடும் போது, மிகவும் கடினமாகவும், ஆனால் எளிதில் உடையக்கூடியதுமான இந்த ருசியான விருந்தில் பங்கேற்க நம் பற்களுக்கு அழைப்பு விடுக்கப்படுகிறது. அத்துடன் அதில் இருக்கும் பிசுபிசுப்பான எண்ணை-- ஓ, அதைக் கொழுப்பு என்று சொல்லாதீர்; அதில் விவரிக்க இயலாத இனிமை இருக்கிறது– மெல்லியதாக மேலெழும் தைலம் -- முளையிலே

ஒடுக்கப்பட்ட கொழுப்பு - ஆனால் பெரிதும் வளர்ந்து படர்ந்தது – அதன் முதன்மையான, தைல சாரம், இன்னமும் தயாராகாத சிறு பன்றிக்குட்டியின் அதி சாராம்சமான உணவு. எளிய, இல்லை, எளியது அல்ல, ஒரு விதமான தேவ உணவு அது. அல்லது அது அவ்வாறு இருந்திருந்தால், ஒரு வேளை தைலச்சத்து கொண்ட எளிய உணவு. ஒன்றுடன் ஒன்று பிணைந்தது. இறுதியில், இரண்டும் ஒன்றிணைந்து தேவாமிர்தமாக மாறியது அல்லது சாமானியமான பொருளானது. அவன் அந்தப்பன்றியைச் சுடுவதைப்பாருங்கள். அந்தப் பன்றிக்குட்டிக்கு அது புத்துணர்ச்சியூட்டும் வெப்பம். சுட்டெரிக்கும் வெம்மை அல்ல. அது வெகு சாத்வீகமாக அதைத்தாங்கிக் கொள்கிறது. எவ்வளவு சீராக அவன் அந்தக் கம்பியைச்சுழற்றுகிறான்! அதைச்செய்து முடித்து விட்டான். இளம் பன்றியினைச்சுட வேண்டி வந்ததால், மிக அதிகமாக உணர்ச்சிவசப்பட்டு, அவன் தன் அழகிய கண்களில் அழுதே விட்டான்.

அனலில் உருகிய பன்றியின் கண்கள், இளகிய பாகு போலே, விண் கற்கள் போலே ஒளிருகின்றன. அந்தப் பன்றி சமைக்கப்பட்டு தட்டில் இருப்பதைப் பாருங்கள். எவ்வளவு தாழ்மையாக அது வீழ்ந்து கிடக்கிறது! மாறாக நீங்கள் இந்தத் தீங்கறியாத அப்பிராணித்தனத்திலிருந்து முற்றிய பன்றியாக வளர்ந்திருந்தால், அது அதற்கேற்றவாறு எந்த அளவுக்கு சாந்தமற்ற, முரட்டுக்குணத்தோடு வளர்ந்திருக்கும்?! அது ஒரு சாப்பாட்டு ராமனாகவும், சோம்பேறியாகவும், பிடிவாத குணமுள்ளதாகவும், சகிக்க இயலாத மிருகமாகவும் மாறியிருக்கும். மண்ணில் உருண்டு புரளும் அசூயையான நடத்தை கொண்டிருக்கும், என பந்தயம் கட்டி உறுதியாய்ச்சொல்லுகிறேன். இந்தப்பாவங்களிலிருந்தெல்லாம் அது மிக மகிழ்ச்சிகரமாக விலக்கி வைக்கப்பட்டு விட்டது.

**'பாவம் நோயாகத்தொற்று முன்,**
**துயரத்தால் வாடும் முன்,**
**(அதற்கு) மரணம், காலா காலத்தில்**
**கரிசனத்தோடு வந்தது'[3]**

அதன் நினைவு வாசனையுள்ளதாய் இருக்கிறது. தன் குடலில் அது செரிமானம் ஆகவில்லையென்பதால், எந்தக் கோமாளியும் அதைச் சபிக்கவில்லை. எந்த நிலக்கரி சுரங்கத்தொழிலாளியும் அந்த மாமிசத்தை புகை பிடித்த சாற்றுக்குழம்புடன் சேர்த்து, அள்ளி அள்ளி விழுங்குவதில்லை. அந்தப் பன்றிக்கு நல்ல விவேகமுள்ள உணவுப்பிரியனின் நன்றியுள்ள வயிற்றில் இறுதி இடம் கிடைக்கிறது. அத்தகைய ஞாபகார்த்த இறுதி இடம் கிடைப்பதற்காக, அப்பன்றி திருப்தியுடன் இறக்கத் தயார்!

நறுமணமூட்டிய உணவுகளில் பன்றி இறைச்சியே சிறந்தது. அதற்கு அன்னாசிப்பழ சேர்க்கையே உன்னதமானது. பன்றி கிட்டத்தட்ட புலன் கடந்த உணர்வு ஊட்டக்கூடியது. பாவமில்லாவிட்டாலும், அது ஒரு ஆனந்தம். உண்மையில், மெல்லிய உணர்வுள்ளவன் பன்றி மாமிசம் உண்ண யோசிப்பான். அது பாவம் செய்தல் போல. மனுஷரின் வாய் ருசி விஷயத்தில் பரவசப்படுத்தக்கூடியது. உண்ணும் போது, வாயைக் குத்திக்காயப்படுத்தக்கூடியது. காதலர்களின் முத்தத்தின் முடிவு போல. உக்கிரமானதும், மனப்பித்து கொள்ள வைப்பதுமான பதார்த்தம், நம்மை சுகத்தின் அருகில் வேதனையும் ஊட்டக்கூடியது. ஆனால், பசியைத்தணிக்கும் வேலையை அது செய்வதில்லை. நல்ல அகோரப்பசி, பன்றி இறைச்சிக்குப்பதிலாக ஆட்டு மாமிசத் துண்டுகளை விரும்பும்.

பன்றி – அதன் பெருமையை நான் பேசுகிறேன். பார்த்த மாத்திரத்தில் பசியைத்தூண்டுவது போலவே, அது சுவை விரும்பிகளின் திருப்திக்கு ஏற்றது. நல்ல கட்டு மஸ்தான ஆள், அதைச் சாப்பிட்டு, மேலும் உடல் பெருக்கக்கூடும். உடல் மெலிந்தவன் அதன் மென்மையான சாறுகளை அருந்த மறுப்பதில்லை.

மனித இனத்தில், குண ரீதியாக, பாதி நற்குணமும், பாதி தீய குணமும் விளக்கவியலாதபடிக்கு ஒன்று கலந்திருப்பது உண்டு. அது வெளிப்படும் போது, அதனால் தீமை உண்டாகும். ஆனால் (பன்றியோ)

முழுக்க முழுக்க நற்குணமே நிறைந்தது. அதன் எந்த ஒரு உடலின் பாகமும், மற்ற பாகத்தை விட சிறந்ததோ, மட்டமானதோ அல்ல. அது உணவு மேஜையில் உள்ள எல்லோருக்கும் வெட்டிப்பரிமாறச்சிறந்தது. அதன் மாமிச பாகங்கள் ஒன்றை விட மற்றொன்று சிறந்தது எனக் கொள்ளத்தக்க விதத்தில் அமைந்திருக்கவில்லை. நல்ல அண்டை அயலாருக்குத்தருவதற்கு ஏற்ற உணவு.

இவ்வுலக வாழ்வில், தனக்குக்கிடைத்த நன்மையானவற்றை ஒரு நண்பனுக்குத் தாராளமாகத்தரும் முழு மனது கொண்ட மனிதர்களில் நானும் ஒருவன். ஒரு சிலரே என்னைப்போன்ற சுபாவம் கொண்டவர்களாய் இருக்கக்கூடும். என் சுய திருப்தியில் நான் ஈடுபாடு கொள்வது போல என் நண்பனின் சந்தோஷங்களில், மனத்திருப்தியில் பங்கெடுக்க, நான் பெரிதும் ஈடுபாடு கொண்டவன்.

பரிசளிப்பது என்றால் பிரியமானவற்றை இழப்பது என்று நான் அடிக்கடி சொல்லுவேன். முயல்கள், வான் கோழிகள், கௌதாரிகள், உள்ளான் குருவிகள், கூட்டுக்குள் அடைத்திருக்கும் கோழிகள், நலவன் சேவல்கள், ஆட்காட்டிக் குருவிகள், ஆண் பன்றிகள், பீப்பாய்களில் உள்ள சிப்பிகள் ஆகியவற்றை நான் பெற்றுக் கொண்டதைப் போலவே, வெகு தாராளமாக பிறருக்கும் கொடுத்து விடுவேன். என் நண்பனின் நாவின் வழியாக அவைகளின் ருசியைக் காண விரும்புகிறேன். ஆனால், இதற்கு எங்காவது முற்றுப்புள்ளி இடப்பட வேண்டும். ஒருவன் லியர் மன்னனைப்போல "எல்லாவற்றையும் கொடுத்து விடுவது"[4] கூடாது. நான் பன்றி மாமிசத்தின் விஷயத்தில் உறுதியாக நிற்கிறேன். நட்பு என்ற அடிப்படையில் (அல்லது வேறு என்ன அடிப்படை என்று அறியேன்), ஒருவன் தன்னிடமுள்ள நல்ல வாசம் வீசும் உணவு வகைகள் யாவற்றையுமே தன் வீட்டிற்கு வெளியே கொடுத்து விடுவது என்பது , ஒருவன் ஏற்கனவே கொண்டுள்ள ஆசீர்வாதமான பண்பு. என்றாலும், என் தனிப்பட்ட ருசியான உணவு என்ற விஷயத்தில், அது எனக்கு நானே செய்து கொள்ளும் அநீதி. அக்கருத்தை அறிவற்ற ஒன்றாகக்கொள்ளலாம்.

நான் பள்ளியில் இருந்த போது, இது குறித்த உணர்வினைப் பெற்றுக்கொண்டது ஞாபகத்திற்கு வருகிறது. என்னுடைய விடுமுறை

முடிந்து, நான் பள்ளி திரும்பும் போது, எனது முதிய வயதுடைய சித்தி, எனக்கு நல்ல இனிய பட்சணங்களை எனது சட்டைப்பையில் வைத்துத் தரத் தவறியதில்லை. ஒரு நாள், மாலை வேளையில், அடுப்பிலிருந்து இறக்கப்பட்ட, பழங்கள் பொதிந்த கேக் ஒன்றைக் கொடுத்து, என்னை வீட்டிலிருந்து அனுப்பி விட்டார். இலண்டன் பாலத்தின் மேலிருக்கும் என் பள்ளிக்குச்செல்லும் வழியில், ஒரு நரைத்த தலை உடைய கிழட்டுப்பிச்சைக்காரன் எனக்கு வணக்கம் சொன்னான். (இப்போது எண்ணிப்பார்க்கிறேன், அவன் சந்தேகமேயில்லாமல் ஒரு போலி தான்) அவனுக்கு ஆறுதல் தர என்னிடம் ஒரு பென்னி நாணயம் கூட இல்லை. ஆனால், தர்மம் செய்ய வேண்டும் எனற வெறும் பாசாங்கிற்காக, ஒரு பள்ளிச் சிறுவனின் செயல் போலே, என்னிடமிருந்த மொத்த கேக்கையும் அவனுக்கு அன்பளிப்பாகக்கொடுத்து விட்டேன். அதன் பிறகு, இதே போன்ற சந்தர்ப்பங்களில், ஒருவனுக்கு ஏற்படும் குதூகலத்துடனும், இனிய சுகமான சுய திருப்தியுடனும், சிறிது தூரம் நடந்து சென்றேன்.

ஆனால், பாலத்தினுடைய மறுமுனைக்குச்செல்லும் முன்னரே, என் எண்ணங்கள் மாறி விட்டன. எனது சித்தி எனக்குத்தந்த அன்பளிப்பை ஒரு அறிமுகம் இல்லாத, முன்பின் காணாத ஒருவனிடம் கொடுப்பதற்கு நான் எவ்வளவு நன்றி கெட்டவன் என்பதை உணர்ந்து கண்ணீர் விட்டேன். நான் உறுதியாய் அறிந்த வரை அவன் மோசமான ஆள். அத்துடன், என் சித்தி, எனக்குத்தந்த அந்த வாசமுள்ள இனிய கேக்கை வேறு யாருமின்றி நானே உண்பதாக எண்ணி எவ்வளவு மகிழ்ந்திருப்பார் எனவும் எண்ணினேன். அந்த இனிய அன்பளிப்பை பிறருக்குக்கொடுக்க நான் எவ்வளவு துஷ்டத்தனம் மிக்கவன் என்பதையும் எண்ணினேன். நறுமணமுள்ள அந்த கேக் என் நினைவில் மீண்டும் வந்தது. என் சித்தி அதைச்சமைக்கும் போதும், அடுப்பிற்குள்ளாக அதை வைத்த போதும், அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியும், ஆர்வமும் எனக்கு நினைவுக்கு வந்தது. அந்த கேக்கின் ஒரு சிறு பகுதியைக்கூட நான் வாயில் போட்டுச்சாப்பிடவில்லை என்பதை அறிந்தால், அவள் எந்த அளவுக்கு ஏமாற்றம் அடைவாள்? என்னுடைய அதிகப்பிரசங்கித்தினமான ஈகை உணர்வும், இடத்திற்குப்பொருந்தாத பாசாங்கான நல்ல சுபாவமும் குறித்து என்னை நானே நிந்தை செய்து கொண்டேன். என் முகத்திற்கு எதிராக முகஸ்துதி செய்த அந்த தலை நரைத்த, வஞ்சகக்கிழவனின் முகத்தை மறுபடி பார்க்க நான் விழையவில்லை.

நமது மூதாதையர்கள், இந்த மென்மையான அப்பிராணிகளை பலியிடும் முறையில், மிக நாசூக்காக நடந்து கொண்டவர்கள். மற்ற நடைமுறையில் இல்லாத பழக்கவழக்கத்தைப்பற்றிக் கேள்விப்படுவதைப்போலவே, பன்றிகள் சவுக்கால் அடித்துக் கொல்லப்படுவதாக நாம் கேள்விப்படுகிறோம். ஒழுக்க நெறியின் காலம் போய் விட்டது. இத்தகைய ஒரு முறை ஏற்கனவே மிருதுவாயும், மன ரம்மியமாகவும் உள்ள இளம் பன்றியின் இறைச்சியைப் பதப்படுத்துவதில் என்ன விளைவை ஏற்படுத்த முடியும், என்று தத்துவார்த்த ரீதியில், ஆவலுடன் வினவ முடியும். அது ஊதா புஷ்பத்தில் நறுமணம் தெளிப்பது போலாகும்.

எனினும், இந்த இரக்கமற்ற செயலைக்கண்டிக்கும் போது, நாம் எந்த விதத்தில் இந்த நடைமுறையைக்கண்டிக்கிறோம் என்பதில் கவனமாக இருக்க வேண்டும். அது ஒரு கூடுதலான ஆர்வத்தை உண்டாக்கக்கூடும்.

நான் பரிசுத்த ஓமர் கல்லூரியில் படித்த பொழுது, கல்வி அறிவோடு, இனிமையாக, இளம் மாணவர்கள் ஒரு கோட்பாடு குறித்து விவாதித்தது நினைவுக்கு வருகிறது. ஒரு பன்றியைச்சவுக்கால் மிக மிக அதிகமாக அடித்துக்கொன்று உண்பதால் உண்டாகும் ருசி, மற்ற விதங்களால் அந்தப்பன்றி கொல்லப்பட்டு சமைக்கப்பட்டால் உண்டாகும் ருசியை விட அதிகமானதா? அது அப்படியெனில், ஒரு மனிதன் அந்த மிருகத்தை அவ்வாறு கொல்வது நியாயமானதா? இதற்குக் கிடைத்த தீர்ப்பை நான் மறந்து விட்டேன்.

பன்றியின் சாறு கருத்தில் கொள்ளத்தக்கது. திட்டமாக சில ரொட்டித்துணுக்குகள், பன்றியின் கல்லீரல் மற்றும் மூளை, கொஞ்சம் வாசமுள்ள பச்சை இலைகள் , - இவைகளைச்சேர்த்து சமைக்கலாம். ஆனால், திருமதி. சமையற்காரி அவர்களே, இந்த வெங்காய வர்க்கத்தையே ஒதுக்கி விடுங்கள். உங்கள் உணவிற்காக, பன்றி மாமிசத்தைப்பொரித்து விடுங்கள். அதில் ஷாலோட்டுகள்[5] அதிகம் இட்டு, தரமான, காரமான வெள்ளைப்பூண்டும் சேர்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் அம்மாமிசத்தை மேலும் கெட்டியாக்கி, மோசமாக்க வேண்டாம். ஆனால், அப்பன்றியை ஒரு பெலவீனமான மலராக நீங்கள் கருதுங்கள்.

------------------------

## குறிப்புகள்

### 1. அபிசீனியா

தற்போது, கிழக்கு ஆப்பிரிக்காவில் உள்ள எத்தியோப்பியா தேசத்திற்கு மறு பெயர்

### 2. லாக்

ஜான் லாக் ( John Locke ) கி.பி. 1632-1704. இங்கிலாந்து நாட்டு தத்துவவாதி. பகுத்தறிவு, மெய்ஞ்ஞானம் எனும் இயக்கத்தை இங்கிலாந்திலும் பிரான்சிலும் துவக்கியவர்.

### 3. பாவம் நோயாகத் தொற்று முன்….

காலரிட்ஜ் எழுதிய 'குழந்தைக்கு ஒரு கல்லறை வாசகம்' என்ற கவிதையின் வரிகள் கையாளப்பட்டிருக்கின்றன.

### 4. எல்லாவற்றையும் கொடுத்து விடுவது

லியர் மன்னன் செய்த செயல். பார்க்க, ஷேக்ஸ்பியரின் 'கிங் லியர்' நாடகம். அங்கம் 2, காட்சி 4, 246-வது வரி

### 5.ஷாலோட்டுகள்

வெங்காய வர்க்கத்தில் ஒரு கிழங்கு



# 6. அந்நாளைய மற்றும் இந்நாளைய பள்ளி ஆசிரியர்கள்

# (*The Old and the new school master*)

என்னுடைய வாசிப்பு என்பது வருத்தப்படக்கூடிய அளவுக்கு ஒழுங்கில்லாததாகவும், விநோதமாகவும், வழமையிலிருந்து விலகியதாகவும் உள்ளது. பழைய ஆங்கில நாடகங்கள், வியாசங்கள் ஆகியவை எனக்கு எண்ணங்களையும், உணர்வுகளின் வழிகளையும் தந்துள்ளது.

விஞ்ஞானத்தைப்பொறுத்த விஷயத்தில், உலகில் மற்றவர்களுக்கு எவ்வளவு அஞ்ஞானம் இருக்கிறதோ, அந்த அளவுக்கு எனக்கும் அஞ்ஞானம் இருக்கிறது. மன்னர் ஜான் அவர்களின் காலத்தில் இருந்த நிலப்பிரப்பிரபுக்கள் மற்றும் நாட்டுப்புற கண்ணியவான்களிடம், எனது கல்வி ஒரு போதும் செல்லுபடியாகவில்லை.

ஆறு வாரம் மட்டுமே கல்வி கற்ற ஒரு பள்ளிக்கூட மாணவனின் பூகோள அறிவை விட எனக்குக்குறைவாகவே தெரியும். என்னைப் பொறுத்தமட்டில், பழைய ஆர்டெலியஸ்[1] வரைந்த பூகோள வரைபடம், ஆரோஸ்மித்[2] வரைந்த பூகோள வரைபடம் போலவே நம்பகத்தன்மை கொண்டது.

ஆப்பிரிக்கா, ஆசியாவுடன் எந்த இடத்தில் ஒன்றிணைகிறது என்று எனக்குத்தெரியது. அந்த இரு பெரிய கண்டங்களில் எத்தியோப்பியா எங்கு உள்ளது என்று எனக்குத்தெரியாது. நியூ ஸவுத் வேல்ஸ்[3] அல்லது வேன் டியமன் நிலம்[4] எங்கு அமைந்துள்ளது என்று ஏதோ மிகக்குறைவாகக் கூட என்னால் ஊகிக்க முடியாது.

எனினும், முன்னே சொல்லப்பட்ட இரு இடமறியா தேசங்களில், முதலாவதாகச்சொன்ன இடத்தில் இருக்கும் என் நண்பருடன், நான் கடிதத்தொடர்பு வைத்துள்ளேன். எனக்கு வானவியல் சாஸ்திரம்

தெரியாது. வானத்தில் கரடிக்கூட்டத்தை[5] எங்கு தேடிப்பார்க்க வேண்டும் என்றோ அல்லது சார்லஸ் வெயின்[6] என்ற நட்சத்திரக்கூட்டத்தின் இருப்பிடம் பற்றியோ எனக்குத்தெரியாது. ஒரு நட்சத்திரத்தின் இருப்பிடம் பற்றியும் என் கண்ணில் தோன்றும் நட்சத்திரங்களின் பெயர்களையும் சொல்லத் தெரியாது. ஒரு கிரகத்தின் பிரகாசத்தைக்கொண்டே அதை சுக்கிரன் என்று அனுமானிக்கிறேன்.

சூரியன், ஒரு நாள் முன்னெச்சரிக்கை செய்து விட்டு மேற்குத் திசையில் முதல் உதயம் செய்யுமென்றால், என்னைச் சுற்றி உள்ள மொத்த உலகும் பயத்தால் மூச்சு வாங்கிக்கொண்டு நிற்கும் போது, நான் மட்டும், ஆர்வமின்மையாலும், கூர்ந்து நோக்கும் சுபாவம் இல்லாததாலும், அச்சமின்றி நின்று கொண்டிருப்பேன் என நம்புகிறேன்.

சரித்திரம் மற்றும் காலம் குறித்து சில தெளிவற்ற தகவல்கள் மட்டும் வைத்துள்ளேன். இது நானாவிதங்களிலும் படித்த போது தவிர்க்க முடியாதபடிக்கு, ஆங்காங்கே பெற்றுக்கொண்டதாகும்.

ஆனால், என்னுடைய நாட்டைப்பற்றிய நாளாகமப்புத்தகத்தை வெகு நிதானமாக உட்கார்ந்து படித்து, அறிந்து கொள்ளவில்லை.

நான்கு பேரரசுகளைப்பற்றிக்கொஞ்சம் தான் எனக்குத் தெரியும். அஸிரியர்கள்[7], சில சமயங்களில் பாரசீகர்கள், என் கண் முன்னே கற்பனையில் பறந்து செல்வதுண்டு. எகிப்து நாட்டினையும், அதனை ஆண்ட அரசர்களான ஆட்டிடையர்களைப்[8] பற்றியும் சில மிகையான யூகங்கள் செய்து கொள்வேன்.

என் நண்பர் தாமஸ் மேன்னிங் அவர்கள், வலிய முயற்சி எடுத்துக் கொண்டு, யூக்லிட்[9] அவர்களைக்குறித்த முதல் கருத்துரையைப்புரிந்து கொள்ள வைத்தார். ஆனால், இரண்டாம் கருத்துரையை எனக்குப் புரிய வைப்பதற்குள் விரக்தியடைந்து, என்னை விட்டு விட்டார்.

நவீன கால மொழிகளுடன் நான் பரிச்சயம் இல்லாதவன். என்னை விட கொஞ்சம் சிறந்த ஒருவரைப்போலவே எனக்குக்'கொஞ்சம் இலத்தீனும், குறைவான கிரேக்க மொழியும்' [10] தெரியும்.

வெகு சாதாரணமான மரங்கள், செடிகள், புஷ்பங்கள் ஆகியவற்றின் தகவமைப்பு குறித்து எனக்கு ஒன்றும் தெரியாது. நான் நகரத்தில் பிறந்தவன் என்பதால் அல்ல – நான் பிறந்த போதே என்னுடன், எதையும் உற்றுப்பாராத மனநிலையையும் இவ்வுலகிற்குக்கொண்டு வந்து விட்டேன். அவைகளை தேவானின் இலைகளடர்ந்த சோலையில்[11] கண்டேன். அதைப்போலவே, எனக்கு நகரத்தில் உள்ள பொருட்கள், உபகரணங்கள், யந்திரங்கள், யந்திர இயக்கங்கள் பற்றியும் ஒன்றும் தெரியாது.

நான் என் அறியாமையில் இருப்பதைப்போலக்காட்டவில்லை. ஏனெனில், என் மூளையில் பல அறைகளும், போதுமான இடமும் இல்லை. நானும் என் மூளைக்கு வலி எடுக்காதபடிக்கு, அதைத்துண்டு துணுக்கான தகவல்களைக் கொண்டு நிரப்பி விட்டேன். இவ்வுலகில், என் பணிப்பயிற்சிக்காலத்தை, என் மிகச்சிறிய அறிவைக்கொண்டு, எந்த விதமான குறைகளும் இன்றி, எவ்வாறு நிறைவு செய்தேன் என சில சமயங்களில் ஆச்சரியப்படுகிறேன். ஆனால், உண்மை என்னவெனில், ஒரு மனிதன், பலவிதமான மனிதர்களுக்கு மத்தியில், தன் சிற்றறிவைக்கொண்டே தன்னுடைய குட்டு வெளிப்படாமல் சமாளித்துவிட முடியும்.

இது எவ்வாறெனில், ஒரு குழுவில், பலரும் தன்னிடமுள்ள விஷயங்களை முன் வைக்க மட்டுமே தயாராய் இருப்பார்களே தவிர, உங்களிடம் வைத்திருக்கும் விஷயங்களைக்கூறும்படி கேட்க மாட்டார்கள். ஆனால், நேருக்கு நேர் என இருவர் உரையாடும்போது, அவ்வாறு நேர்வதற்கு வழியில்லை. உண்மை வெளிப்பட்டு விடும். என்னைப்பற்றி அறிந்திராத, நன்கு கற்றறிந்த மனிதனிடம் நான்

தனியாக ஒரு கால் மணி நேரம் உரையாடும்படி விடப்படுவதைப் பற்றித்தான் நான் மற்ற எல்லாவற்றையும் விட மிகவும் பயப்படுகிறேன். மிகச்சமீபமாக, இது குறித்த இரண்டுங்கெட்டான் நிலைப்பாட்டில் உள்ளேன்.

ஒரு தடவை, என் தினசரி வழக்கப்படி, நான் பிஷப்ஸ்கேட்டுக்கும் ஷேக்கில்வெல்லுக்கும் இடையே கோச் வண்டியில் சென்று கொண்டிருந்த போது, அந்த வண்டி ஓரிடத்தில் நின்றது. முப்பதுகளில் இருக்கும் ஒரு பழைய கர்நாடகத்தனமான ஆள் ஒருவர், அதை நோக்கி நடந்து வந்து வண்டியில் ஏறப் போனார். அப்படி ஏறப்போகும் முன், தன்னுடன் வந்த உயரமான இளைஞன் ஒருவனுக்கு, ஒரு அதிகார தோரணையில் சில உத்தரவுகளைப்பிறப்பித்துக் கொண்டே வந்தார். உடன் வந்த இளைஞன், அவரது குமாஸ்தா போலவோ, மகனைப்போலவோ, அல்லது வேலைக்காரனைப்போலவோ இல்லாமல், இந்த மூன்றும் சேர்ந்த ஒரு ஆள் போலத்தோன்றினான். அந்த இளைஞன் திருப்பி அனுப்பப்பட்டான். எங்கள் பயணம் தொடர்ந்தது.

நாங்கள் இருவர் மட்டுமே கோச் வண்டிக்குள் இருந்த பயணிகள் என்பதால், அவர் என்னை நோக்கிப்பார்த்துத் தன் உரையாடலைத் தொடங்கி வைத்தார். நாங்கள் அந்த கோச் வண்டியின் சௌகரியமான அம்சங்களைக்குறித்தும், அந்த கோச்சு வண்டிக்காரனின் பண்பான நடத்தை மற்றும் காலந்தவறாமை குறித்தும், அடுத்த முனையில், நாங்கள் திரும்பி வரும் போது பயணம் செய்ய மற்றொரு கோச்சு வண்டி ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதன் சாத்தியக்கூறுகளைப்பற்றியும் அவர் கேள்வி கேட்க, நான் அவற்றிற்கெல்லாம், நல்ல திருப்தியான பதில்களைச்சொல்லிக் கொண்டே வந்தேன். ஏற்கெனவே சில வருடங்களாக, முன் சொன்ன இடங்களுக்கு மத்தியில், முன்னும் பின்னுமாக தினசரி பயணம் சென்ற காரணத்தால், இத்தகைய சம்பிரதாயப்பூர்வமான உரையாடலுக்குப்பதில் சொல்ல முடிந்தது.

அவர் என்னை நோக்கி, திடீரென்று, அன்று காலையில், ஸ்மித்.்.பீல்ட் என்ற இடத்தில் கண்காட்சிக்கு வைக்கப்பட்டிருந்த கால்நடைகளை நான் பார்த்தேனா என்று திடுக்கிட வைக்கும் கேள்வி கேட்டார். நான் அதைப்பார்க்கவில்லை என்பதாலும், பொதுவாக அத்தகைய கண்காட்சிகளில் நான் அதிகம் ஈடுபாடு காட்டுவதில்லை என்பதாலும், அதற்கு இல்லை என்று எதிர்மறையாகப்பதில் சொன்னேன்.

அந்த மனிதன், என் பதிலைக்கேட்டு, சற்று திடுக்கிட்டார். அத்துடன் ஆச்சரியமடைந்தார். அவர் அந்தக்கண்காட்சியைக் கண்டு முடித்து விட்டு, அது குறித்த அவரது கருத்துக்களைப்பிறரோடு ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ளும் நம்பிக்கையில் இருந்தார். அக்கண்காட்சி, முந்தின வருடத்தின் கண்காட்சியை விட மிகச்சிறப்பானதாக இருந்ததால், நான் கண்களுக்கு விருந்தான காட்சி ஒன்றைத்தவற விட்டு விட்டதாக அவர் கூறினார். நாங்கள் நார்ட்டன் .்.பால்கேட் என்ற இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தோம்.

அப்போது புதிதான சில பொருட்கள், விலை அட்டையுடன் கடையில் அடுக்கப்பட்டிருந்த காட்சியைக்கண்டார். உடனே, அந்த வசந்த காலத்தில் ,பருத்தியின் விலை மிக மலிவாய் ஆகி விட்டதைப்பற்றி நீண்ட கருத்துரையைப்பொழியத் தொடங்கினார். என்னுடைய காலை நேரத்தில் பணி நிமித்தம் செல்லும் போது இந்தக் கச்சாப் பொருள் குறித்த ஒரு பரிச்சயம் ஏற்பட்டது குறித்து மனதில் ஒரு தூண்டுதல் ஏற்பட்டது. இந்திய வணிகச்சந்தை குறித்து எந்த அளவுக்கு எனக்கு விஷய ஞானம் ஏற்பட்டுள்ளது என ஆச்சரியமடைந்தேன்.

தற்போது இலண்டன் நகரில் உள்ள சில்லறை வர்த்தகம் செய்யும் கடைகளின், கடை வாடகை என்னவென்றும், அது குறித்து எப்போதாவது கணக்குப்போட்டிருக்கிறேனா என்றும் என்னிடம்

விசாரித்து, சிறிது முளை விட்டிருந்த என் தற்பெருமையை தடாலடியாகத்தரையில் அடித்து வீழ்த்தினார் அவர்.

ஒரு வேளை சைரன் கடல் தேவதைகள் பாடும் பாடல் என்னவென்றோ, அக்கிலஸ் என்ன பெயரில், பெண்களின் மத்தியில் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்தான்[12] என்றோ, அவர் என்னைக் கேட்டிருந்தால், சர் தாமஸ் ப்ரெளன்[13] அவர்களுடன் சேர்ந்து, நானும் ஒரு உத்தேசமான விடையைத்தர முயன்றிருப்பேன். என்னுடைய சக பயணி என் தர்ம சங்கடத்தைக்கண்டு கொண்டார். அப்போது ஷோர்டிட்ச் பகுதியில் வறியவர்கள் வாழும் தர்ம சத்திரங்கள் எங்கள் கண்களில் தென்பட்டது.

உடனே அவர், வெகு லாவகமாக பொது தர்மம் செய்யும் விஷயம் குறித்து தமது உரையாடலைத்திசை திருப்பினார். பழைய காலத்தில் வறியவர்களுக்கு குடிமைப்பொருட்களை வழங்கி வந்ததையும், தற்போது உள்ள அதன் நிலைமையையும் ஒப்பிட்டுப்பேசினார். அத்துடன், பழைய காலத்து மத மடாலயங்கள் மற்றும் தர்ம ஸ்தாபனங்களைக்குறித்து எந்த திட்டமான சிந்தனைகளையும், ஒரு கணிப்புக்குக்கொண்டு வருவதற்குப்பதிலாக, நான் பழைய கவிஞர்களின் சங்கமம் குறித்த பிரகாசமான எண்ணங்களால் கவரப்பட்டிருந்தேன் என அவர் கண்டு கொண்டார். அதனால் அந்த விஷயத்தை விட்டு விட்டார். இப்போது கிராமப்புறம் கொஞ்சம், கொஞ்சமாக எங்கள் முன் தோன்ற ஆரம்பித்தது.

என் சக பயணி சென்றடைய வேண்டிய கிங்ஸ்லேண்ட் என்ற இடத்துக்கு அருகில் உள்ள அகன்ற சாலைக்கு எங்கள் கோச்சு வண்டி வந்தது. என் சக பயணி மிக மிக அசௌகரியமாக என்

அறியாமையைக்குத்திக்காட்டும் முகமாக, வட துருவப் பயணம் தொடர்பான சில கேள்விகளை என்னிடம் கேட்டார். நான் அந்த விசித்திரமான பிரதேசங்களின் அகன்ற சித்திரங்களைக்குறித்து ஏதோ

அவரிடம் முணுமுணுத்துக்கொண்டே அவர் கேட்ட கேள்வியைத் தடுத்து, திசை திருப்பி பதில் சொல்லிக்கொண்டிருந்தேன்.

கோச்சு வண்டி நின்றது. மேலும் பல எண்ணங்களைத்தொடரத் தேவையின்றி எனக்கு விடுதலை கிடைத்தது.

என் சக பயணி, கோச்சு வண்டியை விட்டு வெளியேறி, என்னை அறியாமையின் அசௌகரியமான பிடியில் விட்டு விட்டுச்சென்றார். அவர் வெளியேறிய பின்பு, அதே வண்டியை விட்டு வெளியேறிய மற்றொரு பயணியிடம், டால்ஸ்டன் பகுதியில் பெருவாரியாகப்பரவும் தொற்று நோய் குறித்துக்கேள்விகள் கேட்டார். என் சக பயணி அந்தச்சுற்று வட்டாரத்தில் உள்ள ஐந்தாறு பள்ளிகளைச் சென்று பார்வையிட்டதாகவும் கூறினார். என்னுடைய சக பயணி ஒரு பள்ளிக்கூட ஆசிரியர் என்ற உண்மை அப்போது தான் எனக்குப் பளீரெனத் தெரிந்தது. அவரை வண்டியில் ஏற்றி, வழியனுப்பி விட வந்தவன் ஒரு வேளை அவருடைய பழைய மாணவனாகவோ அல்லது வீட்டு வாயிற்காவலனாகவோ இருந்திருக்கலாம்.

அவர் ஒரு நல்ல மனதுடைய மனிதர். அத்துடன் அவர் உரையாடலைத்தூண்டுவதற்காகக்கேள்விகளைக் கேட்க விரும்பவில்லை என்பதுடன் அக்கேள்விகளுக்கான பதில்களை மாத்திரம் எப்படியாவது பெற்று விட வேண்டும் என்பதில் குறியாய் இருந்தார்.

அவர் அத்தகைய கேள்விகளைத்தொடுத்ததற்கான காரணம், ஏதாவது கேள்வி கேட்க வேண்டும் என்பதற்காக அல்ல. மாறாக, எவ்விதத்திலாவது அறிவைத்தேடுவதற்காக. அவர் ஒரு பச்சை நிற மேலங்கி அணிந்திருந்ததால், அவர் ஒரு பாதிரியார் என்று நான் கருத வழியில்லை. இந்த அசாதாரணமான நிகழ்வு, இந்தத் தொழிலில் இருந்த அந்நாளைய ஆசிரியர்களுக்கும், இந்நாளைய

ஆசிரியர்களுக்குமான இடைவெளியைக்குறித்துச் சில சிந்தனைகளைத் தந்தது.

பழைய காலத்து ஆசிரியர்களின் ஆன்மாக்கள் சாந்தி கொள்வதாகுக!! அந்த இனமே நெடு நாளைக்கு முன்பு அழிந்து விட்டது ! கல்வி என்பது தாங்கள் பயிற்றுவித்த மொழிகளில் தான் இருக்கிறது என்று நம்பிய லில்லிஸ் மற்றும் லினாக்ரஸ்[14]. மொழிகள் தவிர்த்த மற்ற எல்லாத்துறைகளின் ஞானத்தையும், அற்பமாகவும், பயனற்றதாகவும் அவர்கள் கருதினார்கள். அவர்கள் தங்களது பணிக்கு வரும்போது, மிகவும் விளையாட்டுப்போக்காக வந்தார்கள்.

சிறு வயது முதல், வளர்ந்த பருவம் வரை, அவர்கள் ஒரு செம்மொழிப்பள்ளியிலேயே தங்கள் காலத்தைக்கனவு போலக்கழித்தார்கள். அவர்கள், இலக்கணத்தில் வேற்றுமை பாகுபாடு, வினைச்சொல்லின் பல கால உருவங்கள், மொழியின் சொற்றொடரியல் மற்றும் செய்யுள் இலக்கணம் என்று தொடர்ச்சியாக இந்த வட்டத்துக்குள்ளேயே சுழன்று சுழன்று கொண்டிருந்தனர்.

கல்வி கற்கும் இளமைக்காலத்தில், தங்களுக்கு உற்சாகமூட்டிய தங்கள் துறையின் விஷயங்களைத்தொடர்ச்சியாகப்புதுப்பித்துக் கொண்டனர். பழைய கல்வியில் மீண்டும் மீண்டும் பயிற்சி எடுத்துக் கொண்டனர். வாழ்வே அவர்களை விட்டு ஒரு நாள் நழுவிப் போயிருக்க வேண்டும். ஆனால், அவர்கள் தங்களின் முதல் தோட்டத்திலேயே தங்கியிருந்து, அவர்களின் பொற்காலத்தில் விளைந்த மலர்களையும், தானியங்களையும் அறுவடை செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அந்த ஆர்கேதியாவிலேயே[15] இருந்தார்கள். ஆனால், அவர்கள் மன்னர்கள். அவர்களது பிரம்பு மிகவும் முரட்டுத்தனமாக தண்டிக்காது. ஆனால், பேசிலியஸ்[16] மன்னனின் சாந்தமான செங்கோல் போல பெருந்தன்மை கொண்டது. அவர்களது இலத்தீன் மற்றும் கிரேக்க மொழித்திறம் என்பது பமீலா மற்றும் ∴பிலோக்லா[17] போன்று

கம்பீரமானது. அதில், அவ்வப்போது புதிதாய்க்கற்றுக்கொள்ளும் மாணவனின் மக்குத்தனமும் வந்து குறுக்கிட்டு, மாப்ஸா மற்றும் கோமாளி டமீட்டஸ்[18] ஆகியோரின் புத்துணர்வூட்டும் நகைச்சுவையும் இடையில் வந்து சேரும்.

காலட் இலக்கண நூலுக்கு (அல்லது சில சமயங்களில் அது அழைக்கப்படும் வண்ணமாக) பவுல் பள்ளி செம்மொழி இலக்கண நூலில் எவ்வளவு ருசியாக முகவுரை எழுதப்பட்டுள்ளது !

"பெரும் பொக்கிஷம் போல், நிரம்பிய ஞானமும், அறிவும் கொண்டுள்ள செம்மொழிகளின் இலக்கணத்தைக்கற்று அம்மொழிகளை அறிந்து கொள்ள விரும்பும் ஒவ்வொருவருக்கும் அறிவுறுத்துவதற்காக. இது வீணான, பயனற்ற செயல் போலத் தோன்றும். ஏனெனில், மிகக்கொஞ்சமாகவும், தவறாகவும் உள்ள அந்தக் கல்வியின் துவக்கத்தால், நாம் எந்த அளவிற்குக் கற்றுக் கொண்டாலும், அதற்கு ஒரு முடிவு என்பதைக்காண முடியாது. எந்த ஒரு கட்டிடமும் மிக நேர்த்தியானதல்ல. அதன் அடித்தளமும், தரைத்தளமும், அதன் மேல் கட்டுமானத்தின் கனம் தாங்காமல் எந்நேரமும் விழுந்து விடக்கூடும் ".

இது எத்தனை கம்பீரமான முகவுரை! ("இது ஸாஸன் அல்லது ஸைகர்கஸ்[19] பிரகடனம் செய்த ஒரு பவித்திரமான சட்டத்திற்காக முன்மொழியப்பட்ட முகவுரை போல இருக்கிறது" என்று மில்டன் புகழுவதைப் போல இருக்கிறது ). இது எந்த அளவிற்கு அதே தூய ஆர்வத்தைச்சித்தரிக்கிறது. அம்முகவுரையில் அடுத்து வரும் வரிகளில்

"இலக்கணங்களில் பாட பேதங்கள் இருப்பதைப் பொறுத்தமட்டில், அதில் உள்ள அசௌகரியத்தை முன்னரே கண்டறிந்து, அதற்கு நம் மாட்சிமையான மன்னரின் ஞானத்தால், நிவாரணம் தரப்பட்டுள்ளது. பல திறப்பட்ட ஆசிரியர்களும் சேர்ந்து ஒரு இலக்கண நூலைத்திறம்பட திட்டமிட்டு எழுதி, அதையே கற்போரின் பயன்பாட்டிற்காக எல்லா

இடங்களுக்கும் தருவது என்ற திட்டமே ஆகும். ஏனெனில், பள்ளி ஆசிரியர்களின் இட மாறுதலினால் ஏற்படும் இடர்ப்பாட்டை நீக்கவும் இது பயன்படும்."

அத்துடன் அம்முகவுரையில் தொடரும் வரிகளில் எத்தனை உற்சாகம்!

"இதனால் இலக்கண ஆசிரியர் ஒரு நேர்த்தியுடன், அவரது பெயர்ச்சொல்லில் ஏற்படும் இலக்கண வேற்றுமைப்பாகுபாடுகளைக் கற்பிக்க முடியும் ".

அவரது பெயர்ச்சொல்!! இந்த அற்புதக்கனவு, அதி விரைவாகக்கலைந்து கொண்டிருக்கிறது. இலக்கண விதிகளைப்பதிய வைப்பது இந்நாளைய ஆசிரியரின் மிகச்சிறு அக்கறையாய் இருக்கிறது.

இந்நாளைய ஆசிரியர், எல்லா விஷயங்களிலும், கொஞ்சம் கொஞ்சம் தெரிந்திருக்க வேண்டும். ஏனெனில், அவரது மாணவர் எந்த விஷயத்தைக்குறித்தும் முழுமையான அஞ்ஞானத்தில் இருக்கக்கூடாது. அவர் எல்லா விஷயங்களிலும், அற்ப ஞானமுள்ளவராய் இருக்க வேண்டும். அவர் காற்றின் இயக்கத்தைப்பற்றிக்கொஞ்சம் தெரிந்து வைத்திருக்க வேண்டும். அதே போல் இரசாயனத்தில் கொஞ்சம். எவையெல்லாம் ஆர்வத்தைத் தூண்டக்கூடியதோ அவற்றிலெல்லாம்.

அல்லது இளைஞரின் மனத்தைக்கவரக்கூடிய எதுவானாலும். இயந்திர இயக்கம் பற்றிய அறிவு விரும்பத்தக்கது. புள்ளியியல் பற்றிக்கொஞ்சம். மண்ணின் தன்மை பற்றிக்கொஞ்சம். மற்றும் இத்தியாதி இத்தியாதிகள். தாவரவியல், அவரது நாட்டின் அரசியலமைப்புச்சட்டம், இன்னும் அநேக விஷயங்கள். ஒரு ஆசிரியரின் கடமை பற்றி நீங்கள் அறிய வேண்டுமானால், திரு. சாமுவேல் ஹாட்லிப்[20] அவர்களுக்குச்சமர்ப்பணம் செய்யப்பட்ட கல்வி குறித்த கட்டுரையைப்பார்க்க வேண்டும்.

இவை யாவும், அல்லது இவை குறித்த ஆர்வத்தினை, அந்த ஆசிரியர் தனது பாட போதனையின் போது கற்பிக்க அல்ல. (பாட போதனைக்கு அவர் சம்பளம் பெற்றுக் கொள்ளலாம்).

மாறாக, பள்ளி இடைவேளைகளில், வீதிகளில் மாணவன் நடந்து போகும்போது, அல்லது இயற்கையான ஆசிரியர்களான பச்சைப்புல்வெளி நிலத்தில் தனது மாணவர்களுடன் காலாற நடந்து செல்லும் போது கற்பிக்க வேண்டும். பள்ளி நேரங்களில் அவரிடம் எதிர்பார்க்கப்படுவது மிகக்குறைவே. ஓய்வான தருணங்களில், அவர் அறிவைப்புகட்ட வேண்டும். எல்லாத் தருணத்தையும், வருடத்தின் எல்லாக் காலங்களையும் ஒரு நாளின் எல்லா நேரத்தையும் அவர் போதிக்க பயன்படுத்திக்கொள்ள வேண்டும். கடந்து செல்லும் ஒரு மேகம். ஒரு வானவில், ஒரு வைக்கோல் ஏற்றிய வண்டி, ஒரு சேனை வீரர்களின் ராணுவ பட்டாளம், ஆகியவற்றைப்பார்த்து, அது குறித்து ஏதாவது பயனுள்ளதை மனதில் பதிய வைக்க வேண்டும். அவர் இயற்கையை இயல்பாக ஒரு பார்வையிட்டு, அதிலிருந்து இன்பம் பெற இயலாது. மாறாக, அதை ஒரு பயிற்றுவிக்கும் சாதனமாகக்கையாள வேண்டும்.

அழகை, கண்ணுக்கினிய காட்சியென அர்த்தம் சொல்ல வேண்டும். ஒரு பிச்சைக்காரனையோ, ஒரு நாடோடியையோ உரிய விதத்தில் முன்னேற்றலாம் என எண்ணம் கொள்ள முடியாது. அவருக்கு வருகின்ற எதுவும் சீரிய ஒழுக்கம் எனும் சௌகரியமான வழியின் மூலமாகப் பாழ்படுத்தப்படாமல் வராது.

உலகம் ஒரு பிரம்மாண்டமான புத்தகம் என அழைக்கப்படுகிறது. அது ஆசிரியரது நோக்கங்கள், குறிக்கோள்களைப் பொறுத்தமட்டில் ஒரு புத்தகம். அதிலிருந்து எண்ணற்ற தொல்லை தரும் உபதேசங்களை, விருப்பமில்லாத மாணவர்களுக்கு வாசித்துக்காட்ட வேண்டும். அவருக்கு கோடை விடுமுறை என்றெல்லாம் ஒன்றுமில்லை.

அவர் பணியில் இருந்ததை விட மிக மோசமான நிலையில் விடுமுறையில் இருப்பார். அவரிடம் அந்நேரத்தில், எல்லாவற்றிலும் தலையிடும் ஒரு மேல் வகுப்புப்பையன் அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பான். அல்லது பெரிய குடும்பத்தின் இளைய மகன் அல்லது உயர்ந்த குடும்பத்தின் முட்டாள் இளைஞன் அல்லது அந்த வம்சத்தின் ஒரு பையன், இவர்களில் யாரையாவது ஒருவரைத்தன் பின்னால் சேர்த்துக்கொண்டு விளையாட வேண்டும். அல்லது ஓவியக் கண்காட்சிக்குக்கூட்டிக் கொண்டு போக வேண்டும். அல்லது திரு. பாட்லேவின் ஆரரரி காட்சிக்கோ[21], பேனாப்டிகான் காட்சிக்கோ[22] கூட்டிக்கொண்டு செல்ல வேண்டும்.

அல்லது கிராமப்புறத்துக்கோ, நண்பரின் வீட்டுக்கோ அல்லது அவருக்குப் பிடித்தமான நீரூற்றுக்கோ கூட்டிக் கொண்டு போய்க்காட்ட வேண்டும். அவர் எங்கு சென்றாலும், இந்த சங்கடமான (இவர்களின்) நிழல் அவரைத்தொடரும். அவர் வண்டியில் பிரயாணம் போனாலும், அவர் நடைபாதையில் போனாலும், அவரது எல்லா நடமாட்டங்களிலும் ஒரு பையன் அவரோடு வருவான்.

சிறு பையன்களின் தொடர்ச்சியான தொந்தரவால், அவர் களைத்துப்போய் விட்டார். மாணவர்களின் சக தோழர்களின் மத்தியில், அம்மாணவர்களே முக்கியமானவர்கள் ஆவார்கள். ஆனால், அவர்கள் வளர்ந்த பெரியவர்களுக்குச்சரியான துணைவர்கள் ஆக மாட்டார்கள். இந்தக்கட்டுப்பாடு இரு புறமும் உணரப்படுகிறது. ஒரு குழந்தை கூட ஒரு மணி நேர விளையாட்டிற்குப்பின் சோர்ந்து விடுகிறது.

நகரிலிருந்து வெகு தொலைவிற்கு விலகிச்சென்று விட்ட படியால், இனிமையாகி விட்ட புறநகரில் உள்ள ஷேக்கில்வெல் என்ற இடத்தில் உள்ள ஏகாந்தமான ஒரு வீட்டில் ஆழ்ந்த எண்ணங்களில் அமர்ந்திருக்கிறேன். வீட்டின் ஜன்னலின் வெளியே சிறு குழந்தைகள் தங்களுக்கே உரித்தான சுய விருப்பங்களோடு விளையாடுவதும்,

சப்தமிடுவதுமாக உள்ளனர். எனக்கு அந்த சப்தங்கள் எல்லாம் இடைவெளி விட்டு இடைவெளி விட்டுக்கேட்கின்றன.

அந்த சப்தங்கள், என் பணியின் கடும் வலியினை, விளக்கவியலாதபடிக்கு எடுத்துச் சென்று விடுகின்றன. அது இசைக்கேற்றவாறு பாடலைப்புனைவது போன்றது. அது அவ்வாறு செய்யத்தான் செய்யும். ஏனெனில், சிறு குழந்தைகளின் குரலில் ஒரு விதக்கவிதை இருக்கிறது. ஒரு மனிதனின் உரையாடலில் உள்ள கரடுமுரடான உச்சரிப்புகளைப்போல அது இல்லை. நான் அவர்களது பொழுதுபோக்கில் கலந்து கொள்வது என்பது அவர்களது விளையாட்டைக்குலைத்து, எனக்கு அவர்கள் மேல் உள்ள இரக்கத்தை இல்லாமல் செய்வதாகும்.

என்னை விட அதிக திறமை படைத்தவர்களின் முன்னே, காலமெல்லாம் என்னையே அடக்கிக்கொண்டிருக்க மாட்டேன். நான் என்னையே அறிந்து கொண்டதால் அவர்களைக் குறித்த பொறாமையோ அல்லது சுய ஒப்பீடு செய்ய முனைவதோ என்பதற்காக அல்ல.

எப்போதாவது அத்தகைய அறிவாளிகளுடன் கலப்பது என்பது எனக்கு அதிர்ஷ்டவசமாகவும், சந்தோஷமானதாகவும் அமைந்திருக்கிறது. ஆனால், தொடர்ச்சியாக, உங்களை விட மேலானவர்களிடம் உறவாடும்போது, அது உங்களைக்கீழேயே வைக்கிறது.

பிறருடைய சுயமான சிந்தனைகள் உங்களுக்கே உரித்தான குறைந்த அளவு அறிவைக்கட்டுப்படுத்துகிறது. அவரது எண்ணங்களில், உங்களை நீங்களே இழந்து, இன்னொரு மனிதனின் மனத்திற்குள் சிக்கிக்கொள்கிறீர்கள். ஒரு உயரமான வேலைக்காரனுடன் நீங்கள் நடந்து செல்லும் போது, அவனது

அகலக்கால் நடை, உங்களை விட வேகமாக இருப்பதால், நீங்கள் மனச்சோர்வு கொள்கிறீர்கள். அவ்வண்ணமே நல்ல திடமான அறிவைக் கொண்டவரின் தொடர்ச்சியான தாக்கத்தால், நான் அறிவில்லாதவனாக ஆக்கப்படுவேன் என நம்புகிறேன். நீங்கள் பிறரிடமிருந்து எண்ணங்களைப்பெற்றுக்கொள்ளலாம். ஆனால், அந்த எண்ணங்களை அச்சில் வார்க்கும் போது, அந்த அச்சு முழுக்க உங்களுடையதாக இருக்க வேண்டும். அறிவு புகட்டலாம். ஆனால், ஒவ்வொரு மனிதனின் அறிவுச்சட்டகமும் புகட்டப்படலாகாது.

நான் உயரே தூக்கப்பட்டு மேலே உயர்த்தப்படுவதை விரும்பாததைப்போலவே, என் சக ஆட்களால், என் வளர்ச்சி மட்டுப்படுத்தப்படாமல் இருப்பதையும் விரும்புகிறேன்.

காதில் கேட்கப்படும் மிகச்சிறிய முணுமுணுப்பு கேளாமல் இருப்பதால், உங்களுக்கு ஏற்படும் எரிச்சலை விட, எக்காள சத்தத்தின் கடும் ஒலி உங்களைத்திடுக்கிட வைக்கப்போவதில்லை.

நாம் நமது பள்ளிக்கூட ஆசிரியரின் முன்னே ஏன் சகஜமாக இல்லாமல் இருக்கிறோம்? ஏனெனில், அவர் நம்மிடையே சகஜமாக இல்லை என்பதை உணர்வதால் தான். அவர், மற்றும் அவரையொத்தவர்கள் இருக்கும் குழுவிலே, மிக மோசமானவராக இருப்பார். குள்ளர்களின் மத்தியில் வரும் கல்லிவர்[23] போல அவர் உங்கள் மத்தியில் வருகிறார். அவரது புரிந்து கொள்ளும் ஸ்திதியும், உங்களது ஸ்திதியும் சமமல்ல. அவர் உங்களைச்சமதளத்தில் சந்திக்க இயலாது.

திறனில்லாதவன் சீட்டாட்டத்தில் சலுகைகள் எதிர்பார்ப்பது போல, அவர் உங்கள் தயவை நாடுகிறார். அவருக்குப்பயிற்றுவித்தல் என்பது நன்கு தெரியும் என்பதால், அவர் உங்களுக்குப்பயிற்றுவிக்க விரும்புகிறார்.

இத்தகைய ஆசிரியர்களில் ஒருவரிடம் நான் சென்று, என்னுடைய குணச்சித்திரம் குறித்த எழுத்துக்கள் ஒரு ஒழுங்கில்லாமல் இருப்பதாகவும், அவற்றை வேறு விதத்தில் நேர்த்தியாக்க என்னால் இயலவில்லை என்றும் சொன்னேன். அதற்கு அவர், துறவி மடத்தில் இருக்கும் இளைஞர்கள் ஆங்கில இசையைத்தொகுப்பதற்கு எவ்வாறு பயிற்றுவிக்கப்படுகிறார்கள் என்று எனக்கு சொல்லித்தர முன் வந்தார்.
ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் செய்கைகள் முரட்டுத்தனமாக அல்லது மென்மையாக இருக்கும். அவை பள்ளிக்கூடத்துக்கு வெளியே செல்லுபடியாகாது. அவர் ஒரு சம்பிரதாயமான கட்டுக்குள்ளும், ஒரு குழுவில் இருக்கும் போது போதனையில் பாசாங்கு செய்பவராகவும், ஒழுக்க நெறிக்குக்கட்டுப்பட்ட மத குருவைப்போலவும் இருக்கிறார். ஒரு மத குரு பிறரைச்சார்ந்திருப்பது போல, ஒரு ஆசிரியர் சமூகத்தில் தன் அறிவைக்கட்டற்று அவிழ்க்க இயலாது. தன் சம வயதினர் மத்தியில், அவர் கதியற்றுக்கைவிடப்பட்டவர். அவரை விட, இளையவர்கள் மத்தியில், அவர் அவர்களின் நண்பர் இல்லை.

ஆசிரியத் தொழிலில் விவேகமுள்ள ஒருவர், தான் பெரிதும் மதித்த ஒரு இளைஞன், பள்ளியை விட்டு திடீரென்று இடை நின்றதைப்பற்றி எழுதும் போது, "உமது மருமகன் என்னிடத்தில் அதிகம் ஈடுபாடு காட்டவில்லை. ஆனால், என்னைப்போன்ற தொழில் செய்வோர்கள், பிறர் எண்ணுவதை விட மிகவும் பரிதாபப்படத்தக்கவர்கள். இளைஞர்களால், நாங்கள் சூழப்பட்டிருக்கிறோம். அவர்கள் அதிக ஊக்கத்துடன் பிரியமாக இருப்பவர்கள். ஆனால், அவர்களது பிரியத்தை நாங்கள் பங்கிட்டுக்கொள்ள முடியாது. எங்களது ஆசிரியர் – மாணவன் என்ற உறவு இதைத் தடுக்கிறது. இது உங்களுக்கு எவ்வளவு இன்பமூட்டுவதாக இருக்கிறது?! உங்கள் உணர்வுகளைக் குறித்து நான் எவ்வளவு பொறாமைப்படுகிறேன்!

என் நண்பர்கள், என் மேல் பொறாமை கொள்வதாக சில சமயம் என்னிடம் சொல்வதுண்டு. நான் பாடம் போதித்த பையன்கள், பள்ளியை

விட்டுச்சென்று பல வருடங்களுக்குப் பின்பு, கண்களில் ஆனந்தத்தோடு தங்கள் பழைய பள்ளி ஆசிரியருடன் கை குலுக்கி, அவருக்குத் தாங்கள் கொண்டு வந்த பரிசைக்கொடுத்து விட்டு, பிறகு அவரது மனைவிக்கு ஏதாவது அலங்காரப்பொருட்களைப்பரிசளித்து விட்டு, தாங்கள் அவரிடம் படித்த போது, தங்கள் கல்வியைக்குறித்து அக்கறை எடுத்துக்கொண்டதற்காக சிரத்தையாக நன்றியும் சொல்கிறார்கள்.

ஒரு நாள் விடுமுறை கேட்கிறார்கள். உடனே, வீடு அமர்க்களமாகி விடுகிறது. நானோ சோகமாக இருப்பேன். இந்த அதி உற்சாகமான துடிப்புள்ள இளைஞன், தன் ஆசிரியர், தான் ஒரு மாணவனாக இருந்த போது, தன்னைக் குறித்து அக்கறை எடுத்துக்கொண்டதற்காக அவருக்கு நன்றி செலுத்துவதாக எண்ணிக்கொள்கிறான். எட்டாண்டுகள், நான் ஒரு தகப்பனுடைய ஆவலாதியோடு, அவனைக் கண்காணித்ததை வெறும் உண்மையான உணர்வினால் மட்டும் அந்த நன்றியைத்திருப்பிச் செலுத்த முடியாது.

நான் அவனைப்புகழ்ந்த போது, அவன் கர்வம் கொண்டான். அவனைக் கடிந்து கொண்ட போது, அவன் என் மேல் அன்பு செலுத்தவில்லை. இப்போது அவன் எனக்கு அன்பும், நன்றியுணர்வும் காட்டுவதாக தவறாக நினைத்துக்கொண்டிருக்கிறான். அது ஒரு நல்ல மனதிற்கு ரம்மியமான உணர்வே. எல்லோரும், தான் சிறு பிள்ளையாய் நம்பிக்கைகளுடனும், அச்சங்களுடனும் வளர்ந்த இடங்களை மீண்டும் பார்க்கப்போகும் போது, இத்தகைய உணர்வு தோன்றும்.

தனக்குச்சமமான ஸ்திதியில் இருக்கும் இன்னொருவரை மிகுந்த மரியாதையுடன் பார்ப்பதற்குப்பழகியிருப்பார்கள். இந்தக்கடிதம் எழுதியவர் மேலும் சொல்கிறார் "என் அன்பு நெஞ்சம் அன்னா, ஒரு பள்ளிக்கூட ஆசிரியரின் மனைவி. நான் அவளைத்திருமணம் செய்த போது, ஒரு ஆசிரியரின் மனைவி சுறுசுறுப்பான ஜீவனாய் இருக்க வேண்டும் என்பதால், எனது துடிப்பான அன்பு அம்மாவின் இடத்தை, அன்னா ஒரு போதும் நிரப்ப மாட்டாள் எனப்பயந்தேன்.

அது என் அம்மா இறந்து போயிருந்த சமயம். என் அம்மா ஒரு போதும் ஒரு இடத்தில் உட்கார மாட்டாள். ஒரு நொடியில் வீட்டின் எல்லா இடத்திலும் இருப்பாள். அவர் சோர்வடைந்து இறந்து போகக்கூடாது என்பதால், அவளை ஒரு நாற்காலியோடு கட்டிப்போடுவதாக அச்சமூட்டியிருந்தேன். என் மனைவிக்குப் பொருத்தமில்லாத வகையில், அவளை ஒரே விதமான வீட்டு வேலை எனும் வாழ்க்கைக்குள் கொண்டு வருவதைப்பற்றி என் அச்சங்களைத் தெரிவித்தேன்.

ஆனால், என் மனைவியோ, மிக மிருதுவாக என் மேல் அன்பு செலுத்தினாள். தனது புதிய சூழலில் உள்ள கடமைகளை கடும் முயற்சி செய்து நிறைவேற்றுவதாக உறுதி தந்தாள். அவள் உறுதி தந்த வண்ணமே நடந்து கொண்டாள். பெண்ணின் அன்பு செய்யாத அற்புதங்கள் தான் என்ன? என் வீடு மிக்க ஒழுங்கோடும், சீலத்தோடும் பராமரிக்கப்படுகிறது.

இது பிற பள்ளிகளில் காண முடியாதது. என் மாணவர்களுக்கு நன்கு உணவு வழங்கப்படுகிறது. அவர்கள் ஆரோக்கியமாகத் தோன்றுகிறார்கள். அவர்களுக்கும் போதுமான உறைவிட வசதி உள்ளது. இவை யாவும் பொருள் சிக்கனத்தோடும் செய்யப்படுகிறது. ஆயினும், இது கருமித்தனத்திற்கு தாழ்ந்து போவதில்லை.

அந்தோ! என் இனிய அன்னாவை நான் இழந்து விட்டேன். நாங்கள் ஒரு கடினமான நாள் பொழுதிற்குப்பின்னால், களைப்பைப்போக்கிக் கொள்ள ஒரு மணி நேரம் ஓய்வு எடுக்கும் போது, அவளிடம், அன்றைய தினத்தில் செய்த பயனுள்ள பணிகள் என்னென்ன என்று கேட்பேன். அத்துடன் மறு நாள், அவள் என்ன வேலை செய்யத் திட்டமிட்டிருக்கிறாள் என்றும் கேட்பேன்.

அவளது கடமைகளின் சூழ்நிலையால், அவளது மனமும், அவளது உடலும் மாறுகின்றன. மாணவர்களுக்கு அவள், ஆசிரியரின் மனைவி என்பதைத்தவிர வேறொன்றுமில்லை. அவள் என்னைப் பார்க்கும் போது, மாணவர்களின் ஆசிரியராகப்பார்க்கிறாள். என்னிடத்தில் மிகையான அன்பும், பாசமும் வைப்பது சரியானதல்ல. அது அவளது மற்றும் எனது கண்ணியத்திற்கு பொருத்தமில்லாத ஒன்று.

இருப்பினும், அவளுக்காக நான் கொள்ளும் நன்றியுணர்ச்சி, அவளிடம் குறிப்பாக எதையோ சொல்வதைத்தடுத்து விடுகிறது. எனக்காக, அவள் தன்னையே மாற்றிக்கொள்ள ஒப்புவித்தாள். அதற்காக அவளை நான் நிந்திக்கலாமா?" இந்தக் கடிதத்திற்காக நான் எனது பெரியப்பா மகள் ப்ரிட்ஜெட் என்பவருக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்.

-----------------------

## குறிப்புகள்

### 1. ஆர்டெலியஸ்

ஆபிரகாம் ஆர்டெல். கி.பி. 1527 – 1598. ஆன்ட்வெர்ப் பிரதேச பூகோளவியலாளர்

### 2. ஆரோஸ்மித்

ஆரோன் ஆரோஸ்மித். கி.பி. 1750 – 1823. துர்ஹாம் பிரதேசத்தைச் சேர்ந்தவர் புகழ் பெற்ற பூகோளவியலாளர். சரியான உலக வரைபடத்தைத்தயார் செய்தவர்.

### 3. நியூ ஸவுத் வேல்ஸ்

ஆஸ்திரேலியாவின் தென் பகுதியில் உள்ள ஒரு மாகாணம்.
இதனைக்கண்டுபிடித்தவர் கேப்டன் குக்.

### 4. வேன் டியமன் நிலம்

டாஸ்மேனியா பிரதேசத்தின் பழைய பெயர். டாஸ்மேனியா, ஆஸ்திரேலியா கண்டத்தில் உள்ள ஒரு தீவு.

### 5. கரடிக் கூட்டம்

வானில் தோன்றும் ஒரு நட்சத்திரக்கூட்டம்

### 6. சார்லஸ் வெயின்

பெரிய கரடி என்னும் நட்சத்திரக்கூட்டத்திற்கு இன்னொரு பெயர்.

### 7. அஸிரியர்கள்

தற்போது உள்ள ஈராக்கின் வட பகுதியில் வாழ்ந்தவர்கள், 'அஷீர் என்ற கடவுளின் தேசம் ' எனப்பொருள்படும் கிரேக்க வார்த்தை தான் அஸிரியா.

### 8. அரசர்களான ஆட்டிடையர்களை …

ஹிக்ஸாஸ் எனும் அரேபிய பழங்குடி இனம், எகிப்து தேசத்தை கி.மு. 2080 முதல் சுமார் 260 வருஷங்களுக்கு ஆண்டதாக சில சரித்திர ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

**9. யூக்லிட்**

மெகாரா எனும் இடத்தில் பிறந்த கிரேக்க தத்துவ ஆசிரியர். காலம் கி.மு. 450 – 368. சாக்ரடீஸ் கொல்லப்படும் போது ஏதென்ஸ் நகரில் உடன் இருந்தவர்.

**10. கொஞ்சம் இலத்தீனும், குறைவான கிரேக்க மொழியும்**

பென் ஜான்சன் எழுதிய வரிகள்

**11. இலைகளடர்ந்த சோலையில்**

வில்லியம் வேர்ட்ஸ்வர்த் எழுதிய *பிரயாணம்* எனும் கவிதையிலிருந்து

**12. அக்கிலஸ்**

அக்கிலஸ் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்தான். ட்ராய் நகரை முற்றுகையிடும் போருக்கு, கிரேக்கர்களுடன் சேர்ந்து அக்கிலஸ் செல்வதைத்தடுக்க, அவனது தாய், அவனை ஸ்கைராஸ் தேசத்தின் அரண்மனைக்குள் ஒளித்து வைத்தாள்.

**13. சர் தாமஸ் ப்ரௌன்**

'அஸ்திக்கலசத்தைப் புதைத்தல்' என்ற நூலில் சர் தாமஸ் ப்ரௌன் என்பவர் புதிரான, தெரியாத கேள்விகளைக்குறித்துச்சொல்கிறார். அவை யாவன : 1) சைரன் தேவதைகள் பாடிய பாடல் என்ன? 2) அக்கிலஸ் பெண்களுக்கு மத்தியில் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்த போது அவனது பெயர் என்ன?

**14. லில்லிஸ் மற்றும் லினாக்ரஸ்**

வில்லியம் லில்லி -- கி.பி. 1465 – 1522. இலத்தீன், கிரேக்க மொழிகளில் (செம்மொழிகள்) நிபுணர். இலண்டன் பரிசுத்த பவுல் பள்ளியின் முதல் ஆசிரியர்.

**15. லினாக்ரஸ்**

தாமஸ் லினாக்ரஸ். காலம் கி.பி. 1460–1524. மருத்துவர். ஆக்ஸ்.ஃபோர்ட் பல்கலைக்கழகத்தில் கிரேக்க மொழி பயிற்றுவித்தார்.

**16.ஆர்க்கேதியா**

தென் கிரேக்கத்தீபகற்பத்தில் உள்ள ஆர்க்கேதியா பிரதேசம் அமைதியான நாட்டுப்புற வாழ்க்கையின் குறியீடாக மாறி விட்டது.

**17.பேசிலியஸ்**

சர் பிலிப் ஸிட்னி எழுதிய 'ஆர்க்கேதியா' எனும் நாட்டுப்புறக் கவிதையில் குறிப்பிடப்படும் அரசன்

**18.பமீலா மற்றும் ∴பிலோக்லா**

சர் பிலிப் ஸிட்னியின் 'ஆர்க்கேதியா' கவிதையில் குறிப்பிடப்படும் கதாபாத்திரங்கள்

**19.மாப்ஸா மற்றும் கோமாளி டமீட்டஸ்**

ஷேக்ஸ்பியரின் 'கார் காலக்கதை' எனும் நாடகத்தில் தோன்றும் ஆட்டிடையர்கள்

**20.ஸாலன் அல்லது லைகர்கஸ்**

ஸாலன் (கி.மு. 6ம் நூற்றாண்டு). ஏதென்ஸ் நகர ராஜ தந்திரி. எக்ஸிஸ்டேட்ஸ் என்பவரின் மகன்.

**21. லைகர்கஸ்**

காலம் கி.மு. 390–324. ஏதென்ஸ் நகர ராஜ தந்திரி. சொற்பொழிவாளர். பொருளாதார நிபுணர். அரசாங்க கஜானாவைக்கட்டுப்படுத்தியவர்.

**22. சாமுவேல் ஹாட்லிப்**

கி.பி.1599–1662. கல்வி சீர்திருத்தவாதி. இங்கிலாந்தில் உள்ள எல்பிங் நகரில் பிறந்தார். இங்கிலாந்தில் விவசாயக்கல்லூரியை ஸ்தாபிக்க முனைப்பு காட்டியவர்

**23. திரு. பாட்லேவின் ஆரரரி**

சூரிய குடும்பத்தின் கோள்களின் கண்காட்சிக்கோ சுழற்சியை செயல்முறை விளக்கமாகக் காட்டும் மாதிரிக்கண்காட்சி

**24.பேனாப்டிகான் காட்சிக்கோ**

இலண்டனில் விஞ்ஞானக்கண்டுபிடிப்புகளை பகிரங்கப்படுத்தும் கண்காட்சி

**25.கல்லிவர்**

ஜோனதன் ஸ்வி.ஃப்ட் எழுதிய 'கல்லிவரின் பயணங்கள்' எனும் சாகசக் கதையில் வரும் குள்ளர்கள் பற்றிக்குறிப்பிடப்படுகிறது.

-----------------------



# 7. பணி மூப்பு அடைந்த மனிதன்

# ( *The Superannuated man* )

**'தாமதமாக வந்தது தான் எனினும்,**
**மதிக்கத்தக்க ஒரு சுதந்திரம்'.**

**--- கவிஞர் விர்ஜில்**

**'ஒரு குமாஸ்தாவாக இலண்டனில் இருந்தேன், மகிழ்ச்சியாக'**

**---- ஓ' கீ.்.ப்**

**வாசகரே,**

ஒரு வேளை, தங்களது வாழ்வின் பொற்கால வருடங்களை – தங்கள் மிளிரும் இளமையை – எரிச்சலூட்டும் அலுவலக அறைக்குள் செலவழித்து வீணாக்கி விட்டு, நடு வயது முதல் முதுமை மற்றும் தலை நரை விழும் காலம் வரை, விடுதலையாவோம் என்ற நம்பிக்கையோ ஓய்வோ இல்லாது. விடுமுறை என்ற பெயரில் ஏதோ ஒன்று இருப்பதையே மறந்து விடுவது அல்லது அவையெல்லாம் குழந்தைப்பருவத்தின் தனியுரிமைகள் என்று கருதுபவரா நீங்கள் ?

- அப்படியெனில், நான் பெற்ற விடுதலையை நீங்கள் பாராட்ட இயலும்.

நான் மின்ஸிங் வீதியில் உள்ள அலுவலகத்தில் பணியேற்று இன்றோடு முப்பத்தாறு வருடங்கள் ஆகி விட்டன. நிறைய விளையாடக்கூடிய நேரமும், அடிக்கடி வரும் பள்ளி விடுமுறையும் உடைய பதினான்கு வயதில் இப்பணிக்கு வந்தது துயரமான மாற்றம்.

சில சமயம், எட்டு, ஒன்பது, சில சமயம் பத்து மணி நேரம், ஒரு கணக்கு அலுவலகத்தில் உழைக்க வேண்டியிருக்கும். ஆனால், காலம், கொஞ்சம் கொஞ்சமாய் எல்லாவற்றுக்கும் நம்மை ஒத்திசைய வைத்து விடுகிறது. நான் படிப்படியாக மன ஆறுதல் கொண்டு, கூண்டுக்குள் அடைபட்ட விலங்கு போல திடமான ஆறுதல் கொண்டேன்.

ஞாயிற்றுக்கிழமைகளில் எனக்கு விடுதலை உண்டு என்பது உண்மை தான். ஆனால், பழக்க வழக்கத்தின்படி, ஞாயிற்றுக்கிழமைகள் எல்லாம்

வழிபாட்டிற்கு உரியவை. அந்த ஒரே காரணத்திற்காக, அவை உடல் வளைக்காமல் ஓய்வெடுக்கவும், பொழுது போக்கவும் என்று மிக மோசமாக மாற்றுப்பட்டு விட்டன. குறிப்பாக, ஒரு நகரத்து ஞாயிற்றுக்கிழமையில், எனக்கு துக்கம் இருக்கிறது. அதன் காற்றில் கனம் இருக்கிறது.

இலண்டன் வீதிகளின் ஆனந்த ஆரவாரத்தையும், இசையையும், கதைப்பாடல் பாடுபவர்களையும், தெருக்களில் இருக்கும் ரீங்காரமும், பேச்சரவமும் இல்லாமல் அதை இழந்திருக்கிறேன். அதன் முடிவற்ற மணி ஓசைகள், என்னை சோர்வு கொள்ள வைக்கின்றன. மூடப்பட்ட கடைகள் என்னைத் திருப்பி அனுப்புகின்றன. அச்சடித்த படங்கள், ஓவியங்கள் மற்றும் அலங்காரப்பொருட்கள், முடிவற்ற விதத்தில், பகட்டாகப்பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள அலங்காரப்பொருட்கள், உபயோகமற்ற பொருட்கள், உபகரணங்கள். அவ்வளவாக சந்தடியில்லாத பெருநகரத்தின் பகுதிகளில் வாரத்தின் வேலை நாட்களில் நடந்து செல்வது ஆனந்தமானது. அவை யாவும் இன்று மூடப்பட்டுள்ளன. மகிழ்வுடன் பொழுது போக்க புத்தகக்கடைகள் இல்லை.

சோம்பேறியான மனிதன், யாராவது சுறுசுறுப்பான ஆட்கள் தன்னைக்கடந்து செல்வார்களா என ஆழ்ந்து சிந்தித்திருப்பான். தற்போது தற்காலிகமான ஆயாசத்துடன் இருக்கும் ஓய்வுக்கு, அதன் வியாபார முகம், ஒரு நல்ல உற்சாகமுள்ள முரண்பாடு. தற்போது மகிழ்ச்சியுற்ற முகங்கள் அல்லது சிறிது மகிழ்ச்சியுள்ள முகங்களைத் தவிர வேறெதையும் பார்க்க முடிவதில்லை. விடுமுறை பெற்ற பயிற்சித்தொழிலாளர்கள், தொழில் வல்லுநர்கள் அங்குமிங்குமாகத் திரிகின்றனர்.

வாரம் முழுவதும் அடிமை உத்தியோகம் செய்த வேலையாள், அனுமதியுடன் விடுப்பு பெற்று, ஓய்வு நேரத்தை அனுபவிக்கும் திறனையும் இழந்து, அந்த வார விடுமுறையின் பயனற்ற தன்மையை வெளிக்காட்டுகிறான். நிலவெளியில் சாவகாசமாக நடந்து செல்லும் யாவரும் ஆறுதலை உணர்கிறார்கள்.

ஞாயிற்றுக்கிழமைகளைத்தவிர்த்து, எனக்கு ஈஸ்டர் மற்றும் கிறிஸ்துமஸ் பெருநாட்களில் விடுமுறையும், கோடை காலத்தில் ஒரு

முழு வார விடுமுறையும் கிடைக்கும். அப்போது, நான் என் சொந்த ஊரான ஹெர்ட்ஃபோர்ட்ஷயருக்குச்சென்று அங்குள்ள நிலவெளிகளில் என்னை ஆசுவாசப்படுத்திக்கொள்வேன். இது மிகப்பெரிய சலுகை. அச்சலுகை வருடா வருடம், மீண்டும் மீண்டும் வரும் என்பதே நான் வருடம் முழுவதும் வேலை செய்து, என்னை பணியில் சகிப்புத்தன்மை கொள்ள வைத்தது.

ஆனால், அந்த (ஓய்வு) வாரம் முடிவுக்கு வந்த போது, தொலை தூரத்தில் இருந்த பிரகாசமான வேதாளம், என்னைத்தொடுவதற்கு வந்து விட்டதா? அல்லது அமைதியற்ற ஏழு நாட்களில் இடைவெளியின்றி உல்லாசம் அனுபவிப்பதும், அதை முழுமையாக நான் நுகர்வது எப்படி என்ற சலிப்பூட்டும் விசாரமா? நிம்மதியான ஓய்வு என்று அளிக்கப்பட்ட உத்திரவாதம் எங்கே? அதை ருசிக்கும் முன்னேயே அது மறைந்து விட்டது.

நான் மீண்டும் என் மேஜைக்குத்திரும்பி விடுவேன். மீண்டும் அந்தக் கடினமான ஐம்பத்தியோரு வாரங்களை அடுத்துத்தொடரும் இடைவெளி எப்போது வரும் என எண்ணிக்கொண்டிருப்பேன். என் இருண்மையான அடிமை நிலையில், அந்த இடைவெளியின் வருகை, ஒளியைப்பாய்ச்சியது. அது இல்லாமல் எனது அடிமைத்தனத்தை சகித்துக்கொண்டிருக்க மாட்டேன் என்று ஏற்கெனவே சொன்னேன்.

பணிக்கு வருவதில் நான் சுறுசுறுப்புடன் இருந்தாலும், எனக்குப்பணி செய்வதில் திறமை இல்லை என்ற ஒரு உணர்வு என்னைத் தொடர்ந்து ஆட்கொண்டது. (ஒரு வேளை அது வெறும் கற்பிதமாகக்கூட இருக்கலாம்.)

இது பின்னாளில் எந்த அளவுக்கு வளர்ந்ததென்றால், அந்தத் திறமையின்மை என் முகம் முழுக்கத்தென்பட ஆரம்பித்தது. என் உடல் நலமும், உற்சாகமும் குன்றியது. ஏதோ ஒரு இக்கட்டு வரக்கூடும் என்றும், அது நான் சமாளிக்க முடியாத அளவுக்கு என்னை மிஞ்சியதாக இருக்கும் என்றும் பயம் ஏற்பட்டது.

என் பகல் நேர அடிமை உத்தியோகம் முடிந்தபின்பு, இரவு நேர உறக்கத்திலும் நான் அதே பணியைச்செய்து கொண்டிருந்தேன்.

அப்போது கற்பனையான கணக்குகள், கணக்குப்பதிவு செய்வதில் தவறுகள் என்பன போன்ற பயங்கரங்களைக்கண்டு, நான் கண் விழிப்பேன். எனக்கு ஐம்பது வயது ஆகியும், விடுதலை ஏற்படும் சாத்தியக்கூறு தோன்றவே இல்லை. என்னுடைய மேஜையுடன் இணைந்து வளர்ந்து விட்டேன். அந்த மரப்பலகை என் ஆன்மாவுக்குள்ளே நுழைந்து விட்டது. அலுவலகத்தின் சக ஊழியர்கள், என் முகத்தில் தென்பட்ட கஷ்டத்தைப்பார்த்து விட்டு, எனக்கு ஒத்தாசை செய்ய முன் வந்தனர். ஆனால், என் சக ஊழியர்கள் என்னைக்குறித்துச்சந்தேகங்கள் கொள்வதை நான் அறிந்திருக்கவில்லை.

சென்ற மாதம் ஐந்தாம் தேதி நான் அதை என்றென்றும் நினைவில் வைத்திருப்பேன். என் அலுவலகத்தின் பங்குதாரர்களில் இளையவரான திரு. எல்________________என்பவர் என்னைத்தனியாக அழைத்து, என்னை மோசமாக சில பார்வைகள் பார்த்து விட்டு, எனக்கு நேர்ந்துள்ள நிலைக்கான காரணம் என்னவென விசாரித்தார். அவ்வாறு, என்னை நெருக்கடி செய்து கேட்டதும், என்னுடைய பெலவீனத்தைக்குறித்து நான் நேர்மையாக ஒப்புக்கொண்டு, அத்துடன் என் பணியிலிருந்து ராஜிநாமா செய்யும் நிலைக்கு இணங்குகிறேனா என்று அச்சம் தெரிவித்தேன். அவர் எனக்கு ஆறுதலூட்டும்படியாக சில வார்த்தைகள் சொன்னார். அத்துடன் அந்த விஷயம் முடிந்தது.

அறிவற்ற முறையில், என்னைப்பற்றி நானே ஏதோ வெளிக்காட்டி விட்டேனோ என்ற எண்ணம், என்னை ஒரு வாரம் முழுக்க அழுத்திக்கொண்டிருந்தது. எனக்கு எதிராக என்னைக்கையாளுவதற்கு ஒரு பிடிமானத்தை அவர்களுக்குக்கொடுத்து விட்டதாக உணர்ந்து, என் பணி நீக்கத்தை நான் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்.

இதே ரீதியில், மிகவும் விசாரமான ஒரு வாரம் கழிந்தது. ஏப்ரல் மாதம் பன்னிரண்டாம் தேதி மாலை நேரம் என்று நினைக்கிறேன். இரவு எட்டு மணிக்கு என் மேஜையை விட்டு எழுந்து வீட்டுக்குக்கிளம்பும் போது, என் வாழ்நாளிலேயே மிக மோசமான அழைப்பு வந்து, நான் அலுவலகத்தின் பின் பகுதியில் உள்ள உரையாடும் அறையில் உள்ளோரின் முன்பாக ஆஜராகும்படி அழைக்கப்பட்டேன்.

என் தருணம் அப்போது வந்து விட்டது என உணர்ந்தேன். அது நானே எனக்கு இழைத்துக்கொண்டது. அவர்கள் என்னை அதற்கு மேலும் பணியில் வைத்திருக்க வாய்ப்பில்லை என்று சொல்லப் போகிறார்கள். எனக்கு அப்போது இருந்த திகிலைப்பார்த்து விட்டு, திரு. எல்.______________ அவர்கள் என்னைப்பார்த்து புன்முறுவல் பூக்கிறார். அது எனக்கு சற்று ஆறுதல் அளிக்கிறது.

நான் செய்த நெடிய பணியைக்குறித்தும், என் முழுமையான பணிக்காலத்தின் போது என்னுடைய மெச்சத்தக்க நடத்தையைக்குறித்தும் நிறுவனத்தின் மூத்த பங்குதாரர் நான் ஆச்சரியப்படும் அளவுக்கு, ஒரு நெடிய பிரசங்கத்தைச்செய்கிறார். (சைத்தான், இதை எப்படிக்கண்டு கொண்டான் என்று நான் எண்ணுகிறேன். அந்த அளவுக்கு என் பணி சிறந்ததென நான் எண்ண முடியாது என்று திட்டவட்டமாக மறுக்கிறேன். )

நான் அத்துணை சீக்கிரமாக என் வாழ்நாளின் அந்தக்கட்டத்தில், பணி ஓய்வு பெறுவது பற்றி, ஏதோ உச்சஸ்தாயியில் சொல்லிக்கொண்டே போகும் போது, என் இதயம் எப்படி மூச்சு வாங்கியது ?

என் ஸ்தாவர சொத்துக்களின் இருப்பைப்பற்றிக் கேள்வி கேட்கிறார். அவை, மிகக்கொஞ்சம் இருப்பதாகச்சொல்லுகிறேன். அதற்குப்பின்பு, மூன்று பங்குதாரர்களும் ஒரு முடிவிற்கு வந்து, நான் சிறப்பாகப்பணி செய்த நிறுவனம் எனக்குத் தர இருக்கும் வாழ்நாள் ஓய்வூதியத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தீர்மானிக்கிறார்கள். அந்த ஓய்வூதியம், நான் வழக்கமாக வாங்கி வந்த ஊதியத்தில் மூன்றில் ஒரு பங்கு ஆகும்.

எவ்வளவு தயாளமான கொடை! என் ஆச்சரியத்துக்கும், நன்றியறிதலுக்கும் இடைப்பட்ட நிலையில், நான் என்ன சொன்னேன் என்பது நினைவில் இல்லை. ஆனால், அவர்களது திட்டத்தை ஏற்றுக்கொண்டேன்.

அந்த நேரத்திலிருந்து அவர்களது பணியை விட்டு, நான் விடுவிக்கப்படுவதாக எனக்குச் சொல்லப்பட்டது. நான் தட்டுத்தடுமாறியபடியே, தலை குனிந்து வணக்கம் சொல்லிவிட்டு, எட்டு

மணி--பத்து நிமிடங்களுக்கு, ஒரேயடியாக என் வீட்டிற்குப்புறப்பட்டு விட்டேன். இந்த உன்னதமான பயன்---நன்றியுணர்வினால் சில பெயர்களைச்சொல்லாமல் மறைக்கிறேன். இந்த உலகிலேயே உதார குணமுள்ள நிறுவனத்தின் இந்த நற்பண்பிற்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். போல்தரோ, மெர்ரிவெதர், பாஸன்க்வெட் மற்றும் லேஸி ஆகியோரைக்கொண்ட அந்த நிறுவனம். அது என்னென்றைக்கும் இருக்கட்டும்!

(ஓய்வு பெற்ற பின்) முதல் ஓரிரு நாட்களுக்குத்திகைத்து விட்டேன். ஒரு வெற்றி கொண்டதாக உணர்ந்தேன். என் குதூகலத்தை உணர முடிந்தது. அதை உண்மையாக ருசிக்கும் போது, நான் மிகவும் குழப்பமடைந்தேன். நான் மகிழ்ச்சியாக இருப்பதாக எண்ணிக்கொண்டு, அங்குமிங்கும் அலைந்தேன். ஆனால், உண்மையில் நான் மகிழ்ச்சியாக இல்லை.

பழைய பாஸ்டில்[1] சிறையில், நாற்பதாண்டுகள் அடைக்கப்பட்டிருந்த சிறைவாசி ஒருவன், திடீரென்று விடுதலை செய்யப்பட்டு, வெளியேற்றப்பட்டது போன்ற உணர்வில் இருந்தேன்.

என்னை என்னாலேயே நம்ப முடியவில்லை. அது காலத்தைக் கடந்து, எல்லையின்மைக்குள் பிரவேசிப்பது போலிருந்தது. ஏனெனில், ஒரு மனிதனுக்கு அவனுக்கான காலத்தை, அவனே தக்க வைத்துக்கொள்வது ஒரு விதமான எல்லையின்மையே.

எனக்குத்தரப்பட்ட நேரத்தை விட அதிகமான நேரத்தை, நான் எப்போதும் கைக்கொள்ள முடியாதபடி, என்னிடம் இருப்பதாகத் தோன்றியது. ஒரு வறிய மனிதன், கால நேரம் போதாமையால் இருப்பவன், திடீரென்று பெரும் செல்வத்தை அடைந்தவனானேன். என் உடைமைகளுக்கு முடிவே இல்லை. என் சொந்த நேரத்தை நிர்வகிக்க ஒரு மேற்பார்வையாளரும், ஆமீனாவும் எனக்குத் தேவைப்பட்டனர்.

இந்த இடத்தில், சுறுசுறுப்பாக தொழில் செய்து வயதாகிப்போனவர்களுக்கு ஒரு எச்சரிக்கை விடுக்கிறேன். அது சாதாரணமானதல்ல. உங்கள் வருவாய் இனங்களை ஆராயாமல் நான்

இதைச்சொல்லவில்லை. நீங்கள் உங்கள் வாடிக்கையான தொழிலை உடனே விட்டு விட வேண்டும். அதில் ஆபத்து இருக்கலாம். அதை நானே உணருகிறேன். ஆனால், என்னுடைய நிதி ஆதாரங்கள் போதுமானதாக உள்ளன.

அந்தத்துவக்கக்காலத்திய பரவச நடுக்கங்கள் எல்லாம் இப்போது குறைந்து விட்டன. என் தற்போதைய நிலை பாதுகாப்பாக, அமைதியாக, ஆசீர்வாதமாக உள்ளது. எனக்கு ஒரு அவசரமும் இல்லை. இதற்கு முன்னால் ஏதோ எதுவுமே இல்லாதது போல, இப்போது எல்லாமே விடுமுறை நாட்கள் தான். நேரம் கனமாக என் மேல் கவிழ்ந்து என்னை அழுத்தினால், நான் நடந்து, நடந்து அதைக் கழிப்பேன். ஆனால், அந்நாளில் விரைந்து மறைகிற விடுமுறைக்காலத்தில், நான் செய்தது போல, நாள் முழுதும் நடக்கவில்லை. அந்நாளில் ஒரு நாளுக்கு முப்பது மைல் தூரம் நடப்பேன். விடுமுறையினை முழுமையாக அனுபவிப்பதற்காக.

நேரம் ஒரு பொருட்டாகத்தோன்றினால், அதைப் படித்துக்கழிப்பேன். ஆனால், என்னுடைய பணி செய்யும் நேரத்தில் அல்லாமல், கடந்து சென்ற கார் காலங்களில், நெடும் இரவில் கிடைக்கும் நேரத்தில், என் மூளையையும், கண்களையும் களைப்படைய வைக்கும் அளவுக்கு, தீவிரமாகப்படித்தது போல் அல்ல. நான் நடக்கிறேன். வாசிக்கிறேன். ஆவேசம் வந்து விட்டால், (இப்போது எழுதுவது போல) எழுதுகிறேன்.
உல்லாசம் தேடி அலைவதை நான் நிறுத்தி விட்டேன். அது என்னிடம் வந்து சேரட்டும்.

**ஒரு பச்சை வனாந்திரத்தில்**
**பிறந்த ஒருவன்**
**ஆண்டுகள் தன்னிடத்தில் வரட்டும்**

என்று காத்திருந்த மனிதன் போல. நீங்கள் சொல்வீர்கள், 'ஆண்டுகளா? இந்த ஓய்வு பெற்ற முட்டாள் எதை அப்படிக்கணக்கிடுகிறான்? இவன் ஐம்பது வயதைக்கடந்து விட்டதாக ஏற்கனவே சென்னானே !'

உண்மையில், நான் ஐம்பது வருடங்களைப்பெயரளவில் கழித்து விட்டேன். ஆனால், நான் எனக்காக அன்றி, பிறருக்காக வாழ்ந்த காலத்தைக்கழித்துப் பார்த்தால், நான் இன்னமும் ஒரு இளைஞன் தான் என்பதைக்காண்பீர்கள். ஒரு மனிதன் தனக்காக மட்டுமே செலவிட்டுக்கொள்ளும் காலமே உண்மையான காலம். மற்ற காலத்தை அவன் வாழ்ந்ததாகச்சொன்னாலும், அது அவன் பிறருக்காக வாழ்ந்த காலமே. அது அதிகமோ, குறைவோ, எனக்கு எஞ்சியுள்ள காலம், எனக்காக மும்மடங்கு விரிவடைந்துள்ளது. என்னுடைய அடுத்த பத்தாண்டுகளை நான் எவ்வளவு நீட்டித்துக்கொள்ள இயலுமோ, அந்த அளவுக்கு நீட்டித்துக்கொண்டால், அது என்னுடைய முற்பட்ட முப்பது ஆண்டுகளைப்போலவே நீட்சியுடையதாய் இருக்கும். இது மும்மடங்கு பெருக்கல் கணக்கின்படி ஒரு நல்ல விதி.

நான் கணக்கு எழுதிய அலுவலகத்தில் இருந்து வெளியேறிய பின்பு, உண்டான நெடிய காலத்தின் துவக்கத்தில், நான் சுதந்திரத்தை அனுபவித்தேன். எனக்கு அப்போது இருந்த விசித்திரமான கற்பனைகள் எல்லாம் ஒன்று கூட இல்லாமல் இப்போது சென்று விட்டன. அது ஒரு நேற்றைய விஷயம் என்று கூட என்னால் எண்ணிப்பார்க்க முடிவதில்லை.

பல ஆண்டுகளாகவும், ஒரு நாளின் பல மணி நேரங்களிலும், நான் நெருங்கித்தொடர்பு கொண்ட நிறுவனத்தின் பங்குதாரர்கள் மற்றும் எழுத்தர்கள் என்னிடத்திலிருந்து திடீரென்று விலக்கி வைக்கப்பட்டனர். அவர்கள் யாவரும் இறந்து போனது போல எனக்குத்தோன்றியது. என்னுடைய இந்தக் கற்பனையை விளக்கிச்சொல்ல சர் ராபர்ட் ஹோவார்டு[2] எழுதிய அவல நாடகத்தில் வரும் வரிகள் எனக்கு உதவக்கூடும். ஒரு நண்பனின் மரணம் குறித்து அவர் சொல்லும் போது,

**'அவன் இப்போது தான் போனது போலத்தோன்றுகிறது.**
**நான் ஒரு கண்ணீர்த்துளியைச்**
**சிந்தக்கூட நேரம் இருக்கவில்லை.**
**இருப்பினும் இந்த இடைவெளி,**
**என்னை விட்டு அவன் ஆயிரம் ஆண்டுகள்**
**அப்பால் இருப்பது போல.**

**காலம், எல்லையின்மையில்,**
**அளக்க முடியாதபடி உள்ளது'.**

இந்த சோகமான உணர்வைப்போக்க, நான் ஓரிரு முறை, என்னுடைய பழைய மேஜை நண்பர்களைச்சந்திக்க விரும்பினேன். அவர்கள் பேனா பிடித்த எனது சக தோழர்கள். அவர்களைக்கலவரம் நிறைந்த கடந்த காலத்தில் விட்டு விட்டு வந்து விட்டேன்.

என்னை அவர்கள் அன்புடன் வரவேற்றது, இதற்கு முன் அவர்களுடன் வேலை பார்த்த போது, நான் அனுபவித்த இனிய பரிச்சயமானவற்றைப்போல அல்லாமல் இருந்தது.

நாங்கள் சில பழைய நகைச்சுவையான விஷயங்களைப்பகிர்ந்து கொண்டோம். ஆனால், அவை தெளிவற்றதாகவும், மெல்லியதாகவும் இருந்தன. என்னுடைய பழைய மேஜையும், நான் தொப்பியைத்தொங்க விடும் உயரமான கழியும் வேறு ஒருவருக்குத்தரப்பட்டிருந்தது. அது தரப்பட்டிருக்கும் என்று எனக்குத்தெரியும். ஆனால், அதை இணக்கமுள்ளதாக என்னால் எடுத்துக்கொள்ள முடியவில்லை.

திரு. த-------------- அவர்களே ------------ நான் --------------- நான் வருத்தம் எதையும் உணரவில்லை. ------------ நான் விலகாமல் இருந்திருந்தால் ------------ என்னுடன் முப்பத்தாறு ஆண்டுகள் விசுவாசமுள்ள சகாக்களாகப்பணியாற்றிய என் உடன் ஊழியர்கள், பல நகைச்சுவைத்துணுக்குகளைச்சொல்லியும், புதிர் கேள்விகளைக் கேட்டும், என் பணியில் உள்ள கரட்டு முரட்டுத்தன்மையை மென்மையாக்கியவர்கள். அது அவ்வளவு கரடுமுரடாகவா இருந்தது ? அல்லது நான் வெறும் கோழையா? இது குறித்து வருந்துவதற்குள், காலம் கடந்து விட்டது. அத்துடன், இத்தகைய சந்தர்ப்பங்களில் எல்லாம் இவை மனத்தில் தோன்றும் பொதுவான பிழைகளே என்று நான் அறிவேன்.

ஆயினும், என் இதயம் என்னை அடித்தது. எங்களுக்குள் இருந்த பிணைப்பை வலிந்து, முரட்டுத்தனமாக உடைத்து விட்டேன். அது கொஞ்சம் கூட மரியாதை இல்லாதது. இந்தப்பிரிவிலிருந்து என்னைத்தயார் செய்து கொள்ள எனக்குச்சில காலம் தேவைப்படும்.

போய் வருகிறேன், என் பழைய சகாக்களே! எனினும் நிரந்தரமாய் அல்ல. மீண்டும், நீங்கள் அனுமதித்தால், மீண்டும் உங்கள் மத்தியில் நான் வருவேன். போய் வருகிறேன். சுவாரசியமற்ற, நையாண்டிப் பேச்சும் நட்பும் கொண்ட திரு. சே.......... மென்மையான சுபாவத்துடன் மெதுவாக நடந்து செல்லும் நாகரீகமுள்ள திரு. தோ……… அலுவலக வேலைகளைச்செய்வதில் முன் வந்து உதவிகள் செய்த திரு. ப்ளா…..…. உமது சேவைகள் சிறந்தவை.

நீ……. நீ…… இருண்ட கட்டிடக்குவியலே! பழைய காலத்து க்ரஷாம் அல்லது விட்டிங்டன் போன்ற கம்பீரமான வணிகர்களின் அலுவலகம் அமைந்திருப்பதற்கு நீ சரியான இருப்பிடம் தான். உனது பின்னல் சிக்கலான பாதைகள். வெளிச்சம் இல்லாமல் அடைத்து வைக்கப்பட்ட அலுவலகங்களில், வருடத்தின் பாதி நேரம் சூரிய வெளிச்சத்திற்குப்பதிலாக மெழுகுவர்த்தி வெளிச்சமே ஒளி தந்து கொண்டிருக்கும். என் சந்தோஷத்திற்கு நீ எதுவும் செய்யவில்லை. என் வாழ்நாளைக்கடுமையாக வளர்ந்தெடுத்தாய். உன்னிடமிருந்து பிரியா விடை பெறுகிறேன்! யாரும் அறியாத, புத்தகம் விற்பவனிடம் என் "படைப்புகள்" இல்லை. மாறாக, உன்னிடம் உள்ளது.

அங்கு மிகப்பெரிய அலமாரிகளில் ஏராளமான, கையால் எழுதப்பட்ட பதிவேடுகள். அக்வினாஸ்[3] எழுதி விட்டுச் சென்றதை விட அதிகமாக. ஆனால், முழுமையானதும், பயனுள்ளதுமாக. அங்கு அவை ஓய்வெடுக்கட்டும். என் உழைப்பிலிருந்து நான் ஓய்வு பெறுவதைப்போலவே. என் மேலங்கியை உங்கள் மத்தியில் விட்டுச் செல்கிறேன்.

என் முதல் கடிதத்தை எழுதி, இரண்டு வாரங்கள் ஓடி விட்டன. அந்தக்கால கட்டடத்தில், நான் மன அமைதியை நெருங்கிக் கொண்டிருந்தேன். எனினும், அதை அடைந்து விடவில்லை. நான் அமைதியாய் இருப்பதாக தற்பெருமை கொண்டேன். ஆனால், அது ஒரு ஒப்பீடு மட்டுமே. அந்த முதல் படபடப்பு என்னை விட்டுச்சென்று விட்டது. புது விதமான நிலை கொள்ளா இருப்பை உணர்ந்தேன். பூஞ்சையான கண்களுக்குப்பழக்கமில்லாத ஒளிப்பாய்ச்சல்.

நான் உண்மையிலேயே, என்னுடைய பழைய சங்கிலிகளுக்காக ஏங்கினேன். அவை யாவும், ஏதோ என் உடையின் ஒரு பகுதி போலவே மாறி விட்டிருந்தன. மிகவும் கண்டிப்பான கட்டுப்பாட்டுடன் மடாலயத்தில் இருந்த ஒரு எளிய கார்த்தூஸ்[4] ஆகிய நான், ஏதோ திடீர்ப்புரட்சியின் விளைவாக உலகத்திடம் திருப்பித்தரப்பட்டவன் போலிருந்தேன். முன்னெப்போதும் இல்லாத வகையில், நானே எனக்கு எஜமானன் போலே இப்போது இருக்கிறேன். நான் விரும்பிய இடத்திற்குச்சென்று, நான் விரும்பியதையெல்லாம் செய்ய இயலும். காலை பதினோரு மணிக்கு நான் பாண்ட் தெருவில் இருக்கிறேன். நான் அதே இடத்தில், பல வருடங்களாக, அதே நேரத்தில் நடந்து சென்றிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. நான் ஸோஹா தெருவுக்குள் பிரவேசித்து, ஒரு புத்தகக் கடைக்குள் நுழைந்து, அலசி ஆராயும்படி போகிறேன். நான் முப்பது ஆண்டுகளாகப்புத்தகங்கள் சேமிப்பது போல எனக்குத்தோன்றுகிறது. அதில் ஏதும் விசித்திரமோ, புதுமையோ இல்லை. காலை நேரத்தில், ஒரு ஓவியத்தின் முன்பாக நான் நிற்கிறேன். இது வேறு விதமாக மாறி விட்டதா? மீன் தெருவுக்கு இப்போது என்ன ஆயிற்று ? ∴பென் சர்ச் தெரு எங்கே ?

முப்பத்து ஆறு ஆண்டுகளாக, இந்த உழைத்துத்தேய்ந்த குமாஸ்தாவின் தினசரி நடையால், தேய்ந்து போன கற்களைக்கொண்ட மின்ஸிங் தெருவே ! உன் சாஸ்வதமான கற்களில் இப்போது சப்தம் கேட்கிறதா? பளிச்சிடும் வர்ணக் கொடிகளை உடைய பேல் அங்காடியைக்கடந்து செல்லும் போது ஒதுங்கிச் செல்கிறேன்.
இது மாறுதலின் நேரம். நானோ, வெகு விநோதமாக எல்ஜின் சலவைக்கற்களுக்கு[5] மத்தியில் நிற்கிறேன். என்னுடைய நிலையில் ஏற்பட்ட மாறுதல் என்பது இன்னொரு உலகத்திற்குள் பிரவேசிப்பது போல என்ற ஒப்பீடு, உயர்வு நவிற்சி அல்ல. காலம் ஒரு விதத்தில் எனக்கு உறைந்து நிற்கிறது. பருவ கால மாற்றங்களின் வித்தியாசத்தை நான் அறியவில்லை. வாரத்தின் ஒரு நாள் என்ன கிழமையென்றோ, என்ன மாதம் என்றோ எனக்குத் தெரியவில்லை.

ஒவ்வொரு நாளின் வித்தியாசமும், அந்நாளில் வரும் அயல்நாட்டுக் கடிதத்தினைப்பார்த்து தொடர்பு படுத்தி, இது இன்ன நாள் என்று அறியப்பட்டது. அல்லது அடுத்து வரும் ஞாயிற்றுக்கிழமைக்கு

இன்னும் எத்தனை நாள் அல்லது எத்தனை நாள் நெருக்கம் என்பதன் மூலமாக அறியப்பட்டது.

எனக்கு சில புதன்கிழமை உணர்வுகளும், சனிக்கிழமையின் இரவு கிளர்ச்சிகளும் இருந்தன. ஒரு நாளின் முதன்மை தேவதை அந்த நாள் முழுக்க என் மீது இருந்தது. அது என் பசியையும், சக்தியையும் மற்றும் இதர விஷயங்களையும் கட்டுப்படுத்தியது.

அடுத்த நாள் என்னும் ஒரு வேதாளம், அதற்கு அடுத்து வருகின்ற ஐந்து கருப்பு வேதாளங்கள் யாவும் எனது ஓய்வு நாள் பொழுதுபோக்கின் போது, என் மீது மிகக்கவனமாக அமர்ந்திருந்தன. எந்த வசீகரம் எத்தியோப்பியக்கருப்பை[6] வெளுத்தது ? கருப்புத்திங்கட்கிழமைக்கு என்ன ஆனது?

எல்லா நாட்களும் இப்போது ஒரே மாதிரியாக உள்ளன. பரிசுத்த நாள் என்று ஆகாமல், துரதிருஷ்டவசமான தோல்வியாக அடிக்கடி ஆகி விட்ட ஞாயிற்றுக்கிழமை அன்று, எனது தப்பித்துச்செல்லும் உணர்வோடு, அன்றைக்கு மிக அதிகமான உல்லாசத்தை அனுபவிக்க வேண்டும் என்ற அதிக அக்கறை இப்போது ஒரு வாரத்தின் இறுதி நாள் என சுருங்கி விட்டது.

ஓய்வு நாளன்று, ஒரு பெரிய கணிசமான நேரத்தை ஆக்கிரமித்துக்கொள்ளும் என முறுமுறுக்காது இப்போது நான் தேவாலயத்திற்குப்போகலாம்.

இப்போது எல்லாவற்றையும் செய்வதற்கு எனக்கு நேரமிருக்கிறது. ஒரு நோயுற்ற நண்பனைப்பார்க்கச்செல்லலாம். தன்னுடைய மிகையான பணிகளில், சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருக்கும் ஒருவனை இடையூறு செய்யலாம். என்னுடன் இனிய மே மாத காலை நேரத்தில், விஸ்ட்ஸர் கோட்டைக்கு[7] ஒரு நாள் முழுக்க மகிழ்ச்சியாய்ப்பொழுது போக்க வரும்படி அழைப்பு விடுத்து, அவருக்கு இன்னல் செய்யலாம். கடின வேலை செய்பவர்களைப்பார்வையிட்டு, நாமும் அது போலவே முற்காலத்தில் கஷ்டப்பட்டதை எண்ணி சிரிப்பது லூக்ரீஷிய மகிழ்ச்சியாகும்[8].

செக்கு இயந்திரத்தை முடிவில்லாமல் என்னென்றும் சுற்றி வரும் குதிரைகள் போலே , கடும் சுமையுடன் பாடுபடும் அந்தக்கடின உழைப்பாளிகளை பின்னே விட்டு விட்டு, நான் முன்னே வந்து விட்டேன். அது எதற்காக ? ஒரு மனிதன் தனக்கென அதிக நேரத்தைத்தக்க வைத்துக்கொள்ளக் கூடாது. அது போலவே, மிகக்குறைவான பணிகளை மட்டுமே செய்ய முனையக்கூடாது. எனக்கு ஒரு மகன் இருந்திருந்தால், அவனுக்கு 'செய்ய ஒன்றுமில்லை' என்று பெயரிட்டிருப்பேன். அவன் எந்த வேலையும் செய்யக்கூடாது. மனிதன் இயங்கிக்கொண்டிருக்கும் போது, அவனது இயல்பான சுபாவத்தில் இல்லாமல் இருக்கிறான். நான் எண்ணங்கள் நிறைந்த வாழ்க்கையை மட்டுமே விழைகிறேன்.

ஒரு நற்குணமுள்ள பூகம்பம் வந்து அந்த சபிக்கப்பட்ட பஞ்சாலைகளை விழுங்கி விடாதா? இங்கு இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருக்கும் அந்தப்பயனற்ற மேஜையை எடுத்து, கீழே வீசி எறியுங்கள். கீழே பிசாசுகள் இருக்கும் அகல பாதாளம் வரை எறியுங்கள்.

நான் இனி மேலும் -------------------------- கூட்டு நிறுவனத்தின் குமாஸ்தா அல்ல. நான் ஓய்வு பெற்று உல்லாசமானவன். நன்கு வெட்டப்பட்ட புல் உடைய பூங்காக்களில் என்னைப்பார்க்க இயலும். நான் ஏற்கனவே உணர்ச்சியற்ற வெற்று முகமும், அக்கறையற்ற பாவனையும் கொண்டு, ஒரு நிதானமற்ற வேகத்தில் நடப்பவன் என்றும், ஒரு திட்டவட்டமான நோக்கம் எதுவும் இல்லாதவன் என்றும் அறியப்படுகிறேன்.

என்னுடைய நல்ல குணாம்சங்களில் ஒன்றான கௌரவத்துடன் கூடிய ஓய்வு, நெடுநாட்களாகப்புதைக்கப்பட்டிருந்ததாகவும் , தற்போது அது மீண்டும் என்னிடத்தில் துளிர் விட்டிருப்பதாகவும் சிலர் என்னிடம் சொல்லுகின்றனர். நான் காணத்தக்க அளவில், பெருந்தன்மையில் வளருகிறேன். ஒரு செய்தித்தாளை நான் எடுப்பது, இசை நாடகம் பற்றிய நிலையைப்படிப்பதற்காக. பணி முடிந்து விட்டது.

எவற்றையெல்லாம் செய்வதற்கு இந்த உலகிற்கு வந்தேனோ, அதையெல்லாம் செய்து முடித்து விட்டேன். செய்ய வேண்டிய முக்கிய பணிகளை முடித்து விட்டேன். நாளின் மீதிப்பகுதியை என்னிடமே வைத்துள்ளேன்.

-------------------------------------------

## குறிப்புகள்

### 1.பழைய பாஸ்டில்

பாரீசில் உள்ள கோட்டை. பிரான்சின் அரசர்களால், அரசாங்கச்சிறையாகப் பயன்படுத்தப்பட்டது. 14-ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது

### 2.சர் ராபர்ட் ஹோவர்டு

கி.பி. 1626 – 1698. ஆங்கில நாடகாசிரியர். அரசியல்வாதி. பெர்க்ஷயர் பிரதேசத்தின் முதல் பிரபு. இவர் எழுதிய நாடகங்கள் *The Mulberry garden, The Rehearsal, The Country wife, The plain-dealer*

### 3.அக்வினாஸ்

முழுப்பெயர் சர் தாமஸ் அக்வினாஸ். கி.பி. 1225-1274. இத்தாலியில் உள்ள அக்வினோ என்ற ஊரைச்சேர்ந்தவர். கிறித்தவத்துறவி. தத்துவவாதி, இறையியல் நிபுணர்

### 4.கார்த்தூஸ்

ரோமன் கத்தோலிக்க மதத்தின் ஒரு பிரிவு .பரிசுத்த ப்ரூனோ என்பவர் கி.பி. 1084ல் இதை ஸ்தாபித்தார். பெரும்பாலும் மௌனத்தையே கடைப்பிடிக்கும் துறவிகள் உள்ள அமைப்பு.

### 5. எல்ஜின் சலவைக்கற்களுக்கு

இலண்டனில் உள்ள பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் இவை பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. இவை பார்த்தினன் சலவைக்கற்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. பழைய கிரேக்க சலவைக்கல் சிற்பங்கள் மற்றும் எழுத்துக்கள் ஆகியவையே எல்ஜின் சலவைக்கற்கள் என அழைக்கப்படுகிறது.

### 6.எத்தியோப்பியக் கறுப்பை -

ஈசாப்பின் நீதிக்கதையில் உள்ள ஒரு கதை. தன் கறுப்பு நிறத்தின் காரணமாக தன் எஜமானனால் புறக்கணிக்கப்பட்ட அடிமை ஒருவன், தன் நிறத்தை வெளுப்பாக்குவதற்கு, நீரிலேயே மூழ்கியிருந்து,

அதனால் கடும் சுரம் ஏற்பட்டு இறந்து போன கதை. *To wash the Ethiop white* என்று இது ஆங்கிலத்தில் பழமொழியாகவே மாறிவிட்டது.

### 7. விண்ட்ஸர் கோட்டைக்கு

பெர்க்ஷயர் ஜில்லாவில் உள்ள விண்ட்ஸர் கோமகனின் ராஜாங்க உறைவிடம். 11– ம் நூற்றாண்டில் கட்டப்பட்டது.

### 8.லூக்ரீஷிய மகிழ்ச்சியாகும்

லூக்ரிஷியஸ் ஒரு ரோமானியக்கவிஞர். இவரது காலம் கி.மு. 99–55. நம் பழைய காலத்து கஷ்ட வாழ்க்கையைப்பிற்காலத்தில் எண்ணிப்பார்த்து சிரிப்பதற்குப்பெயர் லூக்ரீஷிய மகிழ்ச்சியாகும்.





# 8. மாநகரில் பிச்சைக்காரர்கள் சீரழிந்து கொண்டிருப்பது குறித்த ஒரு பிராது

## (*A Complaint on the decay of beggars in the metropolis*)

ஆல்ஸைட்ஸ் கழி[1] (ஹெர்குலிஸ் கழி) எனப்படும் ஒரே ஒரு நவீன கழியைக்கொண்டு, பெருநகரத்தில், காலத்தின் அவலத்தினை ஒழித்து அகற்றிடவும், பிச்சைக்காரர்கள் எனும் காற்றில் படபடக்கும் கந்தலான வெருளியின் மிச்ச சொச்சங்களை, உயர்த்திய பல கரங்களால் அறவே விரட்டியடிப்பதற்கு, சமூக சீர்திருத்தம் என்ற பன்முகத்துடைப்புப் பணி கையாளப்படுகிறது. பணப்பைகள், கூழையான சிறு பைகள், கைப்பைகள், கழிகள், நாய்கள், கவைக்கோல்கள் சகிதம் உள்ள பிச்சைக்காரர்களின் சகோதரக்குழுவை பதினோறாவது நிலை சித்திரவதையின்[2] மூலமாக நகர எல்லைக்கு வெளியே தள்ளிக்கொண்டிருக்கிறார்கள்.

கூட்டம் நிறைந்த சாலைச்சந்திப்புகள், தெரு முனைகள் மற்றும் நடைபாதைச்சந்துகளின் திருப்பு முனைகளில் இருந்து பிச்சைக்காரத்தனமெனும் பிசாசு பெருமூச்சு விட, அது விரட்டி வெளியேற்றப்படுகிறது. ஒரு இனத்திற்கு எதிரான, இந்த ஒட்டு மொத்தமான பணி, இந்த ஒவ்வாத யுத்தம், அல்லது அழித்தொழிக்கும் யுத்தம் குறித்து எனக்கு சம்மதமில்லை. இந்தப்பிச்சைக்காரர்களிடமிருந்து பல நன்மைகளையும் பெற இயலும்.

அவர்களது பாணி மிகப்பழமையானதும், மிக மேன்மையானதுமான பிச்சையெடுக்கும் ஒரு நிலை. நமது சாதாரணமான உணர்வுகளுக்கு அவர்களது வேண்டுகோள்கள் விடுக்கப்படுகின்றன.

அது ஒரு உயர்ந்த மனதில், குழப்பம் விளைவிக்காது. அதை விடக்குறுகிய பார்வை கொண்ட அல்லது பரந்த சமூகவாதியாகவோ உள்ள சக (மனிதர்)களின் சொந்த விருப்பங்களுக்கு இணக்கமாக இல்லை. அவர்களது பார்வையில் மட்டுமே ஒரு தீய எண்ணமும் இல்லாத நிர்ணயமும், தாராளமான மதிப்பிடுதலும் இருக்கும்.

அவர்களது சீரழிந்த நிலையிலிருந்து ஒரு கம்பீரம் எழும். ஒரு எஜமானனின் உடைகளை உடுத்துவதை விட, நிர்வாணமாய் இருப்பது மனிதனின் இயற்கைக்கு வெகு அருகாமையில் இருப்பது போன்றதாகும்.

மிக உயர்ந்த மனிதர்கள் இதை வேறு விதத்தில் அனுபவித்திருக்கிறார்கள். டயோனிஸியஸ்[3] என்பவன் ஒரு மன்னனாக இருந்து, பிறகு, பள்ளிக்கூட ஆசிரியராக மாறிய போது, நாம் அவனைக்குறித்து, அவமதிப்பைத்தவிர வேறென்ன உணர்வு கொள்ள முடியும்? வேன் டைக்[4], தன் கையில் ஒரு பிரம்பை செங்கோல் போல் ஏந்தியபடி, தன்னை ஒரு ஓவியமாக வரைந்து கொண்டிருந்தால், அது நம் மனத்தில் அனுதாபமே ஏற்படுத்தியிருக்கும். அவ்வண்ணமே, பெலிசாரியஸ்[5] ஒரு நாணயத்திற்காகப்பிச்சை எடுக்கும் போது, அவரைக்குறித்து அதே இரக்கத்துடன் கூடிய மரியாதை ஏற்பட்டிருக்குமா? அதிலிருந்து நமக்குக்கிடைக்கும் பாடம், வசீகரமானதாகவும், இரக்கமூட்டக்கூடியதாகவும் இருக்குமா?
மோசமாக எழுதப்பட்ட செய்யுள்களினாலோ அல்லது மது விடுதிகளின் பலகை[6] வாசகங்களாலோ, பழங்கதையில் வருகின்ற அழகான பெஸ்ஸி என்ற பெண்ணின் தந்தையான குருட்டுப்பிச்சைக்காரனுக்கு[7] இழிவு நேரவில்லை. எனினும், இந்த கார்ன்வால் பிரபுவின் (அவர் உண்மையிலேயே அப்படித்தான்) உடலை மறைத்த உடைகளையும் மீறி, சில தேஜோமயமான ஒளித்துணுக்குகள் பிரகாசித்தன. தன் பிரபுவின் அநீதியான தண்டனைக்குப்பயந்து, தலைமறைவாகி ஓடிய அவன், தன் உடைகள் யாவும் இழந்து, பெத்நால் என்ற ஊரின் பூப்பூக்கும் புல் தரைக்குத்தாழ்த்தி அமர்த்தப்பட்டான்.

கந்தை உடைகளில் தரித்திரம் தெரிய, ஒரு கடையில் வாடிக்கையாளரைக்கவனித்து அனுப்பும் பணியாளர் போலே, தந்தையுடன் அவனது மலர்ந்த, இள வயது மகளும், தங்களது தவறுகளையும், கீழான நிலையையும் நினைத்து, மூன்றடி நீள தையல் இயந்திரத்தின் விசுப்பலகையில் அமர்ந்திருந்தனர். இதை விட அவர்கள் மேலான தோற்றம் அளித்திருக்க முடியுமா? பழைய கதையிலும், சரித்திரத்திலும், ஒரு பிச்சைக்காரன் என்பவன், அரசன்

என்பவனின் எதிர்ப்பதம். கவிஞர்களும், விசித்திரமான கற்பனாவாதிகளும், தங்கள் கூர்மையான எழுத்தில், உயர்ந்த செல்வ நிலை, கீழான நிலைக்குப் போவது போல எழுதி, தங்கள் உயரிய கதாநாயகன், கந்தல் துணி அணிந்து, நைந்த ஒரு பையைச்சுமந்தபடி நிலை மாறுகின்ற வரை, தங்கள் எழுத்தை நிறுத்திக்கொள்வதில்லை. அவர்கள் எவ்வளவு அதல பாதாளத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள் என்பது அவர்களது வீழ்ச்சியின் அளவைக்காட்டுகிறது. எந்த ஒரு வெளிப்பாடும், ஒருவரைக்காயப்படுத்தாமல் வெளிப்படாது. அந்த வீழ்ச்சியைச்சொல்வதில் இடைவெளி விடுவதில்லை. தன் அரியணையில் இருந்து தூக்கி எறியப்பட்ட லியர் மன்னன், தன் ஆடைகளை எல்லாம் களைந்து விட்டு 'இது வெறும் இயற்கையானதே!' என்று தன் வாய் திறந்து மறுமொழி சொல்ல வேண்டும்.

ஒரு இளவரசன் மேல் காதல் வயப்பட்ட க்ரிஸ்ஸீட், தன் கரங்கள் தொழு நோயினால் வெண்மை அடைந்து, தொழு நோய்ப்பிச்சைக்காரியாக ஒரு தட்டும், மணியும் ஏந்திப் பிச்சையெடுத்துக்கொண்டிருந்தாள். இதையெல்லாம் லூசியன்[8] வகையறாவைச்சேர்ந்த நையாண்டி எழுத்தாளர்கள் நன்கு அறிவார்கள். இருப்பினும், ஒரு எதிரிடையான கொள்கையாக மேன்மை நிலை குறித்துத்தங்கள் வெறுப்பை உமிழ்கின்றனர். அவர்கள், மன்னன் அலெக்ஸாண்டர் நிழலில் அமர்ந்து, கால் பூட்ஸ்களைத்தைப்பதாக சித்தரித்தார்கள். அல்லது ஸெமி ராமிஸ்[9], அழுக்கு கம்பளித்துணிகளைத் துவைப்பதற்காக அவற்றைச்சேகரித்ததாகவும் சித்தரித்தார்கள்.

ஒரு பெரிய சக்கரவர்த்தி தன் அபிமானத்தை, ஒரு ரொட்டி சுடுபவனின் மகள் மீது பொழிவதைக்குறித்த பாடல் எவ்வாறு இருக்கும்? எனினும், கோப்பெட்டுவா எனும் அரசன், ஒரு பிச்சைக்காரப்பெண் மீது காதல் வயப்பட்ட கதைப்பாடலை[10] நாம் வாசிக்கும் போது, கற்பனை எல்லைகள் முற்றிலுமாய் மீறப்பட்டது என உணர்கிறோம்.

தரித்திரம், பிச்சைக்காரத்தனம், வறியவன் என்பதெல்லாம் இரக்கத்தின் வார்த்தை வெளிப்பாடுகள். எனினும், அந்த இரக்கத்தில் அவமதிப்பும் கலந்திருக்கும். யாரும் ஒரு பிச்சைக்காரனை நிந்தை

செய்வதில்லை. வறுமை என்பது ஒப்பிடக்கூடிய ஒன்று. ஒவ்வொரு நிலையின் வறுமையும், அதற்கு மேலான நிலையில் இருப்பவரால் எள்ளி நகையாடப்படும். வறியவனின் சிறிய வருமானமும், வரவினங்களும் கூட்டப்பட்டு, மொத்தத்தொகை எவ்வளவு என்று சொல்லப்படும். அவன் சொத்து இருப்பதாகச்செய்கின்ற பாசாங்கு கிட்டத்தட்ட கேலிக்குரியது. அவனது பரிதாபத்துக்குரிய முயற்சிகள் சிரிப்பைக்கூட வரவழைக்கும். ஒவ்வொரு பிச்சைக்காரனும், பக்கத்தில் உள்ள சக பிச்சைக்காரனை விட தான் சற்றே உயர்ந்தவன் எனக் கருதிக்கொள்வான்.

ஒரு தரித்திரன், தெருவில் இருக்கும் இன்னொரு தரித்திரனின் நிலையைச் சுட்டிக்காட்டி நிந்தனை செய்யும் போது, அங்கே அப்போது கடந்து செல்லும் ஒரு பணக்காரன், இவ்விருவர் மேலும் எரிந்து விழுவான். ஒருவனும் தனது நிலையை ஒப்பிட்டு, ஒரு பிச்சைக்காரனை அவமதித்து, தனது கைப்பையில் உள்ள பணத்தை அவனிடம் இருக்கின்ற பணத்தோடு ஒப்பிடுவதில்லை. ஒப்பிடுகின்ற தராசுத் தட்டில், அவன் ஒப்பிட்டுப்பார்க்கப்படுவதில்லை. சொத்தைக்குறித்து அளவை செய்யும் போது, அவன் அந்தக்கணக்கில் வருவதில்லை. ஒரு நாய் அல்லது ஒரு ஆட்டைத்தவிர வேறு எதுவும் அவனிடம் கிடையாது. அவனை விடத்தான் அதிக செல்வம் வைத்திருப்பதாக யாரும் அவனை ஏளனமாகப் பேசுவதில்லை. அவன் கர்வம் உள்ளவன் என்றோ, பாசாங்கான பணிவைக்காட்டுபவன் என்றோ ஒருவரும் அவனைக்கடிந்து கொள்வதில்லை.

சாலையில் செல்லும் எவரும், சுவரோரமாகச்செல்லுவதற்காக, அவனுடன் தள்ளு முள்ளு செய்வதில்லை. அல்லது அந்த முன்னுரிமைக்காக அவனுடன் சண்டை செய்வதில்லை.

தன் இருப்பிடத்திலிருந்து அவனை வெளியேற்ற எந்தச்செல்வந்தனும் முனைவதில்லை. யாரும் அவன் மேல் வழக்குத்தொடுப்பதில்லை. ஒருவரும் அவனுடன் சேர்ந்து நீதிமன்றத்திற்குப்போவதில்லை. தற்போது உள்ளது போல ஒரு சுதந்திரமான கனவானாக இல்லாமல் இருந்திருந்தால், நான் ஒருவருக்குப்பணியாளாய் அல்லது கூடவே பின் தொடரும் உதவியாளனாய் அல்லது வறிய உறவினனாய் இருப்பதை விட,

பலமற்ற, மெய்யான, உயர்ந்த மனம் என்னிடம் இருப்பதால், ஒரு பிச்சைக்காரனாய் இருக்கவே நான் விரும்புகிறேன்.

கந்தல் ஆடைகளே வறுமை என நிந்தனை செய்யப்படுகிறது. அவையே பிச்சைக்காரனின் உடுப்புகள். அதுவே அவனது தொழிலுக்கு ஏற்ற முத்திரை. பிச்சைத்தொழிலுக்கான உரிமைப்பட்டயம். பொது இடத்தில் அவன் அணிந்து வருவான் என அவனிடம் எதிர்பார்க்கப்படுகின்ற உடை. அவன் நவநாகரிகத்தை விட்டு ஒரு போதும் அகன்றதில்லை. அல்லது காலத்துக்கேற்றபடி தன்னை மாற்றிக்கொள்ளாமல் அவன் பின்தங்கியதில்லை. அரசவையில் துக்க நிகழ்ச்சி என்றால் அவன் துக்கமாக இருக்க வேண்டியதில்லை. யாரைக்கண்டும் அச்சப்படாமல், அவன் எல்லா வர்ணங்களிலும் உடை உடுத்துகிறான். குவாக்கர்கள்" அணியும் உடையை விட, அவன் உடை சிறிதளவு கூட மாற்றம் அடையவில்லை.

உலகில் தன் தோற்றம் குறித்துக்கவனம் செலுத்தாத ஒரே ஆள் அவன் தான். உலகில் நிகழும் ஏற்றத்தாழ்வுகள் அவனைப்பொருட்படுத்துவதில்லை. அவன் ஒரே இடத்தில் தொடர்ந்து நிலைத்து நிற்கிறான். விவசாயம் அல்லது வர்த்தகத்தின் ஏற்ற இறக்கங்கள் அவனைத்தீண்டுவதில்லை. யாருக்காகவும் அவன் ஜாமீன்தாரராகவோ, உறுதியளிப்பவராகவோ இருக்க வேண்டும் என எதிர்பார்க்கப்படுவதில்லை. அவனது அரசியல் கருத்து குறித்து யாரும் அவனிடம் கேள்வி கேட்டுத்தொல்லை தருவதில்லை. இவ்வுலகின் ஒரே சுதந்திர மனுஷன் அவனே!

இந்தப்பெருநகரத்தில் இருக்கும் எண்ணற்ற, பார்க்கக்கூடிய விஷயங்களில், இந்தப்பிச்சைக்காரர்களும் முக்கியக்காட்சிப் பொருட்களே! இலண்டன் நகரின் மற்ற எல்லா சிறு வணிகர்களின் குரலையும் நான் உதாசீனப்படுத்தாதது போலவே, பிச்சைக்காரர்களையும் உதாசீனப்படுத்துவதில்லை. எந்த ஒரு தெருவின் முனையும் இவர்கள் இல்லாமல் முழுமையாக இல்லை.

வீதிப்பாடகர்களைப் போலவே அவர்களும் இன்றியமையாதவர்கள். பழைய இலண்டன் நகரின் அலங்காரமான அடையாளங்கள் போலவே, அவர்களது கண்கவர் உடையும் அலங்காரமானது தான். அவர்களே

நீடித்து ஸ்திரமாக நிற்கின்ற அடையாளங்களும், நினைவுப் பொருட்களும், சூரியக் கடிகாரத்தில் எழுதப்பட்ட பழமொழிகள் போலவும் ஆவார்கள். ஈஸ்டர் பெருநாளில் தரப்படுகின்ற பிரசங்கத்தின் பொருளாகவும், குழந்தைகளுக்கு அறிவுறுத்தப்பயன்படும் அடையாளங்களாகவும் இருப்பவர்கள்.

அதிக நெருக்கடியான, அழுக்கான ஜனங்களின் போக்குவரத்து சந்தடியினைத் தடுத்து சீர் செய்து அனுப்ப உதவும் தடைகள்.

**'அங்கு உள்ள வறிய, நொறுங்கிய தரித்திரனைப் பார் '**[12]

எல்லாவற்றிற்கும் மேலாக, நாகரீகமான நாசூக்கான தன்மை நகரை விட்டு அவர்களை வெளியேற்றும் முன்பாக, லிங்கன் வளாக தோட்டத்தின் சுவரோரமாய், வரிசையில் நிற்கும், வயோதிகக் குருட்டு தோபித்துக்கள்[13] அவர்கள். அவர்கள் தங்களது குருட்டுக்கண்களால் பார்த்தபடி, யாருடைய அனுதாபத்தையாவது அல்லது சாத்தியமானால் அக்கண்களில் வெளிச்சத்தையாவது பெற்று விட முயல்வர். அவர்களது காலடியில், அவர்களுக்கு விசுவாசமான வழிகாட்டி நாய் ஒன்று இருக்கும். அவர்கள் எங்கே ஓடிப் போனார்கள்? அல்லது நகரின் தெருக்களில், அவர்களது பார்வையைப்போலவே உள்ள குருட்டு முனைச்சந்திற்கு, நல்ல காற்றோட்டத்திலிருந்தும், சூரிய வெப்பத்திலிருந்தும் துரத்தப்பட்டார்களா?

நான்கு சுவர் முனைகளுக்கு நடுவில், நொறுங்கிப்போன எளிய வீட்டில் அவர்கள் இரு மடங்கு இருண்மையின் தண்டனையைத் தாங்கிக்கொள்கின்றனர். உற்சாகமாகவும், நம்பிக்கையுடனும் தூரத்தே கடந்து செல்லும் ஒரு பாதசாரியின் நடைச் சந்தடியைக்கேட்கும் அவர்களின் கைவிடப்பட்ட துக்க நிலைக்கு, அரை பென்னி நாணயத்தினைப் பிச்சையிடும் போது எழும் கிணுங்கும் சப்தம் ஒரு போதும் ஆறுதல் சொல்லாது. அவர்களது பயனற்ற கைத்தடிகள் எங்கே தொங்குகின்றன? அவர்களது நாய்களை வைத்துக்கொண்டு யார் பணம் சம்பாதிப்பார்கள்? பரிசுத்த லூக்கா தேவாலயத்தின் புரவலர்கள் அவர்களைச்சுட்டுத்தள்ளும்படி ஏதாவது ஏற்பாடு செய்து விட்டார்களா?

அல்லது "மென்மையான" சுபாவமுள்ள மடாலயத்தலைவரான திரு. பா… என்பவரின் ஆலோசனையின்படி அவர்கள் (பிச்சைக்காரர்கள்) யாவரையும் கோணிச்சாக்குகளில் போட்டுக்கட்டி, தேம்ஸ் நதியில் வீசி விட்டார்களா?

இலத்தீன் இலக்கியவாதிகளில், ஆங்கிலேயத்தனம் நிரம்பிய முழு பழமைவாதியான, சிரத்தையில்லாத வின்ஸென்ட் போர்ன் அவர்களின் ஆன்மா சாந்தி அடைவதாக! அவர் தன்னுடைய 'ஒரு நாயின் கல்லறை வாசகம் ' எனும் கவிதையில், இந்த மனிதன் - நான்கு கால் பிராணியின் உறவு, இந்த நாய் மற்றும் மனிதனின் தோழமை குறித்து விவரித்துள்ளார். வாசகரே, இதை நன்கு வாசியுங்கள்.

தினசரி காணும் காட்சிகளால் உந்தப்பட்டு எழுதப்படும் இத்தகைய மென்மையான கவிதை, ஒரு பெரு நகரத்தின் ஜன சந்தடியுள்ள பொது நடைபாதையில் தினசரி கடந்து செல்லும் பாதசாரிகளின் அறவுணர்விற்கு நன்மை பயக்கிறதா அல்லது தீங்கிழைக்கிறதா?

"என் குருட்டுக்கிழ எஜமானனின் காலடிகளை
நடத்திச்சென்று பழக்கப்பட்ட
வறிய, ஐரஸ் எனும் ஓநாய் வகை நாய்
இதோ கிடக்கிறேன்.
அவனது வழிகாட்டியும், காவலனும் நானே.
என் பணிக்காலம் நீடித்த வரை,
அவன் நெடுஞ்சாலையிலும்
சாலைச்சந்திப்புகளிலும்,
அச்சத்துடன், தன் பாதையில் செல்லும் போது,
அந்தக்கைத்தடிக்கு வேலை இருக்கவில்லை.

என் நட்பான சங்கிலியின்
பாதுகாப்பான வழி நடத்துதலால்,
அவன் தன் காலை, திடமாக முன் வைக்கிறான்.
அங்கே, மிக அடர்த்தியான ஜன நெருக்கடி உள்ள,
ஒரு கல்லில் அமர்ந்து கொள்கிறான்.
காலை முதல் மாலை வரை,

தனது இருண்ட நிலையை எடுத்துப்புலம்பி,
போவோர் வருவோரிடம் சத்தமிட்டு,
உணர்ச்சி மேலிடப்புலம்புகிறான்.
எல்லோரிடமும் வீணாக புலம்புவதில்லை.
அங்கொன்றும், இங்கொன்றும்,
வசதியானவரிடம், நல்லவரிடம் மட்டுமே.
அவர்கள் சில்லரைக்காசுகள் தருகின்றனர்.
அந்நேரம், நான் அவனது காலடியில்
அடிமை போலே கிடந்து உறங்குவேன்.
அது முழுதான ஆழ்ந்த உறக்கமல்ல.
அவனது சிறிய அசைவிற்குக் கூட
சலனப்பட்டு விழித்துக்கொள்ளும் வண்ணம்,
என் மனமும், காதுகளும் உறங்காமல் இருக்கும்.
அவனது கருணையுள்ள கையிலிருந்து வரும்
மீதி உணவுத்துணிக்கைகளுக்காக,
அல்லது மிச்சம் மீதியாய் உள்ள
பெருத்த உணவின் சரி பங்கிற்காக.

நீண்ட பகல் பொழுதில்,
துன்பகரமான பிச்சையெடுத்தலில் ஈடுபட்டு,
இரவில், சோர்ந்து களைத்திருக்கும் போது,
வீடு திரும்புமாறு இரவு எங்களை எச்சரிக்கும்.
இதுவே என் நடபடிகள், இதுவே என் வாழ்க்கை முறை.

காலமும், வியாதியும் என்னை மேற்கொண்டு,
என் குருட்டு எஜமானனிடமிருந்து
என்னைப்பிரித்து விட்டது.
வருடங்களின் கால நீட்சியில்,
அவனது நற்செயல்கள் அழிந்து போகாதபடி,
நிசப்தத்தில் மறந்து போகாதபடி,
ஐரஸ் ஆகிய நான்,
இந்த இளைத்துப்போன கல்லறையை எழுப்பியுள்ளேன்.
முழு மனதுடன் உண்டாக்கிய
எளிய நினைவுச்சின்னம்.
அதில் எழுதிய கல்லறை வாசகம்,

நீடித்து எஞ்ஞான்றும் உள்ள
ஒரு பந்தத்திற்கு அத்தாட்சி செய்யும் வண்ணம்,
ஒரு பிச்சைக்காரன் மற்றும் அவனது
நாயின் குணநலன்கள் குறித்து.[14]

கடந்த சில மாதங்களாக, இந்த இலண்டன் நகர சாலையோர நடைபாதைகளில், அழகான மேல் பாதி உடலுடன், ஒரு நன்கு தெரிந்த மனிதனின் முழு உருவமோ அல்லது அதன் ஒரு பகுதியோ கடந்து செல்வதை இந்த பூஞ்சடைந்த கண்கள் கண்டு வீணே ஆய்ந்துள்ளன. மிகுந்த அறிவுப்பூர்வமாக வடிவமைக்கப்பட்ட ஒரு மரத்தால் ஆன இயந்திரத்தில் அமர்ந்து, அதன் சக்கரங்களைச்சுழற்றியபடி விரைந்து செல்வான்.

அது உள்ளூர்வாசிகளுக்கும், வெளிநாட்டினருக்கும், குழந்தைகளுக்கும் ஒரு காட்சியாக அமைந்தது. அவன் திடகாத்திரமான உடல் கொண்டவன். அவன் கப்பல் மாலுமி போல சிவந்த முகம் கொண்டவன். அவன் தலை புயலிலும், வெயிலிலும் தோய்ந்தது. அவன் இயற்கையான ஆர்வத்தைத்தூண்டக்கூடியவன். விஞ்ஞான நோக்குடையவர்களுக்கு சிந்தனையைத்தூண்டக்கூடியவன். எளியவர்களுக்கு மகா புத்திசாலியாகத்தோற்றமளித்தவன்.

தன்னுடைய உயரத்துக்கு அவன் தாழ்ந்து விட்டதற்காக, ஒரு குழந்தை அவனை உற்றுப்பார்க்கும். அவனது தடித்த, ஆரோக்கிய உடலையும், திடமான இருதயத்தையும், பாதி அங்கம் மட்டுமே கொண்ட அந்த பேருருவத்தைக்கண்ட பின், பிறிதொரு ஊனமுற்றவன், தனது கோழைத்தனத்தை வெறுப்பான்.

ஒரு சிலரே அவனைக்கவனித்திருக்கக்கூடும். ஏனெனில், அவனை இந்த நிலைக்குத்தாழ்த்தியது 1780-ம் வருடக் கலவரமே[15]. அதிலிருந்து அவன் தரையில் தாழ்பவனாக ஆகி விட்டான். அந்தேயு[16] போல அவன் பூமியிலேயே பிறந்து, தன் புத்திள வீரியத்தை தனக்கு அணுக்கமான மண்ணிலிருந்து பெற்றுக் கொண்டான். அவன் கம்பீரமான ஒரு துணுக்குப்பகுதி. எல்ஜின் சலவைக்கற்களைப் போன்றே சிறந்தவன்.

இயற்கை, அவனது கால்களையும் தொடைகளையும் சரிப்படுத்துவதற்குப்பதிலாக, உடலின் மேல் பகுதிக்குச்சென்று தங்கி விட்டது. அவன் ஒரு பாதி ஹெர்குலஸ் போல இருந்தான்.

பூகம்பத்திற்கு முன் கேட்பது போன்ற இடி முழக்கமும், உறுமலும் போன்ற ஒரு பெரிய ஓசையை நான் கேட்டேன். என் கண்களைத் தாழ்த்திப்பார்த்தபோது, இந்த மாண்ட்ரேக்[17] தன் வருகையின் நிமித்தம் காரணமாகப்புறப்பட்டு விட்ட ஒரு குதிரையினை வசை பாடிக் கொண்டிருந்தான். அவன் அந்த கோபமூட்டும் நான்கு கால் பிராணியை வாடகைக்கு விடுவதால் தனக்குக் கிடைக்கும் நியாயமான பங்கைப் பெற விரும்பினான். அவன், ஸென்டார்[18] என்னும் புராண கால மிருகத்தின் மேல் பாகம் போன்றவன். ஏதோ ஒரு லேப்பித்தான் சர்ச்சையில்[19] சிக்கி, அவனது குதிரை வடிவ பாதி உடல் துண்டிக்கப்பட்டு விட்டது. அவன் தனது எஞ்சிய உடலில், பாதி உடலை மட்டுமே வைத்துக்கொண்டு, சமாளித்து வாழ்ந்து கொள்வதைப் போன்ற தோற்றத்துடன் தொடர்ந்து போய்க்கொண்டேயிருந்தான்.

மேல் நோக்கிப்பார்த்த அவனது முகத்தில் குறைபாடுகள் எதுவும் இல்லை. அவள் வானை நோக்கி, ஒரு உற்சாகமான பார்வை பார்த்தான். அவன் நாற்பத்தி இரண்டு ஆண்டுகளாக இந்தத் தொழிலைச்செய்து வருகிறான். இப்போது இந்தப்பணி செய்து அவனது தலைமுடியெல்லாம் நரைத்துப்போய் விட்டது. அவனது நல்ல உற்சாகம் ஒரு போதும் பாதிக்கப்படவில்லை. அவன் சுதந்திரமாக வாழவும், தொழில் செய்யவும் விரும்புகிறான். அதை விட்டு விட்டு, ஒரு எளிய வீட்டில், தான் சுதந்திரமாக இருப்பதற்காக அவன் தரும் விலை தான் அது. அந்த வீட்டிற்கு அவன் இட்டிருக்கும் பெயர் "திருத்தம்". ஒரு முரண்பாடான பெயர்.

சட்ட ரீதியான நடவடிக்கை எடுக்க வேண்டிய அளவுக்கு, இத்தகைய (தினசரி) காட்சிகள் ஒரு இடையூறா? அல்லது ஒரு பெரிய நகரத்தில் கடந்து செல்லும் பாதசாரிகளின் மனதைத்தொடும் நல்ல விதமான விஷயமில்லையா?

அந்தப் பெருநகரத்தில் தோன்றும் காட்சிகளில் - கண்காட்சி அரங்கங்கள் - மற்றும் அங்கு வரும் பொருட்கள் யாவும் வாய் பிளந்து

பார்க்க வைக்கும் அளவுக்கு ஆர்வத்தைத்தூண்டுபவை. அவை வெறும் குவியல் குவியலான காட்சிகள் தவிர வேறென்ன? முடிவற்ற காட்சிகள் மட்டுமே. அல்லது வேறெதற்கு அந்தப் பெருநகரத்தை விரும்புகிறார்கள்? அங்கு இயற்கை பிறழ்ந்த விசித்திரம் ஒன்றிற்கான இடம் இல்லையா?

ஊரில் ஒரு வதந்தி பரவியது. அந்த ஊனமுற்றவன், நாற்பத்தி இரண்டு ஆண்டுகளாக, சிறிது சிறிதாய்ச்சேகரித்த சில நூறு பவுண்டுகளிலிருந்து, தன் பிள்ளைக்கு ஒரு பகுதியைத்தந்து விட்டான் என்பது. அப்படித்தருவதன் மூலமாக அவன் யாரைத்துன்புறுத்துகிறான்? அவன் யாரை ஏமாற்றுகிறான் ? தாங்கள் கொடுத்த பென்னி நாணயங்களுக்கு உண்டான காட்சியை, தர்மம் செய்தவர்கள் கண்டு விட்டார்கள். நாள் முழுதும் வெயில், மழை மற்றும் வானத்திலிருந்து விழும் உறை பனி என இவை எல்லாவற்றிலும் தோய்ந்து, அசௌகரியமான உடலை மட்டும் கொஞ்சம் தளர்த்திக்கொண்டால் தான் என்ன? இரவு நேரங்களில், அவன் தன்னையொத்த ஊனமுற்றவர்களுடன் சங்கமித்து, சூடான இறைச்சியும், காய்கறிகளும் உண்டு மகிழ்வதாக மக்களவையில் அவனுக்கு எதிரான தீவிரக் குற்றச்சாட்டு ஒன்றைச் சொன்னார் ஒரு மத போதகர்.

இது உண்மையெனில், அவன் பிறர் மேல் கொண்டுள்ள தந்தைப் பாசத்திற்காக, அவனை மரக்கம்பத்தில் கட்டி வைத்து அடிக்கக்கூடாது. மாறாக, அவனுக்குச் சிலை எழுப்ப வேண்டும். அவன் இரவு நேர உல்லாசங்களில் ஈடுபடுவதாக ஒரு மிகையான குற்றச்சாட்டும் சொல்லப்பட்டு, அவனுக்கு எதிரான அவதூறும் சுமத்தப்படுகிறது. அதனால், அவன் தானே தேர்ந்தெடுத்துக்கொண்ட தீங்கற்ற மற்றும் அறம் போதிக்கின்ற வாழ்க்கையிலிருந்து அவன் விடுவிக்கப்பட்டு, ஒரு திடமான நாடோடியாக தனது நரைத்த வயதில் நடமாடிக்கொண்டிருப்பதற்காக அவன் சிறையில் அடைக்கப்பட வேண்டுமா?

ஒரு காலத்தில், யாரிக்[20] என்பவன் இருந்தான். அவன் ஊனமுற்றோருக்குப்படைக்கப்படும் உணவு விருந்தில் எந்த வெட்கமும் இல்லாமல் பந்தி அமர்ந்து, சாப்பிட்டு விட்டு, தன் ஆசீர்வாதங்களையும்,

சிறிய நன்கொடைத்தொகையையும், தன் நல்லெண்ணத்தின் அடையாளமாகத் தந்து விட்டுச்செல்வான்.

**" காலமே! உன் புத்திரர்களை நீ இழந்து விட்டாய் ".** [21]

பிச்சை எடுப்பதன் மூலமாக அளவு மிக்க செல்வம் சேர்த்து விட்டார்கள் என்று சொல்லப்படும் கதைகளில் பாதிக்கு மேல், கஞ்சர்கள் சொல்லுகின்ற அவதூறுகளாகும். இது குறித்து ஒரு கதை, நெடுநாளைக்கு முன்பு செய்தித்தாளில் வெளி வந்து, அதன் பின்பு, அதன் தொடர்ச்சியான தருமமற்ற கருத்துக்களும் உருவாக்கப்பட்டன.

ஒரு வங்கியில் குமாஸ்தாவாகப்பணிபுரிந்த ஒருவன், தான் அறியாத அந்நியன் ஒருவன், தனக்காக ஐநூறு பவுண்டு பெறுமான உயில் சொத்து ஒன்றை விட்டுச்சென்றிருப்பதாக அறிவிக்கப்பட்டதும், அது குறித்து ஆச்சரியமடைந்தான். இந்தக் குமாஸ்தா, தான் வாழ்ந்த பெக்காம்[22] (அல்லது அதனருகில் உள்ள கிராமம்) என்ற ஊரிலிருந்து, தான் பணி செய்த அலுவலகத்திற்கு கடந்த இருபது வருடங்களாகப் போய்க்கொண்டிருக்கிறான். அப்படிப் போகும் வழியில், பரோ[23] என்ற இடத்தில் பாதையோரமாய் இருந்த பர்திமேயு[24] ஒருவனுக்கு, தினமும் அரைப்பென்னி நாணயத்தைப் பிச்சை போடுவான். அந்த நல்ல, முதிய பிச்சைக்காரன் தனக்கு தினமும் தர்மம் செய்யும் தர்மவான் யாரென்று அவரது குரலை மட்டும் வைத்து அடையாளம் கண்டு, தான் இறக்கும் போது, அது வரை தான் பிச்சையெடுத்து சேமித்த எல்லாவற்றையும் இந்த வயதான வங்கி ஊழியனுக்கு விட்டுச்சென்றான். (அரை நூற்றாண்டுகளாக அவன் அவ்வளவு தூரம் சேமித்திருக்கலாம்!). கண் பார்வையற்றவர்களுக்கு தர்மம் செய்யும் மக்களின் இருதயங்களையும், அவர்களது பணத்தையும் அடைத்து வைப்பதற்காக இந்தக்கதை சொல்லப்பட்டதா? அல்லது சரியான திசையில் செய்யப்பட்ட தர்மமும், அதற்கு பிரதியுத்தரமாகச்செய்யப்பட்ட நன்றிக்கடன் என்ற நன்னெறியை இது காட்டவில்லையா?

சில சமயங்களில், நான் அந்த வங்கி குமாஸ்தாவாக இருந்திருக்கக்கூடாதா என எண்ணுகிறேன். ஒரு முதிய, பார்வையற்ற, நன்றியுள்ள ஏழை ஜென்மம் ஒன்று கண் முழித்து சூரியனை

நோக்கிப்பார்ப்பதாக எண்ணிக் கொள்கிறேன். அவனைப் பார்த்துவிட்டு, என் பணப்பையை மூடிக்கொள்ள இயலுமா? ஒரு வேளை என்னிடம் சிறு நாணயம் கூட இல்லாமல் இருக்கலாம்.

வாசகரே, இந்தக் கடினமான வார்த்தைகள், முறையற்ற கருத்து முன்மொழிவுகள், பாசாங்கு ஆகியவை குறித்து நீங்கள் அச்சப்பட வேண்டாம். கொடுங்கள், கேள்வி கேட்காதீர்கள்!

உன் ஆகாரத்தைத்தண்ணீர்கள் மேல் போடு. [25] இந்த வங்கி குமாஸ்தா போன்ற அறியாத அப்பிராணிகளான சிலர், தேவர்களை உபசரித்திருக்கின்றனர்.[26] துன்பம் வந்தது போல நடிக்கும் போலிகளைக்கண்டால், உங்கள் பணப்பையினை முடிச்சுப்போட வேண்டாம். சில சமயங்களில், தர்மம் செய்யுங்கள். வெளிப்படையாகவே பார்வைக்கு எளிமையாய்த்தோன்றுகின்ற வறியவன் ஒருவன், தன் ஏழு சிறு குழந்தைகளின் பேரால் உங்களிடம் யாசகம் கேட்டால், அது உண்மையாக இருக்கும். ஒரு அரைப்பென்னி நாணயத்தை மிச்சம் பிடிப்பதற்காக, உண்மையின் ஆழங்களைத்தோண்டி ஆராய வேண்டாம். அவனை நம்புவது நல்லது. தான் ஒரு குடும்பத்தின் தகப்பன் என்று பொய்யாகச்சொல்லித் தோற்றமளிப்பவன், அப்படி இல்லாதபடி இருந்தால், ( நீங்கள் எண்ணினால்) ஒரு வறிய பிரம்மச்சாரிக்கு உதவியதாக எண்ணிக்கொள்ளுங்கள்.

போலியான தோற்றத்துடனும், முணுமுணுக்கும் பேச்சுடனும், அவர்கள் உங்களிடம் வரும் போது, அவர்களை மேடை நடிகர்கள் என எண்ணிக்கொள்ளுங்கள். ஒரு மேடை விதூஷகன் இத்தகைய பாவனைகளைச்செய்வதற்கு நீங்கள் பணம் தருகிறீர்கள். ஆனால், இந்த வறியவர்களைப்பொறுத்தமட்டில், அது உண்மையான வறுமையா அல்லது போலியானதா என்று நீங்கள் உறுதிபடச்சொல்ல முடியாது.

-----------------------------------

## குறிப்புகள்

### 1.ஆல்ஸைட்ஸ் கழி

ஹெர்குலிஸின் கழி. இது ஹெர்குலிஸ் தன் கையில் ஏந்திய கழியைக்குறிக்கும். ஹெர்குலிஸ், உலகில் உள்ள பயங்கர ஜந்துக்களை விரட்டியடிப்பதற்காக இதைப்பயன்படுத்தினான்.

### 2.பதினோறாவது நிலை சித்திரவதையின்

கி.பி. 64 முதல் கி.பி. 313 வரை கிறித்தவர்களைச்சித்திரவதை செய்து கொன்ற பத்து ரோமானிய அரசர்களைக்குறித்து லேம்ப் பேசுகிறார். அதற்கு அடுத்தது, பதினோறாவது நிலை சித்திரவதை எனக்குறிப்பிடும் முகமாக இப்படி எழுதுகிறார்.

### 3. டயோனிஸியஸ்

இத்தாலியில், சிசிலியில் உள்ள சிராக்யூஸ் நகரக்கொடுங்கோலன். கி.மு. 343- ல் தீமோலியன் என்பவனால் வெளியேற்றப்பட்ட இவன், கொரிந்து பட்டணத்தில் பள்ளிக்கூட ஆசிரியராகப்பணியாற்றினான்.

### 4.வேன் டைக்

ஹாலந்து நாட்டு ஓவியர். காலம் கி.பி. 1599 – 1641. முழுப்பெயர் சர் ஆன்டனி வேன் டைக்.

### 5.பெலிசாரியஸ்

கி.பி. 505 – 565. ரோமானிய தளபதி. கி.பி. 563-ல் பேரரசர் ஜஸ்டினியன் அவர்களுக்கு எதிராகக்கொலைச்சதி செய்ததாக இவர் மீது குற்றம் சுமத்தப்பட்டது. எனினும், அது நிரூபிக்கப்படாமல் இவர் விடுவிக்கப்பட்டார். இவர் முதிய வயதில் பிச்சை எடுத்ததாக செவிவழிக்கதைகள் உள்ளன.

### 6.மது விடுதிகளின் பலகை

அந்நாளில் ஒயிட் சேப்பல் சாலையில் இருந்த மது விடுதியில் மாட்டப்பட்டிருந்த பலகையில் "பெத்நால் க்ரீன் கிராமத்தின் குருட்டுப் பிச்சைக்காரன்" என்ற பலகை எழுதி மாட்டப்பட்டிருந்தது.

**7.குருட்டுப்பிச்சைக்காரனுக்கு**

எலிசபெத் மகாராணியார் காலத்தில் எழுதப்பட்ட 'பெத்நால் க்ரீன் ஊரின் பிச்சைக்காரனின் மகள் ' என்ற கதைப்பாடலில் இந்தக் குருட்டுப் பிச்சைக்காரனைப்பற்றிய குறிப்பு உள்ளது. ஹென்றி என்ற பெயர் கொண்ட அவன் ஈவ்ஷாம் என்ற இடத்தில் நடந்த போரில் கண்களை இழந்தவன்.

**8.லூசியன்**

சமோஸட்டா என்ற ஊரைச்சேர்ந்தவர். கி.பி. 128 – 180. சொற்பொழிவாளர். அங்கத எழுத்தாளர். அஸிரிய இனத்தைச் சேர்ந்தவர் என்றாலும், கிரேக்க மொழியிலேயே எழுதினார்.

**9.ஸெமி ராமிஸ்**

அஸிரிய மன்னன் நினஸ் என்பவனின் மனைவி. நினஸின் மறைவுக்குப்பின்னர் அரியணையேறினார்.

**10.காதல் வயப்பட்ட கதைப்பாடலை**

ஆப்பிரிக்க அரசன், ஒரு பிச்சைக்காரியின் மேல் காதல் கொண்டு, அவளை மணம் செய்து, அவளையே நாடடின் ராணியாக்கியதாக உள்ள கற்பனைக் கதை. டென்னிஸன் எழுதிய 'பிச்சைக்காரி' ( *The beggarmaid* ) என்ற கவிதையைப்பார்க்கவும்.

**11.குவாக்கர்கள்**

ஜார்ஜ் ∴பாக்ஸ் என்பவரால் துவக்கப்பட்ட கிறித்தவ மதத்தின் கிளை அமைப்பு ஜார்ஜ் ∴பாக்ஸ் (கி.பி. 1624 – 1690). கி.பி. 1648 ல் தனது மதப்பிரச்சாரத்தைத் துவங்கிய ஜார்ஜ் ∴பாக்ஸ் அவர்கள் அடிக்கடி கைது செய்யப்பட்டார்.

**12.வறிய, நொறுங்கிய தரித்திரனைப் பார்**

ஷேக்ஸ்பியரின் 'நீ விரும்பும் வண்ணமாகவே' (*As you like it* ) நாடக வசனம். அங்கம் 2, காட்சி 1, வரி 55

**13.தோபித்துக்கள்**

பரிசுத்த வேதாகமத்தில் இருந்து நீக்கப்பட்டதள்ளுபடியாகமத்தில் (Apocrypha) உள்ள கதை. தோபித்து என்பவன் தன் வீட்டு முற்றத்தில் படுத்து உறங்கிய போது, ஒரு குருவி இட்ட எச்சம் அவன் கண்ணில் விழுந்து, அவன் குருடாகிப்போனான்.

**14.நாயின் குணநலன்கள் குறித்து**

வின்ஸெண்ட் போர்ன் எழுதிய இலத்தீன் கவிதை. வின்ஸெண்ட் போர்ன் கி.பி. 1697 – 1747 வரை வாழ்ந்தவர். கவிஞர் வில்லியம் கூப்பரின் ஆசிரியர்.

**15. கி.பி. 1780 –ம் வருடக்கலவரமே**

இது ஜார்ஜ் கார்டன் பிரபு கலவரம் என்றும் அழைக்கப்படுகிறது. இலண்டன் நகரில், பல நாட்களுக்கு நீடித்த இந்தக்கலவரம் புராட்டஸ்டண்ட் கிறித்தவர்களின் வெறியால் ஏற்பட்டது.

**16.அந்தேயு**

லிபிய நாட்டு வீரன். நெப்டியூன் மற்றும் தெர்ரா ஆகியோரின் புதல்வன். இவன், தன் தாயாகிய பூமியைத்தொடும் போதெல்லாம் இவனுக்கு பலம் வந்தது. எனவே, ஹெர்குலிஸ் இவனை அந்தரத்தில் தூக்கி நிறுத்திக்கொண்டு, இவனைக்கொன்றான் என்று பழைய கிரேக்கப் புராணம் கூறுகிறது.

**17.மாண்ட்ரேக்**

மாண்ட்ரகாரோ என்ற இந்தச் செடி, மனிதனைப்போன்ற தோற்றத்துடன் காட்சியளிக்கும்.

**18.ஸெண்டார்**

கிரேக்கப்புராணத்தில் குறிப்பிடப்படும் ஒரு மிருகம். இடுப்பு வரை மனித உடலும், அதற்குக்கீழே குதிரை உருவமும் கொண்ட விநோத விலங்கு.

**19.லேப்பித்தான் சர்ச்சையில்**

பிரிதௌஸ் என்ற தலைவனுடைய வீட்டுத்திருமண விருந்தில், மதுவைக் குடித்து விட்டு இரு குழுக்கள் சண்டையிட்டுக்கொண்டன என்று இலத்தீன் புலவர் ஓவிட் என்பவர் எழுதியுள்ள மெட்டமார்

ஃபோஸிஸ் நூலில் ஒரு குறிப்பு தரப்பட்டுள்ளது. சண்டையிட்டுக்கொண்ட இரு குழுக்களில் ஒன்றின் பெயர் லேப்பித்தா என்பதாகும்.

**20.யாரிக்**

லாரன்ஸ் ஸ்டர்ன் என்ற எழுத்தாளர், தன்னை யாரிக் என்று அழைத்துக்கொண்டார். யாரிக் என்பது ஷேக்ஸ்பியரின் **'ஹேம்லட் '** நாடகத்தில், கல்லறை தோண்டுபவனின் பாத்திரப்பெயர்.

**21.காலமே! உன் புத்திரர்களை நீ இழந்து விட்டாய்.**

ஷேக்ஸ்பியரின் 'ஜூலியஸ் சீசர் ' நாடக வசனம்.அங்கம் 1,காட்சி 2, வசனம் 151

**22.பெக்காம்**

இலண்டனுக்கு தென்-கிழக்கே உள்ள ஒரு ஊர்.

**23.பரோ**

தேம்ஸ் நதியின் தென்புறம் உள்ள இடம்.

**24.பர்திமேயு**

எரிக்கோ நகரில் வாழ்ந்த குருட்டுப்பிச்சைக்காரன். இயேசு கிறிஸ்துவானவர், எரிக்கோ நகரை விட்டு வெளியேறி எருசலேம் நகரை நோக்கிச்சென்ற போது, இவனைக் கண்டு, இவனுக்குக்கண்பார்வை தந்து, அற்புதம் செய்தார். பார்க்க, புதிய ஏற்பாடு. மாற்கு 10 : 46

**25.உன் ஆகாரத்தைத் தண்ணீர்கள் மேல் போடு**

பழைய ஏற்பாட்டில் உள்ள வசனம். பிரசங்கி 11 : 1

**26.தேவர்களை உபசரித்திருக்கின்றனர்**

பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்படும் சம்பவம். தீர்க்கதரிசி ஆபிரகாம், தனது கூடாரத்தில் இருந்த போது, அவனது கூடாரத்திற்கு வெளியே மூன்று பேர் நின்றிருந்தனர். அவன் அவர்களை உணவு தந்து உபசரித்தான். பார்க்க, ஆதியாகமம் 18:2, ஆதியாகமம் 19:1, எபிரேயர் 13 : 2

# 9. புத்தாண்டு தினத்திற்கு முந்திய மாலை

## - சார்லஸ் லேம்ப்

## (*New Year's Eve* by Charles Lamb)

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு வருஷத்துக்கு குறைந்த பட்சம் இரண்டு பிறந்த தினங்கள் உண்டு. அவனுடைய மரணமடையும் தருணத்தில் காலம் பிறழ்ந்து நழுவிப்போய், அவனைப் பாதிப்பதைப்போல, அது பிறழ்ந்து, அவன் அதைத் தொடர்ந்து சுழலுமாறு செய்கிறது. அதில் ஒன்றை அவன் தன்னுடையதெனக் கருதுகிறான். எனினும், படிப்படியாக பழைய விஷயங்களைப்பின்பற்றுவதை விட்டு விடுவதைப்போல, நம்முடைய சரியான பிறந்த தினத்தைச்சிரத்தையாகக் கொண்டாடும் வழக்கம் கிட்டத்தட்ட இல்லாமல் போய் விட்டது. அல்லது சொல்லத்தெரியாத குழந்தைகளிடம் அது விடப்பட்டிருக்கலாம். அவர்களுக்கு அது குறித்து, கேக்குகள் மற்றும் ஆரஞ்சுப்பழங்கள், இவைகளைக்கடந்து எதுவும் தெரியாமல் இருக்கலாம்.

ஆனால், புது வருடப்பிறப்பு என்பது ஒரு அரசனுக்கோ அல்லது ஒரு செருப்பு தைப்பவனுக்கோ புறக்கணிக்க முடியாத அளவுக்கு, மிகவும் அகன்ற ஒரு விஷயமாகும். யாருமே ஜனவரி முதல் தேதியை அலட்சியப்படுத்துவதில்லை. அந்தத்தேதியிலிருந்து தான் எல்லோருமே காலத்தைக்கணக்கிடத்தொடங்கி, கடந்து சென்ற காலத்தையும் கணக்கிடுகிறோம். அதுவே நம் மனித குலத்தின் பிறப்பின் துவக்கமுமாகும்.

எல்லா மணிகளின் எல்லாச் சப்தங்களையும் விட, பழைய வருடத்தை முடித்து விரட்டும் மிக சிரத்தையானதும், நம்மை நெருடக்கூடியதுமான மணி ஒலி, அந்த இசை, வானத்தின் உச்சி விளிம்பு வரை சென்று தொடக்கூடியதாகும். அந்த மணி ஒலியை நான் கேட்கும் போது, கடந்து போன பன்னிரண்டு மாதங்களில் நிகழ்ந்த சம்பவங்களின் பிம்பங்கள் எல்லாம் ஒன்றாய்த்திரண்டு, என் மனதில் ஒரு திரட்சியாய் நிற்பதைப்பார்க்காமல் இருக்க முடியாது. நான் செய்த செயல் யாவற்றையும், கஷ்டப்பட்ட யாவற்றையும், செயலாற்றியதையோ அல்லது புறந்தள்ளியதையோ அந்த நேரத்தில்

எண்ணி விசனப்பட்டுக்கொள்வேன். ஒரு மனிதன் இறக்கும் தருவாயில் உணருவதைப்போல, அந்த வருடத்தின் மதிப்பை உணரத் தொடங்குவேன். அது என்னுடைய சொந்த விஷயத்தின் எண்ணங்களாகி விடுகிறது. அது நம்முடைய சமகாலக்கவிஞன் கீழ்க்கண்டவாறு உரத்துக்கூவிய கவித்துவ கற்பனையும் அல்ல.

**'கடந்து செல்லும் வருடத்தின்**
**விளிம்பை நான் காணுகிறேன்.'**

பழைய வருடம் விடை பெற்றுச்செல்லும் அந்தக் கஷ்டமான தருணத்தில், நாம் யாவரும் அமைதியான வருத்தத்தை வெளிப்படுத்துவதைத்தவிர அத்தருணத்தில் வேறொன்றுமில்லை. நான் கண்டிப்பாக அதை உணர்ந்தேன். என்னைப்போலவே எல்லோரும் அதை உணர்ந்தனர்.

எனினும், என்னுடைய சில சகாக்கள், கடந்து செல்லும் வருடம், மடிந்து போனதற்கு, மெல்லிய வருத்தத்தைத்தெரிவிக்காமல், பிறக்கின்ற புது வருஷத்திற்காக உணர்ச்சியுடன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.

ஆனால், கடந்து போகும் வருடமெனும் விருந்தாளியை விரைந்து வழியனுப்பி விட்டு, புதிய வருடத்தை வரவேற்கும் ஆட்களைப்போன்றவனல்ல நான். இயல்பான சுபாவத்திலேயே, புதுப்பொருட்களையும், புதுப்புத்தகங்களையும், புதிய முகங்களையும், புதிய வருடங்களையும் ஏற்காமல் வெட்கி ஒதுங்குபவன் நான். இனி வரப்போகின்ற ஒன்றை எதிர்கொள்ளச்சங்கடப்படும் ஏதோ ஒரு மனக்கோணலின் காரணமாக இப்படி நடந்து கொள்கிறேன். புது வருடங்களைக்குறித்து நம்பிக்கை கொள்வதைக்கிட்டத்தட்ட கை விட்டு விட்டேன். கடந்து போன வருடங்களைப்பார்வையிடுவதில் உற்சாகம் கொள்ளுகிறேன். கடந்த காலத்தின் ஏமாற்றங்களைக் குழப்பத்துடன் எதிர்கொள்கிறேன். பழைய தோல்வியூட்டும் தளர்வுகளுக்கு எதிராகத்தற்காப்புக்கவசம் அணிந்துள்ளேன். பழைய விரோதிகளை மன்னிக்கவோ அல்லது என் நினைவுகளில் அவர்களை வெல்லவோ செய்கிறேன்.

ஒரு காலத்தில், நான் மெத்த வேதனையுடன் அனுபவித்த சில விஷயங்களை இப்போதும் மறுபடி அனுபவித்துப்பார்ப்பது, சில சூதாடுபவர்கள் சொல்வதைப்போல, விளையாடுவதில் கொண்ட மோகத்திற்காக எந்த வித பந்தயப்பொருளும் இல்லாமல் விளையாடுவது போன்றதாகும். என் வாழ்வின் அந்த துரதிருஷ்டமான சம்பவங்களையும், நிகழ்வுகளையும் நான் ஒரு போதும் தலை கீழாய் மாற்றிச்சரி செய்ய இயலாது. நன்கு கட்டுக்கோப்பாய்த்திட்டமிட்ட ஏதோ ஒரு புனைகதையின் சம்பவங்களை மாற்ற முடியாததைப்போல, என்னாலும் அவற்றை மாற்ற முடியாது. அழகிய கண்களும், அழகிய கூந்தலும் கொண்ட ஆலிஸ் வி…ன்[1] என்ற பெண் மீது கொண்ட ஈர்ப்பினால், அவளைக்குறித்து ஏங்கியபடியே நான் என்னுடைய பொன் மயமான ஏழு வருடங்களைக்கழித்திருக்க வேண்டும். வெகு உணர்ச்சிமயமான ஒரு காதல் சாகசத்தில் ஈடுபடாமலே அதை இழந்திருப்பதை விட அது மேலானது.

அந்தக்கிழட்டு டாரெல்[2] என்பவன் எங்களை ஏமாற்றிய எங்கள் குடும்பச்சொத்தின் உயிலையே நாங்கள் தொலைத்திருக்க வேண்டும் என்பது இந்நேரம் வங்கியில் என் கணக்கில் இரண்டாயிரம் பவுண்டுகள் இருப்பதை விடவும், அந்தத்தவறாக வழி நடத்தக்கூடிய அயோக்கியன் இல்லாமலே இருப்பதை விடவும் மேலானது.

மனித சுபாவத்திற்குச்சற்றே கீழாக, பழைய நாட்களை மீள எண்ணிப்பார்ப்பது எனது பலவீனமாகும். நான் கடந்து சென்று நாற்பது வருட காலத்தை ஒரேயடியாக தாவிக்கடந்து விட்டு, சுயக்காதல் என்று குற்றம் சாட்டப்படாமல், ஒரு மனிதன் தன்னைத்தானே நேசிக்க வேண்டும் என்று நான் சொல்லும் போது, நான் ஒரு கூரிய முரண்பாட்டை உங்கள் முன் வைக்கிறேனா?

வேறு எந்த ஒருவரும் சுய ஆத்தும சோதனை செய்யாத போது, நான் மட்டும் வலியுடன் அவ்வாறு செய்து, எவ்வாறேனும் என்னைத்தெரிந்து கொள்ள முயல்வதுடன், என் சொந்த அடையாளத்தைக்குறித்த மதிப்பை விட எலியா என்பவரைக்குறித்து நான் கொண்ட மதிப்பே அதிகம். அவன் எளியவன் என்றும், பேதமை உடையவன் என்றும், நகைச்சுவை உணர்வு கொண்டவன் என்றும்,

அவப்பெயரும் உடையவன் என்றும்… விஷயத்தில் துர்ப்பழக்கம் உடையவன் என்றும், ஆலோசனை எதையும் வெறுப்பவன் என்றும், ஆலோசனை எதையும் கேளாமலும், பிறருக்கு ஆலோசனை எதுவும் தராமலும் இருப்பவன் என்றும் நான் அறிவேன்… மேலும், திக்கிப்பேசும் ஒரு விதூஷகன். உங்களால் எவ்வளவு முடியுமோ, அந்த அளவுக்கு சவுக்கடி கொடுங்கள். அவனை விட்டு விடாதீர்கள். அவை எல்லாவற்றையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். அத்துடன், மேலும் என்னென்ன குற்றச்சாட்டுக்களையெல்லாம் சுமத்த விரும்புகிறீர்களோ, அவை எல்லாவற்றையும் சுமத்துங்கள். மற்றொரு சிறு பிள்ளையாகிய அந்த, அதோ அங்கு என் பின்னணியில் இருக்கும் எலியா என்ற அந்த 'என்னுடைய இன்னொரு ஆளுக்காக' அந்த இளம் சிறுவனைப்பற்றி வாஞ்சையாக நினைவு கூருவதற்குத்தங்களிடம் அனுமதி கோருகிறேன்.

அவன் ஏதோ வேறு வீட்டின் குழந்தை போலவும், என் பெற்றோருக்குப்பிறக்காதவன் போலவும், அவன் மிகச்சிறிய மரியாதை மட்டும் கொண்ட இந்தப் புத்தியில்லாத நாற்பத்தி ஐந்து வயது ஆளுக்குப்பதிலாக அந்த எலியா என்பவன் மாற்றி எடுத்துக் கொள்ளப்பட்டான். அந்தக் குழந்தைக்கு ஐந்து வயது இருக்கும் போது பெரியம்மை நோய் வந்து முரட்டுத்தனமான வைத்தியம் பார்க்கப்பட்ட பொழுது நான் கதறியிருக்கிறேன். கிறித்தவப்பள்ளியில் இருந்த போது, அந்த ஏழைக்குழந்தையின் தலை ஜ்வரத்தில் கொதித்த போது, அதை எடுத்துத்தலையணையில் சாய்த்திருக்கிறேன். யாரோ அடையாளம் தெரியாத உள்ளம் கொண்ட தாய் அதை அன்புடன் கவனித்து, அக்குழந்தை உறங்குவதை உற்று நோக்கியதையும், அந்தக்குழந்தை ஆச்சரியப்பட்டு கண் விழித்து எழுந்த போது, நானும் அந்தக் குழந்தையுடனே கண் விழித்து எழுந்துள்ளேன். பொய்மை என எதைக்கண்டாலும் அவன் எப்படி அதை விட்டுத்தூர விலகுவான் என நான் அறிவேன். கடவுள் உனக்கு உதவட்டும் எலியா! நீ எப்படி மாறி விட்டாய்! நீ எவ்வளவு தூரத்திற்கு உலக அறிவு அடைந்து விட்டாய்! உடல் பலவீனமுள்ளவனாய் இருந்தும், உன்னிடம் எவ்வளவு நேர்மை! உனக்கு எவ்வளவு தைரியம்! எவ்வளவு பக்தி ஆசாரம்! எவ்வளவு கற்பனை! எவ்வளவு தன்னம்பிக்கை! நான் இப்போது இருக்கும் நிலையில் இருந்து கீழே விழாமல், நான் நினைவு கூருகின்ற அந்தக்

குழந்தை நான் தான் என்றும் அறிவேன். அதுவன்றி, பழக்கப்படாத பாதங்களுக்கு நடை ஒழுங்கைத்தந்து, என் நடத்தையை நேர் ஒழுங்கு செய்தது ஏதோ பொய்யான அடையாளம் கொண்ட பாசாங்கு செய்யும் ஒரு பாதுகாவலர் அல்ல.

நான் ஏதோ விநோதமான தன்மை போல அறிகுறி கொண்ட ஒரு நோயுற்ற தன்மையினாலே, நான் கழிவிரக்கம் துளியுமின்றி, இன்பம் அனுபவித்து அந்த நிகழ்வைப்பின்னோக்கித் திரும்பிப் பார்க்கவும் செய்கிறேன். அல்லது, எனக்கு மனைவியும், குடும்பமும் இல்லாத ஒரு சின்ன காரணத்திற்காகவே, நான் என்னைப்பெரிதும் வெளிக்காட்டிக்கொள்ளவில்லையோ? நான் பொழுதுபோக்குவதற்கு எனக்கென்று ஒரு குழந்தை இல்லாததால், நான் என் கனவுகளில் சூழ்ந்து, எனக்கென்று அபிமானமான ஒரு வாரிசு இருப்பதாகக்கற்பிதம் செய்து கொள்கிறேனோ? ஒரு வேளை வேலைச்சுறுசுறுப்பில் இருக்கும் வாசகரே, இவை யாவும் கற்பிதங்கள் என்றும், யூகங்கள் என்றும் உங்களுக்குத் தோன்றக்கூடுமானால், தங்கள் கழிவிரக்கத்தைப் பெறுவதை விட்டு விடுகிறேன். நான் அகந்தையுள்ள, விநோதமான ஆள். எனில், தங்கள் பரிகசிப்பு என்னைத் தீண்டாதவாறு எலியா எனும் மேகக்கூட்டத்திற்குள் நுழைந்து கொள்கிறேன்.

எந்தப்பழைய பழக்கவழக்கங்களையும் விட்டு விடாமல் அனுசரிக்கிற குணம் கொண்ட மூத்தவர்களுடன் நான் வளர்த்தெடுக்கப்பட்டேன். பழைய ஆண்டின் முடிவை மணியடித்து முடித்து வைப்பது, சில விசேஷமான சடங்குகளுடன் நடத்தப்பட்டது. அந்நாளில், நள்ளிரவில் ஒலிக்கும் மணியோசை என்னைச்சுற்றிலும் மகிழ்ச்சியை உண்டாக்கியது. எனினும், என் கற்பனைகளில், அது விசாரமுள்ள, தொடர்ச்சியான தோற்றக்காட்சிகளையும் கொண்டு வரத்தவறவில்லை. எனினும், அதற்கு என்ன அர்த்தம் என நான் கிஞ்சிற்றும் புரிந்து கொள்ளவில்லை. அல்லது எனக்குத் தொடர்புடையது என்று எண்ணினேன். சிறுபிள்ளைப்பிராயம் மட்டுமல்ல, முப்பது வயது வரை எந்த இளைஞனும் தான் மரித்துப்போகிற மனுஷன் தான் என்பதை உணருவதேயில்லை. அவனுக்கு அது பற்றித்தெரியும். அத்துடன் ஒரு வேளை தேவைப்பட்டால், அவன் வாழ்வின் எளிதாக நொறுங்கிப்போகும் தன்மை குறித்து அவன் அறிவுரை தந்து பிரசங்கிப்பான். ஆனால், அதை அவனே தனக்காகக்கருத்தில் கொள்ள

மாட்டான். மிகுந்த வெப்பமான மாதத்தை நமது கற்பனைக்குக் கொண்டு வருவது போலத்தான் அதுவும். ஆனால், தற்பொழுது ஒரு உண்மையைச் சொல்லட்டுமா? இந்தப் பழைய சம்பவங்களை நான் மிகவும் பலமாய் நினைவு கூருகிறேன். என் ஆயுட்காலத்தின் நீட்சி குறித்த சாத்தியங்களை நான் எண்ணிப்பார்க்கத் துவங்கி விட்டேன். இழக்கும் கணங்களும், குறுகிய பொழுதுகளுமாகக்கழிந்து செல்லும் காலத்தைப்பார்க்கும் போது கருமியின் கையில் உள்ள நாணயங்களைப்போல அரை மனத்துடன் நான் இருக்கிறேன். காலங்கள் எண்ணிக்கையில் குறுகிக்கொண்டும், அதே நேரம் அவை விரைந்து செல்லுவனவாகவும் இருக்கும் அளவு, நான் காலத்தை அதிகமாக எண்ணி அவதானித்து, எனக்குள்ள நிர்ப்பந்தத்தினால், காலமெனும் சக்கரம் சுழலுவதை தடுத்து நிறுத்த, அதன் ஆரங்களின் மேல் என் விரல்களைப்படர விடுகிறேன். என் நாட்களை 'நெய்கிறவனின் தறி நாடாவைப் போல'[3] வேகமாய் விரைந்து செல்ல விட எனக்கு மனமில்லை. இந்த உருவகங்கள் என்னை ஆறுதல்படுத்தவில்லை. அத்துடன், மரணமெனும் கசப்பு மருந்துக்கு அது இனிப்புச்சுவையூட்டவில்லை. மனித வாழ்வைச்சுமந்தபடி சென்று எல்லையின்மையோடு சேர்த்து விடும் அலையோடு நான் இழுத்துச்செல்லப்படுவது பற்றி நான் கவலைப்படவில்லை. விதியின் தவிர்க்க இயலாத போக்கு குறித்து நான் பிரியமின்மை கொள்ளப்போவதில்லை. இந்தப் பசுமையான பூமி மீதும், நகரம், கிராமப்புறம் ஆகியவற்றின் மீதும் நான் நேசம் கொண்டுள்ளேன். விவரித்துச்சொல்லவியலா கிராமப்புறத்தின் தனிமையையும், அதன் பாதுகாப்பான இனிய தெருக்களையும் நேசிக்கிறேன்.

நான் எனது கூடாரத்தை இங்கே ஸ்தாபிப்பேன். இப்போது நானும் என் நண்பர்களும் இருக்கிற இதே வயதிலேயே அப்படியே இருந்து விட்டால், எனக்கு அதில் திருப்தி உண்டு. இதற்கு மேலும் இளமையாக மாற வேண்டாம். இதற்கு மேலும் பணக்காரராக வேண்டாம். இதற்கு மேலும் வசீகரமாக ஆக வேண்டாம். வயதினால் தளர்ந்து தேய்ந்து போவதை நான் விரும்பவில்லை. அல்லது ஏதோ சொல்வதைப்போல, கனிந்த பழம் ஒன்று நழுவி, கல்லறைக்குள் வீழ்வது போல விழவும் விரும்பவில்லை. என்னுடைய இந்த பூமியிலும், எனது ஆகாரத்திலும், எனது வசிப்பிடத்திலும் செய்யும் மாறுதல், குழப்பம் ஏற்படுத்தி என்னைச்

சலனமுற வைத்து வருத்தமுற வைக்கிறது. என் சொந்த வீட்டில் உறுதியான காலடி வைக்கும் கடவுளர்கள் ரத்தம் சிந்தாமல் அங்கிருந்து வேரோடு அகற்றப்பட இயலாது. அவர்கள் சுய விருப்பத்தோடே லவினியாவின் கடற்கரைக்கு[4] இடம் பெயர்ந்து செல்வதில்லை. ஒரு புதிய வாழ்க்கை நிலை என்னைத் தடுமாற வைக்கிறது. சூரியன், வானம், மெல்லிய காற்று, தனிமையான நடை பயணங்கள், கோடை விடுமுறைகள், பசிய வயல்கள், மாமிசத்தின் சுவையான சாறு, மீன் வகைகள், நட்புச்சுற்றம், மகிழ்வூட்டும் மதுக்கோப்பை, மெழுகுவர்த்தி வெளிச்சம், நெருப்புக்கூட்டுக்குப் பக்கத்தில் நடைபெறும் உரையாடல்கள், குற்றமற்ற ஆடம்பரங்கள், கேலி செய்தல், வஞ்சப்புகழ்ச்சி. இவை யாவும் நம் வாழ்க்கையோடு முடிந்து விடுகிறதா?

நீங்கள் ஏதாவது நகைச்சுவையாகப்பேசும் பொழுது, ஒரு பிசாசினால் புன்னகைக்க முடியுமா ? அல்லது வாய் விட்டுப்பலமாகச் சிரிக்க முடியுமா?

என் இனிய நள்ளிரவுக்காதலிகளே! என் புத்தகங்களே! உங்களைப் பரந்த கைகளால் மார்போடு சேர்த்துக்கட்டியணைப்பதில் நான் ஆழ்ந்த இன்பம் கொள்வதை இழக்கத்தான் வேண்டுமா? பரவலாக யாவரும் அறிந்த இந்த வாசித்தலின் வழியாக அறிவு எனக்கு வந்து சேராமல், வேறு ஏதாவது விகாரமான, பரீட்சார்த்தமான உள்ளுணர்வினால் அது என்னை வந்தடையாதா?

நான் அங்கே (வேறு உலகில்) நட்பை அனுபவிக்க இயலுமா? நான் தெரிந்த முகம் என்பதால், என்னை நோக்கிப்புன்னகையுடன் கைகளைச்சுட்டிக்காட்டி, இனிய உறுதியான ஒரு பார்வையால் பார்க்க முடியுமா?

கார் காலத்தில் மரணமடைய விருப்பமில்லாதது என்னை நினைவில் ஆட்கொள்கிறது. நல்ல பாந்தமான ஆகஸ்டு நண்பகலில், தாங்க முடியாத உஷ்ணமான ஆகாசத்தின் கீழே மரணிப்பது என்பது கிட்டத்தட்ட சிக்கலான ஒன்று. அந்நேரங்களில் என்னைப்போன்ற பாம்புகள் நித்தியத்துவத்தை அனுபவித்து அடையலாம். பிறகு, நாங்கள் விரிந்து மொட்டென மலருவோம். மீண்டும் பழைய திறனும்,

வலிமையும் பெற்று, மீண்டும் அறிவு பெறுவோம். அத்துடன், நெடிதாக உயர வளருவோம். இந்த மறுரூபம் என்னைத்துண்டித்து, சுருங்க வைத்து, மீண்டும் என்னை மரண எண்ணங்களில் ஆழ்த்துகிறது. திரட்சியாக இல்லாத எவையும், அந்த உயரிய அனுபவத்துக்காக, அந்தக்குளிர்ந்த மரத்துப்போதலுக்காகக் காத்திருக்கின்றன. கனவுகளும், குழப்பங்களுமான நிலையும், நிலவொளியும், அதன் நிழல்களாய்த்தோன்றும் பூதம் போன்ற உருவங்களும், சூரியனின் குளிர்ந்த ஆன்மாவானதும், ∴போபஸ் தேவனின் நோயுற்ற சகோதரியானவளும், திருச்சபை தோத்திரப்பாடல்களில் குற்றம் சாட்டப்படுபவளும், ஸ்தனங்களில்லாதவளுமாகிய[5] நிலாவும் தோன்றும். நான் அவளை ரசிக்கும் அபிமானிகளில் ஒருவனல்ல. நான் பாரசீகர்களைப்போலவே சூரியனை வழிபடுபவன்.

எது எனக்கு இடையூறு செய்து, என்னை வழியிலிருந்து அப்புறப்படுத்தினாலும், அது எனக்கு மரணம் குறித்த எண்ணத்தை என் மனதிற்குக்கொண்டு வருகிறது. ஒரு பகுதி தீமையுள்ள எதுவும் உடலின் நோய் பிடித்த சீழைப்போல, பெரு நோயைக்கொண்டு வருகிறது. வாழ்வைக்குறித்து அசிரத்தையாய்ச்சிலர் பேசுவதைக்கேட்டிருக்கிறேன். அவர்கள் தங்கள் ஜீவிய கால முடிவின் மரணத்தை ஒரு பாதுகாப்பான அடைக்கலம் தரும் இடமாகப் போற்றுகின்றனர். கல்லறையை மெல்லிய கரங்கள் கொண்ட ஒன்றெனவும், அதில் அவர்கள் தலையணையில் சாய்ந்து உறங்கலாம் என்றும் கூறுகின்றனர். சிலர் மரணத்தை இழுத்து வரவழைத்துக்கொள்கின்றனர்.

வெட்கம், வெட்கம்! நான் சொல்கிறேன், (மரணமே) நீ மோசமான குரூரமான வேதாளம்! உன்னை அறவே வெறுக்கிறேன். துறவி ஜான் சபித்ததைப்போலவே நானும் உன்னைச்சபிக்கிறேன்.

நீ எந்த விதத்திலும் மன்னிக்கப்படாதபடிக்கும், உன் இருப்பை சகித்துக்கொள்ள முடியாதபடிக்கும், உன்னை ஒரு விலக்க வேண்டிய விரியன் பாம்பென்று கருதி, உன்னை ஒரு லட்சத்து இருபதினாயிரம் பிசாசுகளுக்கு ஒப்புக் கொடுத்தார்.

உன்னை முத்திரையிட்டு, பகிஷ்கரித்து, உன் தீமையைக்குறித்துப் பேசுகிறேன். உன்னை எந்த விதத்திலும் என்னால் ஜீரணித்துக்கொள்ள

முடியாது. நீ மெல்லிய, துயருற்ற, அழிவின் கோட்பாடு. அல்லது அச்சமூட்டும் குழப்பமான நேர் மறை சக்தி!

(மரணமே!) உன்னைக்குறித்த பயத்திற்கு எதிராகத்தரப்பட்ட அந்த மாற்று மருந்துகள், என்னைப் போலவே ஒட்டு மொத்தமாய்ச்சில்லிட்டுப் போனதும், அவமதிப்பதுமாய் இருக்கிறது. மனிதன் தான் வாழ்ந்த காலத்தில், படுக்கையில் தன்னோடு சேர்ந்து உறங்குபவர்களாக எண்ணியும்பார்க்காத அரசர்கள், சக்கரவர்த்திகளுடன், தன் மரணத்திற்குப்பின்பு 'சேர்ந்து உறங்குவதில்'[6], என்ன திருப்தி அடைகிறான்? அல்லது உண்மையில் நல்ல அழகுள்ள முகம்' அங்கு தோன்ற வேண்டும் என்ற உண்மையினாலா? என்னைச் சாந்தப்படுத்தவா? செல்வி ஆலிஸ் வி…ன். அவர்கள் குட்டிப்பிசாசாக ஆவாரோ? எல்லாவற்றிற்கும் மேலாக, உனது சாமானியர்களின் கல்லறைத்தூண்களில் எழுதப்பட்டுள்ள, பொருந்தாத, முறையற்ற, பரிச்சயமான கல்லறை வாசகங்களைக்கண்டு என்னுள்ளே அருவருப்பு கொள்கிறேன். ஒவ்வொரு மரித்துப்போன மனிதனும் மிகுந்த பிரயாசத்துடன் எனக்கு 'நான் இப்போது இருப்பது போலவே நீயும் வெகு விரைவில் ஆவாய் ', என்று மோசமான, மெய் வாக்கியக்கூற்றுக்களை எனக்குப்பிரசங்கிக்கிறான். நீ நினைப்பது போல வெகு விரைவில் அல்ல, என் நண்பனே! ஆனால், அதே நேரத்தில், நான் இப்போது உயிரோடு இருக்கிறேன். நான் அங்குமிங்கும் நடமாடுகிறேன். உன்னைப் போன்றோர் இருபது பேருக்கு நான் சமமானவன். உன்னை விட மேலானவர்களான உயிரோடு இருப்பவர்களைப்பார்த்துத் தெரிந்து கொள். உனது புத்தாண்டு தினங்கள் எல்லாம் கழிந்து விட்டன.

நான் 1821-ம் புது வருடத்தின் மகிழ்ச்சியுள்ள ஆளாக இருக்கிறேன். இன்னொரு கோப்பை திராட்சை மது அருந்துகிறேன். மேலும் சந்தர்ப்பவாதியான அந்த மணி, இப்போது கடந்து போன 1820-ம் வருடத்தின் இறுதிச்சடங்குகளைத்துயருடன் ஒலிக்கும் போது, மாறுபட்ட ஸ்வரத்துடன் வரவிருக்கும் புத்தாண்டினை ஆசையுடன் ஒலித்து வரவேற்கிறது. இது போன்ற நிகழ்வுக்காக, முழு மனதுடன், உற்சாகமுள்ள திரு. காட்டன்[7] அவர்கள் எழுதிய பாடல் ஒன்றை, இந்த நேரத்தில், அந்த மணி ஒலியின் ஸ்வரத்துடன் சேர்ந்து பாடுவோம்.

## புத்தாண்டு

'கேளாய், சேவல் கூவிற்றே,
அதோ விடிவெள்ளி சொல்கிறதே நமக்கு,
நாள் பொழுது தூரமில்லையென்று.
அங்கே பாரீர், இரவிலிருந்து விடுபட்டு
மேற்கு மலைகளில் ஒளியால் முலாம் பூசுவதை.
அதனுடன் கிழ ஜானுஸ்[8] தேவனும்
கடந்த வருடத்தை எட்டிப்பார்த்தபடி
தோன்றுகிறான்.

'அவ்வளவு தூரம் அதிர்ஷ்டமில்லை' என
சொல்வது போல் பார்க்கிறது அவன் பார்வை.
இவ்வாறாய் மோசமான காட்சிகள்
காண எழுகிறோம் நாம்.
துரதிருஷ்டத்தை முன்னறிவிப்பு செய்யும் நாசத்தையும்
மிக மோசமாக ஏற்படும் தீங்கையும் விட,
அதிகமாய்த்துன்பமூட்டும் பகையும்,
துன்பமூட்டும் நாசமும் கொணரும்.
ஆனால், பொறு, பொறு!
தெளிவான ஒளியில், என் பார்வையில்
எல்லாம் தெரிகிறது.

அங்கே ஜானுஸின் நெற்றியில்,
அங்கே இதுவரை கோபம் தெரிந்த நெற்றியில்
அமைதி நிலவக்காண்கிறேன்.
கடந்த காலம் நோக்கும் அம்முகம்,
விருப்பமின்மை காட்டும்.
கடந்த காலத்தீமைகளைக்கோபமாய்
உற்று நோக்கும்.
ஆனால், இப்பக்கம் பார்க்கும் முகம் தெளிவாய்,
பிறந்த புத்தாண்டை நோக்கிப்புன்னகைக்கிறது.
உயரமான இடத்தில் நின்று பார்க்கிறான் அவன்.
புத்தாண்டு கண் முன்னே விரிகிறது.
வரும் அதன் சகல தருணங்களும்

சூரிய ஒளியில் தெளிவாய்த்தெரிகிறது.
எனினும், பிறக்கும் புத்தாண்டை நோக்கி
மேலும், மேலும் புன்னகைக்கிறான் அவன்.
பிறந்ததுமே, புத்தாண்டின் விளைவுகளைக்கூறி,
முதல் காலையில் நம்மிடம் புன்னகைக்கும்
 புத்தாண்டின் தாக்கத்தை,
ஏன் அச்சம் கொண்டு அல்லது சந்தேகமாய்ப்
 பார்க்க வேண்டும்?

கடந்த வருடம் நாசமாய்ப்போக!
அதில் நிறைய தீங்கு இருந்தது,
இவ்வருடம் கண்டிப்பாய் நன்கு அமையும்.
அல்லது அவ்வாறின்றிப்போயின்,
நாம் கடந்து சென்ற வருடத்தைப்போலவே,
இதையும் கடந்து செல்லுவோம்.
நம் எண்ணத்தில், அடுத்த ஆண்டு
நனி சிறந்ததுவாய் அமையும்.
நாம் தினசரி காணும் மோசமான தீங்குகள்
 இனியும் தொடராது.
துயர் தரும் தீமை போலன்றி
நம்மைத் தாங்கும் நீடித்த
 செல்வத்தைக்கொணரும்.
சிறந்த அதிர்ஷ்டம் வரும்.
ஆண்டு மூன்றில், ஒன்றில் மட்டுமே
 நம்மைப்பெற்றவன்,
விதியை எண்ணி வருந்தி,
தான் பெற்ற நன்மையைப்போற்றாது,
நன்றி தெரிவிக்காது இருக்கிறான்.

ஆசையுடன், சிறந்த மது
கிண்ணங்களில் நிரம்பி வழிய,
நல்ல அதிர்ஷ்டம் உவகையுடன் கூட,
மோச நாசமும் இனிதாக மாற,
நாம் புது விருந்தாளியை வரவேற்போம்.
அதிர்ஷ்ட தேவதை முதுகு காட்டித்திரும்பினாலும்,

நாம் சாக்[9] ரக மதுவை நிரம்பக்குடிப்போம்.
மற்றொரு வருஷம் முகங்காட்டி வரும் வரை
நாம் இருப்புத் தீருமட்டும் குடித்துத்தீர்ப்போம் '.

இப்போது என்ன சொல்கிறீர் வாசகரே - இக்கவிதை வரிகள் அந்நாளைய ஆங்கிலேயச்சிந்தனையின் பெருந்தன்மையைக் காட்டவில்லையா? இவை காடியல்[10] எனும் பானம் போல, ஜீரணத்தை, உண்டாக்கும் போதே, நம் உள்ளத்தை விரிவு செய்து, சுத்த ரத்தத்தை உற்பத்தி செய்து, தயாள ஆன்ம குணத்தை உண்டாக்கி, நம்மைத்திடப்படுத்தவில்லையா? மரணத்தின் வேதனை முனகலாக தற்போது சொன்ன வெளிப்பாடோ அல்லது பாசாங்கான ஒன்றோ, அது எங்கே போனது ? தூய கவிதை எனும் சுத்திகரிக்கும் சூரிய ஒளியில் அவை ஈர்க்கப்பட்டு, மேகம் போலக்கடந்து சென்றது. அது நம்மை உண்மையான ஹெலிக்கானின்[11] ஒரு அலை போலக்கழுவி, சுத்திகரித்துச்சென்றது. தனக்கு நோயில்லாத போதே நோயுள்ளதென நம்புகிற ஒருவனுக்கு அது ஒரு ஆரோக்கிய நீரூற்று.

இதோ, இப்போது உற்சாகத்தைத்தூண்டும் இன்னொரு கிண்ணம் மது! எனக்கு மேலானவர்களே! உங்களுக்கு என் புத்தாண்டு வாழ்த்துக்கள்! இது போல பல்லாண்டு பல்லாண்டுக்கும்.

-----------------

## குறிப்புகள்

**1. ஆலிஸ் வி...ன். –**

ஆலிஸ் வின்டர்டன். லேம்ப், தனது ஆரம்ப நாட்களின் காதலியான ஆன் லிம்மன்ஸ் என்ற பெயரை மாற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

**2. கிழட்டு டாரெல் –**

ஒரு அயோக்கிய வழக்கறிஞர். தனது கவிதை ஒன்றில், இவன் ஒரு மோசடிக்காரன் என்றும், பொய்க்கையெழுத்து போடுபவன் என்றும் லேம்ப் இவனைப்பற்றிக்குறிப்பிடுகிறார்.

**3. 'நெய்கிறவனின் தறி நாடாவைப் போல' -**

பழைய ஏற்பாடு, யோபு 7:6 'என் நாட்கள் நெய்கிறவன் எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடுகிறது. அவைகள் நம்பிக்கையில்லாமல் முடிந்து போகும் '.

**4. லவினியாவின் கடற்கரைக்கு -**

விர்ஜில் எழுதிய 'ஈனிட் ' பெருங்காவியம். ட்ராய் நகரம் வீழ்ந்த பிறகு, அங்கிருந்த ஈனியாவை இத்தாலியில் உள்ள லவினியாவுக்குச்செல்லுமாறு கடவுளர்கள் அவனுக்கு உத்தரவிட்டனர்.

**5. ஸ்தனங்களில்லாதவளுமாகிய - -**

பழைய ஏற்பாடு, உன்னதப்பாட்டு 8:8. "நமக்கு ஒரு சிறிய சகோதரியுண்டு, அவளுக்கு ஸ்தனங்களில்லை; நம்முடைய சகோதரியைக்கேட்கும் நாளில், அவளுக்காக நாம் என்ன செய்வோம்?"

**6. அரசர்கள், சக்கரவர்த்திகளுடன் தன் மரணத்திற்குப்பின்பு சேர்ந்து உறங்குவதில்**

அநேகமாக லேம்ப், கீழ்க்கண்ட பழைய ஏற்பாட்டு வேதாகம வசனத்தை மனதில் எண்ணியிருக்கலாம்.

"… பாழ்நிலையில் தங்களுக்கு மாளிகையைக்கட்டின பூமியின் ராஜாக்களோடும் மந்திரிமார்களோடும், அல்லது பொன்னை

உடையவர்களும், தங்கள் வீடுகளை வெள்ளியினால் நிரப்பினவர்களுமான பிரபுக்களோடுங்கூட நான் இப்பொழுது தூங்கி இளைப்பாறுவேன் ". யோபு - 3:14, 15

**7. திரு. காட்டன்**

கவிஞர் சார்லஸ் காட்டன், கி.பி. 1630 – 1687.

**8. ஜானுஸ்**

இரு முகங்கள் கொண்ட ரோமானியக்கடவுள். அதில், ஒரு முகம் கடந்த காலத்தையும், மற்றொரு முகம் எதிர்காலத்தையும் ஒரே நேரத்தில் பார்ப்பதாகச்சொல்லப்படுகிறது.

**9. சாக்**

ஸ்பானிய மது வகை

**10. காடியல்**

சாராயம் கலக்கப்படாத பழங்களின் சாறு கொண்ட ஒரு இனிப்பான, ஆரோக்கிய பானம்.

**11. ஹெலிக்கானின்**

மெய்யான கவிதை – கவிதையின் தேவதைகளுக்குப்புனித இடமாகிய போஷியாவில் உள்ள ஒரு மலை.

------------



# 10. கனவுக்குழந்தைகள் - ஒரு பகற்கனவு (*Dream children* - A reverie)



தங்களுக்கு வயதில் மூத்தவர்கள் குழந்தைகளாய் இருந்த கதைகளைக்கேட்பதற்குக்குழந்தைகள் விரும்புகின்றன. இது தாங்கள் பாத்திராத பாரம்பரியமான அப்பாவின் சித்தப்பாவைப்பற்றியோ அல்லது வீட்டின் மிக மூத்த பெண்மணி குறித்தோ தங்கள் கற்பிதங்களை இன்னும் விரிவுபடுத்திக்கொள்ள உதவும்.

இந்த எண்ணத்தோடு தான் அன்றைய தினம், என் வீட்டில் இருந்த சிறு குழந்தைகள் என்னைச்சுற்றி அமர்ந்து கொண்டு, நார்.ஃ.போல்க் நகரில் வாழ்ந்த பெரிய பாட்டி .ஃ.பீல்டு அவர்களைப்பற்றிக்கதை கேட்க விருப்பப்பட்டனர். அந்த நார்.ஃ.போல்க் நகர வீடோ, அவர்களும் அவர்களது அப்பாவும் வாழ்ந்த வீட்டை விட நூறு மடங்கு பெரிதாய் இருந்தது.

இரு துயரச்சம்பவங்கள் நடந்த அந்த வீடு 'வனத்தில் குழந்தைகள்' என்ற கதைப்பாடலின் மூலமாக பிரபலமடைந்தது. அந்தக்குழந்தைகள்

மற்றும் அவர்களது கொடூரமான சித்தப்பாவின் கதை துவங்கி, ராபின் ரெட்ப்ரெஸ்டின் கதை முடிய நடந்தவற்றைச்சித்தரிக்கும் வண்ணம் மைய அரங்கில் உள்ள புகைபோக்கியின் மீது மரத்தில் உருவங்கள் அழகுறச்செதுக்கப்பட்டிருந்தன.

ஒரு புத்தியற்ற பணக்காரன், இதை இடித்து விட்டு, அதற்குப்பதிலாக பளிங்குக்கற்களால் ஆன புதிய அமைப்பு ஒன்றை ஸ்தாபித்து, அதன் மேல் எந்த ஒரு சித்தரிப்பும் செதுக்கப்படாத வண்ணம் கட்டி வைத்தான்.

இந்தச்சந்தர்ப்பத்தில், கடிந்து கொள்ளுதல் என்று சொல்ல முடியாத அளவுக்கு மிக மென்மையான பார்வை ஒன்றை ஆலிஸ் தன் முகத்தில் காட்டினாள். அவர் மத ஆசாரமானவர் என்பதையும், உண்மையில், ∴பீல்டு அந்த வீட்டின் காப்பாளரே அன்றி, எஜமானி அல்ல என்ற போதிலும், (சில விஷயங்களில் அவர் எஜமானி என்றும் கருதப்படலாம்) வீட்டின் உரிமையாளரால் அந்த வீட்டைப்பராமரிப்பது அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது என்பதையும், வீட்டின் உரிமையாளர், ஒரு நல்ல நவீனமான புதிய வீடு ஒன்றைப்பக்கத்தில் இருந்த ஜில்லாவில் கிரையத்துக்கு வாங்கி அங்கேயே வாழ விரும்பினார் என்பதையும் நான் விவரித்துச்சொன்னேன்.

எனினும், ∴பீல்டு அம்மையார், அந்த வீட்டை அவருடையது போலவே எண்ணி, அங்கு வாழ்ந்தார் என்றும், தான் வாழ்ந்த அந்தப்பெரிய வீட்டின் கண்ணியத்தைக்கட்டிக்காத்தார் என்றும், அந்த வீடு பிற்பாடு சிதிலமடையத்தொடங்கியது என்றும், அது சற்றொப்ப முழுக்கத்தரை மட்டமாய் இடிக்கப்பட்டு, அதன் பழைய அலங்காரங்கள் யாவும் அகற்றப்பட்டு, வீட்டு உரிமையாளரின் வேறொரு வீட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டது என்பதையும், அவை அங்கு ஸ்தாபிக்கப்பட்டு, அவை பார்ப்பதற்கு மிகக்குரூரமாக இருந்தது என்றும் நான் சொன்னேன். அது ஏதோ வெஸ்ட்மின்ஸ்டர் அபேயில் அவர்கள் சமீபத்தில் பார்த்த பழைய கல்லறை நினைவுத்தூண்களை அவர்களின் பொன்னாப்பூச்சு மினுமினுக்கும் வரவேற்பறைக்கு மாற்றப்பட்டு பொருத்தப்பட்டது போலத்தோன்றியது. இந்தச் சமயத்தில், ஜான் புன்னகைத்தது 'அது உண்மையில் ஒரு முட்டாள்தனமான செயல் ' என்று சொல்வது போலிருந்தது.

பிறகு, ஃபீல்டு அம்மையார் இறந்த போது, பல மைல் சுற்று வட்டாரத்தில் இருந்த ஏழை எளிய மக்கள் கூட்டம் மற்றும் சில மேன்மக்களும் எவ்வாறு அங்கு வந்திருந்து, அவரது நினைவுகளுக்காக அவருக்கு மரியாதை செலுத்தினார்கள் என்றும் நான் சொன்னேன். அவர் அவ்வளவு நல்லவராகவும், மத ஆசாரமுள்ள பெண்ணாகவும், புதிய ஏற்பாட்டுடன் முழு சங்கீதப்புத்தகத்தையும்[2] மனப்பாடம் செய்து படித்திருந்தார் (ஆமாம், அப்படித்தான்) என்பதையும் நான் சொன்னேன். இந்தச் சந்தர்ப்பத்தில் சின்னக்குட்டி ஆலிஸ் தன் கையை விரித்துக் காட்டினார். அத்துடன் அவர்களது பெரிய பாட்டியான ஃபீல்டு அம்மையார் ஒரு காலத்தில் எவ்வளவு உயரமானவராகவும், மிடுக்கானவராகவும், வசீகரமானவராகவும் இருந்தார் என்றும், இளமையில் அந்த ஜில்லாவிலேயே சிறந்த நடனமாடுபவராக மதிக்கப்பட்டார் என்றும், நான் சொன்ன போது, ஆலிஸ் தன்னையுமாறியாமல் தன் வலது காலை அசைத்தார். நான் ஆழ்ந்த பார்வை பார்த்ததும், காலாட்டுவதை நிறுத்தினார்.

பிறகு, புற்றுநோய் எனும் கொடிய நோய் வந்து அவரை வேதனையில் குறுக்கியது. ஆயினும், அவரது துடிப்பை அது குலுக்க இயலவில்லை. அல்லது வளைக்க இயலவில்லை. அவர் நல்லவராகவும், மிக மத ஆச்சாரமானவராகவும் இருந்ததால், அவரது துடிப்பான செயல்பாடு தொடர்ந்தது. அத்தனை பெரிய வீட்டில் அவர் எப்படித் தன் படுக்கையறையில் படுத்து உறங்குவார் என்றும், அவர் படுத்துறங்கும் அறையின் அருகே உள்ள மாடிப்படிகளில் நள்ளிரவில் இரு குழந்தைகளின் மாயத்தோற்றங்கள், பெரிய மாடிப்படிகளில் ஏறி இறங்குவதாக நம்பப்பட்டது என்றும், அதற்கு அவர் 'அவை ரொம்ப அப்பிராணிகள். எனக்கு எந்தத்தொல்லையும் செய்யாது என்றும் சொன்னார்.

அந்தக் காலத்தில் ஃபீல்டு அம்மையாரைப்போல, அவரளவில் பாதி அளவு கூட நல்லவனாக இல்லாமலும், பாதி அளவு கூட மத ஆச்சாரமாக இல்லாததாலும், என்னருகில் வேலைக்காரப்பெண்மணி படுத்துக்கொண்டாலும், நான் எவ்வளவு தூரத்துக்கு அச்சம் கொள்ளுவேன்!! எனினும், நான் குழந்தைகளின் மாயத்தோற்றங்கள் எதையும் பார்க்கவில்லை. இந்தத்தருணத்தில், ஜான் தன் புருவங்கள் விரிய, தான் தைரியமானவன் என்பதைப்போல் காட்டிக்கொள்ள முனைந்தான்.

பிறகு, நான் அவர் எங்கள் விடுமுறைக்காலங்களில் தனது எல்லாப் பேரப்பிள்ளைகளையும் தங்க வைத்து, அவர்களுடன் எவ்வளவு கனிவாக நடந்து கொள்வார் என்றும், நான் சொன்னேன். நான் அவ்வீட்டிலிருந்த ரோமாபுரியின் பன்னிரு சீசர்களின் மார்பளவு உருவச்சிலைகளைப்பார்த்தபடியே பல மணி நேரம் கழித்திருப்பேன் என்றும், அந்தப்பளிங்கு உருவங்கள் யாவும் மீண்டும் உயிர் பெற்று வரும் வரைக்கும் அல்லது நானே அவைகளுடன் ஒன்றாக, ஒரு பளிங்குச்சிலையாக மாறி விடும் அளவுக்கு அவைகளைப் பார்த்தபடியே இருப்பேன்! அந்த மகா பெரிய வீட்டின் பெரிய, காலி அறைகள், அவற்றில் உள்ள கிழிந்து தொங்கும் திரைகள், காற்றில் சிறகடித்துப்பறக்கும் சித்திரத்தொங்கலாடைகள், மேற்புறமுள்ள பொன்னாப்பூச்சு கிட்டத்தட்ட அழிந்து விட்ட, கைவினை வேலைப்பாட்டுடன் செதுக்கப்பட்ட சிந்தூர மரப்பலகைகள், பழைய கர்நாடகத்தனமான பரந்த தோட்டங்கள். இவையெல்லாம் எனக்கே எனக்கருதி உலாத்தும் வேளயில், அவ்வப்போது குறுக்கிடும் தனித்த ஒரு தோட்டக்காரன். இவைகளைக்கடந்து, அவ்வீடு முழுக்க அலைந்து திரிவதில் நான் சோர்வடையவே இல்லை. அதன் சுவர்களின் மீது காய்ந்து தொங்கும் பழுத்த நெக்டாரின் மற்றும் பீச் பழங்கள் புறக்கணிக்கப்பட்ட கனிகள் என்பதால் அவைகளை நான் பறித்ததேயில்லை.

ஏனெனில், அங்கு முதிர்ந்த, துயர வடிவம் தாங்கிய சிறிய இயூ மரங்களுக்கு மத்தியிலும், தேவதாரு மரங்களுக்கு மத்தியிலும் காலாற நடப்பதில் மகிழ்ச்சி கொண்டேன். அங்கு இருந்த சிவப்பு பெர்ரி பழங்களைப்பறிப்பேன். தேவதாரு மரத்தின் பழங்கள் பார்வைக்கு அருமையானவையாக இருந்தும், அவை பயனில்லாதவை. அங்கு என்னைச்சுற்றிலும் இனிய தோட்டத்தின் வாசம் வீசிக்கொண்டிருக்க, பச்சைப்புல்வெளியில் படுத்துக்கிடப்பேன். ஆரஞ்சுப்பழங்கள் விளையும் கண்ணாடிக்கூரை போடப்பட்ட கொட்டாரத்திற்குள் படுத்து, ஆரஞ்சுகளும், எலுமிச்சையும் வெம்மையடையும் வெயில் வெளிச்சத்தில் தோய்ந்தபடி, அவைகளுடன் சேர்ந்து கிடந்து, அந்த அதீத வெம்மையில் நானே ஒரு கனியாகப்பழுத்துக் கொண்டிருப்பதாக என்னைக்குறித்து கற்பனை செய்து கொள்வேன்.

இனிய வாசமுள்ள பீச், நெக்டாரின், ஆரஞ்சுப்பழங்கள் மற்றும் குழந்தைகளைப்பொதுவாக கவர்ந்து ஈர்க்கக்கூடிய இவற்றை விட, தோட்டத்தின் கீழ்ப்புறத்தில் உள்ள மீன் குளத்தில் மீன்கள் முன்னும், பின்னும் துள்ளுவதையும், அவ்வாறு துள்ளி விளையாடுகின்ற மீன்களை அவமதிக்கும் விதத்தில், அந்த நீரின் ஆழத்தில் நடுவாந்தரமாக அங்குமிங்கும், கூரிய பற்கள் கொண்ட சுறா மீன்கள் அசைவின்றிக் கிடப்பதைப்பார்த்துக்கொண்டிருக்கும் துடிப்புள்ள சோம்பலான வேறு ரக கேளிக்கைகளில் நான் இன்பம் அடைந்தேன்.

இச்சந்தர்ப்பத்தில், ஆலிஸுடன் பங்கிடுவதற்கு எண்ணியிருந்த திராட்சைக்கொத்து ஒன்றைத்தட்டிலிருந்து ஜான் எடுத்துக் கொள்வதை ஆலிஸ் பார்த்து விட, மீண்டும் அதை அந்தத்தட்டிலேயே ஜான் வைத்துவிட்டான். அவர்கள் இருவருமே தற்போது நடக்கும் நிகழ்வுடன் அது பொருந்தாத ஒன்று என எண்ணி விட்டு விட்டிருக்கலாம். எங்கள் பெரிய பாட்டி ஃபீல்டு அம்மையார், தன்னுடைய பேரப்பிள்ளைகளை எந்த அளவுக்கு நேசித்தார் என்றும், குறிப்பாக அவர்களது சித்தப்பாவான ஜான் லேம்ப் என்பவர் நல்ல அழகும், துடிப்பான இளைஞராயும் இருந்தபடியால், எங்கள் யாவருக்கும் அவர் ராஜா போல இருந்தார். எங்களில் சிலரைப்போல அவர் வீட்டின் மூலைகளில் தனியாக முடங்காமல், காலையில் தனக்குக்கிடைக்கும் திடமான, சக்தி வாய்ந்த குதிரையில் (அக்குதிரை அந்தக்குழந்தைகளை விட ஒன்றும் பெரிய குட்டிச்சாத்தான் இல்லை) ஏறி, அந்த ஜில்லாவில் பாதியைச்சுற்றி வந்து விடுவார். அவர் வெளியே தென்படும் வேட்டைக்காரர்களுடன் சேர்ந்து கொள்ளுவார்.

எனினும், அவர் பெரிய, பழைய வீட்டையும் அதன் தோட்டங்களையும் மிகவும் விரும்பினார். அந்த வீட்டின் எல்லைகளுக்குள் தனக்கிருந்த சக்தி யாவற்றையும் ஒடுக்கியிருந்தார். அந்தச் சித்தப்பா வளர்ந்து, தன் ஆண்மைத்திறத்தில் உயர்ந்து அழகுள்ளவராய் இருந்ததால், எல்லோரையும், குறிப்பாகப்பெரிய பாட்டி ஃபீல்டு அம்மையாரால் மதிக்கப்பட்டார். நான் கால் நொண்டி, நொண்டி நடப்பதால் என்னால் பல மைல்கள் தூரத்தை கால்கள் வலிக்காமல் நடக்க முடியாது என்பதால் என்னை என் சித்தப்பா தன் முதுகில் தூக்கிச்சுமந்து கொள்வார். பின்னாளில், அவரும் காலில் ஊனமுற்றார்.

சிறு பையனாக நான் கால்களால் நொண்டி நொண்டி நடந்த போது, அவர் என் மீது எவ்வளவு பரிவோடு இருந்தார் என்பதை நான் ஓரளவு கூட நினைவுபடுத்த இயலவில்லை. அவர், கால் ஊனமுற்று, வலியால் பொறுமையின்றித் தவித்த போதும், அவருக்கென்று நான் போதுமான அளவு கரிசனம் காட்டவில்லை. அவர் இறந்து போன போது, அவர் இறந்து ஒரு மணி நேரம் மட்டுமே ஆனது போலத் தோன்றாமல், அவர் நெடுங்காலத்திற்கு முன்பே இறந்து விட்டதைப் போலத் தோன்றியது. அந்த அளவிற்குத்தான் வாழ்விற்கும், மரணத்திற்கும் அவரிடம் இடைவெளி இருந்தது. அவரது இறப்பை நான் முதலில் நன்கு தாங்கிக்கொண்டேன். நான் அழுது புலம்பி, பிறர் செய்வதைப்போல, நான் அதை என் நெஞ்சத்தில் சுமந்து கொள்ளவில்லையெனினும், பிறகு அது என்னை மீண்டும் ஆட்கொள்ள ஆரம்பித்தது. ஒரு வேளை நான் இறந்து போயிருப்பின், அவர் அந்த துக்கத்தை நெஞ்சில் சுமந்திருப்பார். எனினும், அவரது இழப்பை நான் முழுக்க உணர்ந்தேன். நான் அவரை அந்த அளவுக்கு நேசித்தேன் என எனக்கு அது வரை தெரியாது. அவரது கருணையை நான் இழந்தேன். அவரது கோபத்தை நான் இழந்தேன். அவரை ஒரேயடியாக இழந்து போவதை விட, அவர் மீண்டும் உயிர் பெற விரும்பினேன். அவருடன் சண்டையிட விரும்பினேன் (நாங்கள் சில சமயம் சண்டையிட்டுக்கொள்வதுண்டு). அவரின்றி அசௌகரியமாய் இருந்தது. அந்தக்கால், மருத்துவரால் அகற்றப்பட்ட போது, பாவம், அந்தக்குழந்தைகளின் சித்தப்பாவான அவருக்கு எவ்வளவு அசௌகரியமாய் இருந்திருக்கும்! இச்சமயத்தில், குழந்தைகள் அழ ஆரம்பித்தன. அப்போது, நான் குறுக்கிட்டு, அவர்கள் கொண்டுள்ள சிறிய துக்கம், சித்தப்பா ஜான் அவர்களுக்காகவா என்று கேட்டேன். அதற்கு அவர்கள், என்னைப்பார்த்து, அந்தச்சித்தப்பா ஜான் அவர்களைப்பற்றி அதற்கு மேலும் கதை சொல்ல வேண்டாம் என்று வேண்டிக்கொண்டு, இறந்து போன அவர்களது அழகிய அம்மாவைப்பற்றி ஏதாவது கதைகள் சொல்லுமாறு கேட்டுக்கொண்டனர். பிறகு, ஏழு நெடிய ஆண்டுகளுக்கு அழகிய ஆலிஸ் வின்டர்டன்[3] என்பவரது காதலைப்பெற சில சமயங்களில் விரக்தியுடனும், ஆனால் தொடர்ச்சியாகவும் முயன்றேன், என்பதைக் குழந்தைகளுக்கு எவ்வளவு புரியுமோ அந்த அளவுக்கு விளக்கினேன். அவர்களுக்குப்பெண்களின் வெட்கம், தனித்திருத்தல் மற்றும் நிராகரித்தல் ஆகிய சுபாவங்கள் எத்தகையது என்றும் விளக்கினேன். இவ்வாறு விளக்கும் போது, ஆலிஸ் என்ற (வின்டர்டன்) அவர்கள்

அத்துணை மெய்ம்மையாக மீண்டும் வந்தது போல உணர்ந்தேன். அப்போது, என் கண் முன்னே இருப்பது யாரென்றும், அந்தப் பிரகாசமான கூந்தல் யாருடையதென்றும் சந்தேகம் கொண்டேன். அவ்வாறு நான் பிரமித்த போது குழந்தைகள் மெல்ல மெல்ல பார்வையை விட்டுப்பின்வாங்கி, சேய்மையில் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து போய், கடைசியில் இரு துக்கம் தோய்ந்த உருவங்கள் மட்டுமே தொலைவில் எந்தவிதப்பேச்சும் இல்லாமல் இந்தக்கூற்றை மட்டும் உணர்த்தினர்.

'நாங்கள் ஆலிஸின் பிள்ளைகளல்ல. உங்களுடைய பிள்ளைகளும் அல்ல. நாங்கள் பிள்ளைகளே அலல். ஆலிஸின் பிள்ளைகள் பார்ட்ரம்[4] என்பவரைத்தந்தை என அழைக்கின்றன. நாங்கள் ஏதுமில்லாத சூன்யம். சூன்யத்தை விடவும் ஒன்றுமில்லாதவர்கள். கனவுகள். எது எவ்வாறு இருந்திருக்குமோ அதுவே நாங்கள்.

நாங்கள் இருப்பும், ஒரு பெயரும் கொள்வதற்குப்பல லட்சம் ஆண்டு காலம் லீத்தி நதியின்[5] சலிப்பூட்டும் கரையில் காத்திருக்க வேண்டும். '

உடனே, நான் கண் விழிக்க, நான் பிரம்மச்சாரிகளுக்கான கை வைத்த நாற்காலியில் அமர்ந்திருந்தபடியே உறங்கி இருப்பதை அறிந்தேன். எனக்கு விசுவாசமான பிரிட்ஜட், என் பக்கத்தில் யாதொரு மாற்றமும் இன்றி இருக்கக்கண்டேன். ஆனால், ஜான் லேம்ப் (அல்லது ஜேம்ஸ் எலியா) இல்லாது போயே போய் விட்டார்.

----------------------

## குறிப்புகள்

### 1.ஃபீல்டு

சார்லஸ் லேம்ப் அவர்களின் பாட்டி, மேரி ஃபீல்டு. இவர் ஹெர்ட்ஃபோர்ட்ஷயரில்உள்ள ப்ளூமர்ஸ் வீட்டின் காப்பாளராக ஐம்பது ஆண்டுகள் இருந்தார்.

### 2.சங்கீதப்புத்தகத்தையும்

பழைய ஏற்பாட்டில் 150 அதிகாரங்கள் கொண்ட புத்தகம் சங்கீதம் (Psalms) ஆகும்.

### 3.ஆலிஸ் வின்டர்டன்

சார்லஸ் லேம்ப், தான் விரும்பிய ஆன் ஸிம்மன்ஸ் என் பெண்ணின் பெயரை மாற்றி, தனது கட்டுரையில் ஆலிஸ் வின்டர்டன் என்று குறிப்பிடுகிறார்.

### 4.பார்ட்ரம்

சார்லஸ் லேம்ப் நேசித்த ஆன் லிம்மன்ஸ் அவர்கள் இலண்டனில் இருந்த பார்ட்ரம் என்ற அடகுக்கடைக்காரரைத்திருமணம் செய்து கொண்டார்.

### 5.லீத்தி நதியின்

பண்டைய கிரேக்கக்கதையில் குறிப்பிடப்படும் நதி. இதன் தண்ணீரை ஒருவர் அருந்தினால், பூமியில் அவர் வாழ்ந்த வாழ்க்கை முழுவதும் அவருக்கு மறந்து போகும். 'லீத்தி' என்ற கிரேக்க மொழிச்சொல்லுக்கு 'மறந்து போதல் ' என்று அர்த்தம்.

# 11. திருமணமானவர்களின் நடத்தை குறித்து ஒரு பிரம்மச்சாரி சொன்ன புகார் (A bachelor's complaint on the behaviour of married people)

திருமணமானவர்கள், நான் உயரிய இன்பங்களை இழந்து விட்டதாகச்சொல்லும் போது நான் ஆறுதல் கொள்வதற்காக, தனித்த பிரம்மச்சாரியாகிய நான், திருமணமானவர்களின் ஸ்திரமற்ற நடவடிக்கைகளைக்கவனிக்க நெடுங்காலத்தைக்கழித்துள்ளேன்.

ஆண்களும், அவரது மனைவியரும் சண்டையிட்டுக்கொள்வது என் மேல் தாக்கத்தை ஏற்படுத்தியது என்று சொல்ல மாட்டேன். அல்லது நெடுங்காலத்திற்கு முன்பே, ஆழ்ந்து, சீரிய யோசனை செய்து, அந்த எண்ணம் என்னுள் உறுதி கொண்டது என்றும் சொல்ல மாட்டேன். திருமணமானவர்களின் வீடுகளுக்கு நான் செல்லும் போது, அவர்கள் அடிக்கடி சண்டையிட்டுக்கொள்வது, வேறு விதமான ஒரு தவறு. அந்தத் தம்பதியினர் மிகவும் அன்பாய் இருக்கின்றனர் என்பதே ஆகும். ஆனாலும், மிகவும் அன்பாகவும் இல்லை. நான் அவ்வாறு சொல்ல வரவில்லை. அதுவன்றியும், இது என்னை ஏன் ஊறு செய்ய வேண்டும்? உலகிடமிருந்து அந்தத் தம்பதியினரைப்பிரித்து, அவர்கள் இருவருமே அங்கிருந்து, ஒருவரிடமிருந்து மற்றொருவர் இன்பம் துய்ப்பது என்பது, உலகில் மற்ற எவரையும் விட, அவர்களில் ஒருவரை மற்றவர் நாடுகிறார்கள் எனக்காட்டுகிறது.

ஆனால், இப்படி அவர்களின் அணுக்கத்தை எவ்விதக்கூச்சமுமின்றி, வெளிப்படையாக என்னைப்போன்ற பிரம்மச்சாரிகளிடம் வெளிக்காட்டுவதைப்பற்றித்தான் நான் புகார் செய்கிறேன். நீங்கள் தாம்பத்திய ஐக்கியத்திற்குச் சம்பந்தமில்லாத ஒருவர் என்று ஒரு மறைமுகக்குறிப்பு தராமல் அல்லது பகிரங்கமாகச்சொல்லாமல் அவர்களது சகவாசத்தில் இருக்க முடியாது. சில விஷயங்களை மறைமுகமாய்க்குறித்துக்காட்டினாலோ அல்லது வெறுமனே புறக்கணித்து விட்டாலோ, அதில் ஏதும் தவறில்லை. ஆனால், அதை வெளிப்படையாகச்சொல்லும் போது, அது தவறாகிறது. ஒருவன், ஒரு குடும்பப்பெண்ணுக்கான தோற்றத்துடன் சாதாரணமான

உடை உடுத்தியுள்ள தனக்குத்தெரிந்த ஒரு பெண்ணிடம் பேசும் பொழுது, அவள் அழகில்லாதவள் என்றும், தன் அளவிற்குப்பண வசதி இல்லாதவள் என்றும், அதனால், அவன் அவளைத்திருமணம் செய்து கொள்ள முடியாதென்றும், நேரிடையாகப்பேசினால், அவனது மோசமான நடத்தைக்காக அவன் உதைபடுவதற்குத்தகுதியானவன். எனினும், இத்தகைய கேள்வி கேட்கக்கூடிய சந்தர்ப்பம் வாய்த்தது என்ற போதிலும், அவனுக்கு அத்தகைய கேள்வியைக் கேட்கத்தோன்றவில்லை. இது வார்த்தைகளால் சொல்லப்படவில்லை என்றாலும், அந்த இளம்பெண் அதைத்தெளிவாக புரிந்து கொள்ளுகிறாள். ஆனால், எந்த ஒரு அறிவுள்ள இளம்பெண்ணும், சண்டையிடுவதற்கு, இந்த விஷயத்தைக்காரணமாக எண்ண மாட்டாள். நான் ஒரு சந்தோஷமான மனிதன் அல்ல என்றும், ஒரு பெண்ணின் விருப்பத்திற்கு ஏற்றவன் அல்ல என்றும், வார்த்தைகளினாலும் (அல்லது அது போலவே வெளிப்படையான பார்வைகளினாலும்) என்னிடம் சொல்லி விட ஒரு தம்பதியினருக்கு எந்த வித உரிமையும் இல்லை. நான் ஒரு சந்தோஷமான மனிதன் இல்லையென்பதை நான் அறிந்து கொண்டால் அது மட்டுமே போதுமானது. இதை எனக்குத்தொடர்ந்து நினைவூட்ட வேண்டாம். மிக அதிகமான அறிவு அல்லது செல்வம் இருப்பதாக காட்டிக்கொள்வது ஓரளவுக்கு பிறரை இழிவு செய்வது போல இருக்கும். எனினும், இவை வலி நீக்கும் மருந்து எனக்கருதப்படுகிறது. இத்தகைய தகவல்கள் என்னை அவமதிக்கின்றன. சில சமயம், அவை என்னை மேம்படுத்துகின்றன. ஒரு பணக்காரரின் வீட்டில் உள்ள ஓவியங்கள், பூங்காக்கள், தோட்டங்கள் போன்றவற்றைப்பார்க்கும் போது, அவைகளுக்கு நானே குறைந்த பட்சம் தற்காலிக உரிமையாளன் என உணர்கிறேன். ஆனால், தான் திருமணமானவன் என்று காட்டிக்கொள்வதில் இத்தகைய நிவாரணம் எதுவும் இல்லை. அது முழுக்க முழுக்க, சரி செய்ய முடியாத முழு அவமதிப்பாகும்.

திருமணம் என்பது, அது உறுதியாக வலியுறுத்தப்படும் நிலையிலேயே ஒரு சிலரின் ஏக போகம். அது வெறுப்பூட்டக்கூடிய ஒன்று அல்ல. திருமணம் செய்து கொண்டுள்ள பலர், பிற திருமணமாகாத தங்கள் அண்டை அயலார் அறியாவண்ணம், அதைக் கூடுமானவரை மறைத்து, பிறர் அது குறித்துக்கேள்விகள் ஏதும் கேட்காத வண்ணம் தந்திரமாகச்செயல்படுகின்றனர். ஆனால், இந்தத்

திருமணம் செய்து கொண்டுள்ள ஏகபோக உரிமையாளர்கள், தங்கள் சொந்த நிலை குறித்து வெறுப்பூட்டும் விதத்தில், பிறர் முகத்தில் அறைவது போலப்பேசிச் செயல்படுகின்றனர்.

திருமணமான புதிய தம்பதிகளின் முகங்களில், ஒளிரும் அமைதியையும், திருப்தியையும் விட எனக்கு வெறுப்பூட்டக்கூடிய வேறொன்று இல்லை. அதிலும் குறிப்பாக, அந்தப் பெண்ணின் முகத்தில். இவ்வுலகில், அவளது இடத்தை நிர்ணயித்து முடித்து விட்டார்கள். இனி மேல், நீங்கள் அவளைக்குறித்து வேறு நம்பிக்கைகள் கொள்ள இயலாது. எனக்கு அப்படி நம்பிக்கைகள் இல்லை என்பது உண்மை. எந்த விருப்பங்களும் இல்லை. நான், ஏற்கனவே சொன்னதைப்போல, ஒரு வேளை பல உண்மைகளில் இந்த ஒன்றைக்கண்டிப்பாகக்கருத்தில் கொள்ளாமல் இருக்க வேண்டுமே தவிர, அதைக்குறித்து வெளிப்படையாகப்பேசக்கூடாது. திருமணமாகாத எங்களைக்குறித்து அறியாததினால், இந்தத் திருமணமானவர்கள் கொள்ளும் கர்வம், அவர்கள் பகுத்தறிவோடு இருந்தால், இன்னும் எங்களை அதிகமாய்க்கோபமூட்டும். இல்லாத இன்பங்களை அறியாத நாங்கள், அவர்களிடமிருந்து விடுபட்டு விலகுவது என்பதை விட, அவர்களின் இல்லறத்தின் புதிர்களை அவர்களே புரிந்து கொள்ளும்படி நாங்கள் அவர்களை அனுமதிக்கிறோம். ஆனால், அவர்களது கர்வம், இந்த எல்லைகளுக்குள் நிற்பதில்லை. ஒரு ஆண், திருமணம் அல்லாத வேறொரு விஷயத்தில் அவர்கள் முன்னிலையில், தனது கருத்தைச்சொன்னால் கூட அவன் தகுதியற்றவன் எனக் கருதி உடனடியாக அவனது வாயை அடைத்து விடுகிறார்கள். இது மட்டுமல்ல. எனக்குத்தெரிந்த நல்ல விதூஷகர்களில் சிறந்தவரான பெண் ஒருவருக்குத் திருமணமாகி இரண்டு வாரங்கள் ஆன பின்பு , ஒரு விஷயத்தில், அவரிடம் கருத்து வேறுபாடு கொள்ளும் துரதிருஷ்டம் கொண்டேன். அது என்னவெனில், இலண்டன் சந்தைக்காக, உண்ணக்கூடிய சிப்பிகளை, மிகச்சரியான முறையில் இனப்பெருக்கம் செய்யும் விஷயத்தில். நான் ஒரு பிரம்மச்சாரியாக இருப்பதால், அது போன்ற விஷயத்தைத்தெரிந்து வைத்திருப்பதாக எப்படி பாவனை செய்யலாம் என உறுதிபடக்கேட்டார்.

நான் இதுவரை சொன்ன விஷயம், இந்தப்பிரகிருதிகள், குழந்தைகள் பெற்றுக் கொள்ளும் விஷயத்தில், பொதுவாகவே தம்பதியினர் கொள்ளும் கர்வம் பற்றியதல்ல. பொதுவாகவே ஏழைகள், ஏராளமான குழந்தைகளைப்பெற்றுக் கொள்கின்றனர். ஒவ்வொரு தெருவிலும், சந்து முனையிலும் அவர்கள் எண்ணிறந்து இருக்கிறார்கள். நாம் குழந்தைகள் என்பது அவ்வளவு அரிதான ஒன்றல்ல எனக்கருதும் போது, ஒரு சில திருமணத்தம்பதிகளே இத்தகைய ஆசீர்வாதத்தைப்பெறாமல் இருக்கின்றனர்.

ஆனால், பல பிள்ளைகள், தவறான வழிகளில் சென்று, தங்கள் பெற்றோரின் நம்பிக்கைகளைத்தோற்கடித்து, துஷ்ட வழிகளில் சென்று, வறுமையிலும் அவமானத்திலும் சிக்கி, இறுதியில் தூக்கு மரத்திற்குப்போய் விடுகிறார்கள். குழந்தைகளைப் பெற்றுக்கொள்வதால் அவர்களுக்கு என்ன பெருமை என்று என் உயிர் மேல் ஆணையாக எதுவும் கூற மாட்டேன். அப்பிள்ளைகள் ஆண்டுக்கொரு முறை மட்டும் பிறக்கும் வண்ணம், இளம் ஃபீனிக்ஸ் பறவைகளாக இருந்தால், அதில் பெருமை கொண்டு, பாசாங்கு செய்யலாம். ஆனால், குழந்தைகள் மிகவும் சர்வ சாதாரணமாக மிகுந்த எண்ணிக்கையில் இருக்கும் போது –

இந்தச்சந்தர்ப்பங்களில், அவர்கள் தங்கள் கணவர்களுடன் சேர்ந்து கொண்டு காட்டுகின்ற கர்வமான பார்வையை நான் குறிப்பிடவில்லை. அவர்கள் அவ்வாறே தோற்றமளிக்கட்டும். ஆனால், அவர்களது இயல்பில் பிறந்த பிரஜைகளோடு நாங்கள் இல்லாத பட்சத்தில், அவர்களுக்குக்காணிக்கைகளாகவும், மரியாதையாகவும் நாங்கள் நறுமணப்பொருட்களும், வெள்ளைப்போளமும், தூப வர்க்கமும்[1] கொண்டு வர வேண்டும் என்று எதிர்பார்ப்பது எங்ஙனம்? எனக்குத் தெரியவில்லை.

பிள்ளை பெற்றுக்கொண்ட பெண்களுக்கு நடத்தப்படும் ஸ்தோத்திர ஜெபக்கூட்டத்தில் செய்ய வேண்டிய வழிபாட்டு முறை குறித்துச்சொல்லும் ஜெபப்புத்தகம் 'வால வயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பாகிறார்கள்[2], என்று சொல்கிறது. 'அவைகளால் தன் அம்பறாத்துணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்',

என்று நான் சொல்லுகிறேன். ஆனால், அந்த அம்பறாத்துணியிலிருந்து அம்புகளை பிரயோகிக்காதீர்கள். அந்த அம்புகள் அப்படியே இருக்கட்டும். அவைகளைக்கொண்டு எங்களைக்குத்தவும், காயப்படுத்தவும் வேண்டாம். பொதுவாகவே, இந்த அம்புகள் எல்லாம் இரு முனைகளும் கூரானவை என்று நான் கருத்து தெரிவித்திருக்கிறேன். அவைகளுக்கு இரண்டு முட்கள் உண்டு. அவைகளில் ஏதாவது ஒன்றை வைத்துக்குத்தி விடலாம். உதாரணத்திற்கு, குழந்தைகள் நிரம்பியிருக்கும் ஒரு வீட்டுக்குள் நீங்கள் உள்ளே நுழையும் போது, வேறெதோ சிந்தனையில் ஆழ்ந்த வண்ணம், அங்கு உள்ள குழந்தைகளைக்கவனிக்காமல் இருந்தும், அவர்களது அப்பிராணித்தனமான பேச்சுக்குச்செவி கொடாமலும் போனால், நீங்கள் ஒரு கோபமுள்ள சிடுமூஞ்சிக்காரர் என்றும், யாரையும் சமாளிக்க இயலாதவர் என்றும், குழந்தைகளை அடியோடு வெறுப்பவர் என்றும் முடிவு செய்து விடுவார்கள். மாறாக, நீங்கள் அவர்களை சகஜமாகப்பழகுபவர்களாகக்கண்டு கொண்டு, நீங்கள் அவர்களது நல்ல நடத்தையை ஏற்றுக்கொண்டு, அவர்களுடன் சேர்ந்து கும்மாளமடித்து விளையாடினீர்கள் என்றால், ஏதாவது ஒரு சாக்கு கண்டுபிடித்து, அக்குழந்தைகளை அறையை விட்டு வெளியே அனுப்பி விடுவார்கள். 'அவர்கள் மிகவும் சத்தமிட்டு, ஆரவாரம் செய்வதால், திரு.................. அவர்கள் குழந்தைகளை விரும்புவதில்லை' என்பார்கள். இந்த இரு முட்களில் ஏதாவது ஒன்று உங்களைக் கண்டிப்பாகத் தாக்கக்கூடும்.

அவர்களின் குழந்தைகளை நான் கொஞ்சுவது அவர்களுக்கு வேதனையுண்டாக்கி, அவர்களுக்குப்பொறாமையை உண்டு பண்ணினால், அதை நான் மன்னித்து விடுவேன். ஆனால், எந்தவிதக்காரணமுமின்றி, குழந்தைகள் சகஜமாகப்பழகுகிறார்கள் என்பதற்காக, எட்டு, ஒன்பது அல்லது பத்து பேர் கொண்ட ஒரு குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களிடம் ஒரே மாதிரி பேதமின்றி அன்பு காட்டச் சொன்னால் அது நியாயமில்லாதது. எனக்கு ஒரு பழமொழி தெரியும். 'நீ என்னை நேசி. எனது நாய்க்குட்டிகளையும் நேசி'. இது எல்லாச்சமயங்களிலும் சாத்தியப்படாதது. அதிலும் குறிப்பாக ஒரு நாய், உங்களை விளையாட்டுத்தனமாகச் சீண்டி, உங்களைக் கடிக்கக் கூடும். என் நண்பன் என்னை விட்டு நெடுங்காலமாய்ப்பிரிந்து செல்லும்

முன்பு, எனக்குத் தந்த நினைவுப்பொருள் - ஒரு உயிரற்ற பொருள் - ஒரு கைக்கடிகாரமோ, ஒரு மோதிரமோ, ஒரு மரமோ அல்லது ஒரு நாயோ அல்லது அதனினும் கீழான ஒன்றையோ, நான் வைத்திருந்து அதைப் பாதுகாத்து அன்பு செய்ய முடியும். ஏனெனில், நான் அவனை நேசிக்கிறேன். அப்பொருள் அதன் தன்மையில் விருப்பு, வெறுப்பைத்தூண்டாத ஒரு பொருளாக இருந்து, என் கற்பனையில் அதை எப்படி எண்ணிக் கொள்ள முடியுமோ, அப்படி ஏற்றுக்கொள்ளப் பொருத்தமானது. ஆனால், குழந்தைகளின் உண்மையான சுபாவம் என்று ஒன்று உள்ளது. அது தன்னியல்பில் இணக்கமாகவோ, இணக்கம் இல்லாமலோ இருக்கும். அதனால், அதன் தன்மைக்கேற்ப நான் ஒரு காரணத்தைக்கண்டறிந்து அதை நேசிக்க அல்லது வெறுக்க வேண்டும். ஒரு குழந்தையின் சுபாவம் என்பது, அதன் இன்னொரு ஆளுமையின் பிற்சேர்க்கையாக கருதப்படத்தக்க அளவு சீரிய தன்மையோடு இருப்பதால், அதன் படியே, அதனிடத்தில் அன்பு செலுத்தவோ, அல்லது வெறுக்கவோ செய்ய வேண்டும். ஆண்களும் பெண்களும் செய்வது போலவே அவர்கள் தங்களது ஒட்டு மொத்த சுபாவத்திரட்டுடன் என்னுடன் சேர்ந்து நிற்கிறார்கள். ஓ, அது ஒரு கவர்ந்து இழுக்கும் வயது ! அந்த மிக இளமையான பால வயதில், நம்மை வசீகரிக்க அதில் ஏதோ உள்ளது என்று நீங்கள் சொல்வீர்கள். அது தான் நான் அவர்களிடம் இனிமையாக நடந்து கொள்வதற்குக்காரணம். ஒரு இனிய குழந்தை, அதன் மெல்லிய இயல்புகளைத்தவிர்க்காத பட்சத்தில், அது இயற்கையிலேயே இனிதான ஒரு பிறவி தான். ஆனால், இருக்கின்ற குழந்தைகளிலேயே மிகவும் அழகுள்ளதாய் இருப்பது அதை விட அருமையானது. ஒரு டெய்ஸி மலர் மற்றொன்றை விட மாறுபட்டது அல்ல[3]. எனினும், ஒரு ஊதா மலர் பார்க்க அழகுடனும், இனிய வாசத்துடனும் இருக்கும்.

நான் எப்பொழுதுமே பெண்கள் மற்றும் குழந்தைகளின் விஷயத்தில் எச்சரிக்கையாக இருந்திருக்கிறேன். ஆனால், இது மிக மோசமானதல்ல. அவர்கள், தங்கள் கவனத்தில் கொள்ளப்படவில்லை என்று சொல்லப்படுவதற்கு முன்பாக, அவர்களுக்கு ஒருவர் நன்கு பரிச்சயமாகி இருக்க வேண்டும். அது சில விஜயங்களையும், சில உரையாடல்களையும் உள்ளடக்கியது. ஆனால், ஒரு பெண்ணின் கணவர் அவரது திருமணத்திற்கு முன்பே உங்களுடன் நட்பு என்ற அடிப்படையில் சேர்ந்து வாழ்ந்திருந்தால், நீங்கள் அவரது மனைவி

மற்றும் அவரது கோஷ்டியினரோடு சேரவில்லையென்றால், அவர்களது திருமணம் நடைபெறும் முன்பாகவே அவர்கள் கொண்ட காதல் உறவிற்கும் முன்னதாகவே அக்கணவரோடு நீங்கள் கொண்ட நட்புறவு... கவனமாக இருங்கள்... அந்த நட்பு அநிச்சயமானது. திருமணமாகிப்பன்னிரண்டு மாதங்களுக்கு முன்பாகவே, உங்கள் நண்பர் உங்களிடம், கொஞ்சம் கொஞ்சமாக மோசமாக நடந்து கொள்ள ஆரம்பித்து விடுவார். அத்துடன் உங்கள் நட்பைத்துண்டித்து விடுவதற்கான வாய்ப்புகளைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். என்னுடைய நண்பர்களில், நான் நம்பிக்கை வைக்கக்கூடிய அளவுக்கு, திருமணத்திற்குப்பின்பும் தொடரும் நட்பு என்று எந்த நண்பரும் இல்லவே இல்லை.

ஒரு திருமணமாகாத மனிதன், ஒரு கணவன், மனைவி இருவரும் சந்திக்கும் முன்பே அக்கணவனை நட்பு ரீதியில் அறிந்திருக்கும் பட்சத்தில், அந்த பவித்திரமான நட்பு வட்டத்திற்குள் நுழைந்து விடலாம். ஒவ்வொரு நீண்ட நட்பும், ஒவ்வொரு பழைய நிஜமான நெருக்கத்தையும், அவர்களது மறு அங்கீகாரத்தையும் பெற வேண்டும். புதிதாக ஆட்சிக்கு வந்த இளவரசன், தான் நினைத்துப்பார்ப்பதற்கும் முன்னதான காலத்தில் இருந்த பழைய நாணயங்களை, மீளப்பெற்று, அவைகளை வெளி உலகிற்குப்புழக்கத்திற்கு அனுப்பும் முன்பாக, தனது அங்கீகாரத்துடனான மறு முத்திரை செய்து, அதன் மேல் புதிய இலச்சினையைப்பொறிப்பது போன்றது தான் இதுவும். ஒரு பழைய துருப்பிடித்த உலோகத்திற்கு, இப்படி புதிய நாணய முத்திரை அடிக்கும் போது, அந்த நாணயத்திற்கு எவ்வளவு அதிர்ஷ்டம் என்று நீங்கள் எண்ணிப்பார்க்கிறீர்கள்.

தங்கள் கணவரின் நம்பிக்கையிலிருந்து உங்களை அகற்றி, அவமதித்து, அவரிடமிருந்து உங்களை வெளியேற்ற எத்தனையோ வழிகளை அவர்கள் மேற்கொள்ளுவார்கள். நீங்கள், நல்ல விஷயங்களைச்சொன்ன விசித்திரமான ஆள் என்பதாகவும், விநோதமான நபர் என்பதாகவும், நீங்கள் ஆச்சரியப்பட்டு அடிக்கடி சிரிப்பீர்கள். அவர்கள் இதற்காகவே பிரத்தியேகமாக உள்ள ஒரு வெறிக்கின்ற பார்வையுடன் உங்களைப்பார்ப்பார்கள். இறுதியில், அந்தக் கணவன், உங்களது தன்மைகளைக்கவனித்த பின்பு, தனது இறுதிக்கருத்தை ஒத்தி வைக்கும் வழக்கத்திற்கு மாறாக, உங்களைக்

குறித்த ஆரோக்கியமற்ற கருத்தைச்சொல்லுவார். நீங்கள் ஒட்டு மொத்தத்தில் ஒரு நகைச்சுவையாளர் அல்ல என்று சந்தேகப்படத்தொடங்குவார். ஒருவன் பிரம்மச்சாரியாய் வாழும் காலங்களில் நட்பு கொள்ளலாம். ஆனால், தன் மனைவியிடம் நட்பை அறிமுகப்படுத்தக்கூடாது. இது ஒரு நட்பற்ற வகை என்று கருதப்படலாம். இதுவே எனக்கு எதிராக அடிக்கடி பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது.

அப்புறம் இன்னொரு மிகைப்படுத்தும் வழியும் இருக்கிறது. அல்லது வஞ்சப்புகழ்ச்சி செய்வது. உங்களை ஒரு விசேஷமாக மதிக்கக்கூடிய ஆளாக கணவர் இருக்கும் பட்சத்தில், உங்கள் மேல் கொண்ட பற்றுதல் எளிதில் அசைக்கப்படாமல் இருப்பவராக இருப்பார். நீங்கள் சொல்லுகின்ற எல்லாவற்றிற்கும் மறுமொழி சொல்லுபவராக இருப்பார். பிற்பாடு, அவர் மகிழும் வண்ணம் எல்லாம் செய்யப்படுகின்றன என்று அறியற வருவார். நீங்கள் கொண்ட வெளிப்படைத்தன்மைக்காக அவர் உங்களுக்கு நன்றிக்கடன் பட்டிருப்பார். பிறகு, கொஞ்சம் இளகி, தனது உற்சாகத்தைக்குறைத்துக்கொண்டு, மிதமான அளவுக்கு உங்கள் மேல் மதிப்பு கொள்ள ஆரம்பித்து, நயத்தக்க பிரியமும், அமைதியான கனிவும் காட்டத்தொடங்குவார். இதில், இரக்கத்தின் பேரில், மிக அதிக ஈடுபாடு காட்டாமல், தனது கண்ணியத்திற்குக்குலைவு நேரிடாமல் அவரது மனைவியும் சேர்ந்து கொள்வார்.

தாங்கள் பெரிதும் விரும்பும் உங்களை, நட்பு வட்டத்திலிருந்து வெளியேற்றும் எண்ணிறந்த வழிகள் உண்டு. அவைகளில் ஒன்று, அந்தக்கணவனை உங்கள் மீது பிரியம் கொள்ள வைத்த ஒரு விஷயத்தைக்குறித்து அறியாதபடிக்கு இருப்பது. உங்களிடம் உள்ள எந்த ஒழுக்கக்குணம், உங்கள் மேல் கொஞ்சம் மதிப்பு கொள்ள வைத்து, அந்தக் கணவரை ஈர்த்து, நட்பில் நிலை கொள்ள வைத்ததோ, அதை முறியடிக்க முயற்சி செய்வார் அந்த மனைவி. உங்கள் உரையாடலில் ஒரு சமச்சீர் தன்மை இல்லாமல் இருப்பதாகக்கற்பிதமான காரணத்தைக் கண்டுபிடித்து, அந்த மனைவி கணவரிடம் சொல்லுவார், 'என் அன்பே, நீங்கள், உங்கள் நண்பர் திரு. ............... ஒரு மிகப்பெரிய அறிவாளி என்று சொல்லியதாக நினைக்கிறேன் ' என்பார்.

மாறாக, உரையாடலில் இருப்பதாகக்கருதப்பட்ட எந்த வசீகர அம்சம் அக்கணவரை உங்கள் பால் ஈர்ப்பு கொள்ள வைத்ததோ, அந்தக் குணத்திற்காக, உங்கள் நடத்தையில் இருக்கிற சிறு குறைபாட்டை உதாசீனப்படுத்தத்தயாராக இருப்பார். ஆனால், உங்கள் குணத்தில் ஒரு குறைபாட்டை முதன் முதலில் கண்டதுமே, அந்த மனைவி கணவரிடம். 'என் அன்பே! இது தான் உங்கள் அருமையான திரு……… என்பார்.

ஒரு அருமையான பெண்ணிடம், அவரது கணவரின் பழைய நண்பருக்கு (எனக்கு) உரிய அளவுக்கு மரியாதை காட்டவில்லையே என நான் துணிவாகவே விவாதித்தேன். அதற்கு அவர், தனது கணவர் தன் திருமணத்திற்கு முன்பு திரு……. அவர்கள் என்னைப்பற்றி அடிக்கடி பேசியுள்ளதாகவும், அதனால் என்னுடன் பரிச்சயம் ஏற்டுத்திக்கொள்ள வேண்டும் என்று விரும்பியதாகவும், சொன்னார். ஆனால் என்னைக்குறித்து அவரது கணவர் விவாதித்த பின், நான் ஒரு உயரமான, அருமையான அதிகாரி போன்ற மிடுக்கான தோற்றத்துடன் உள்ள இளைஞன் (அவரது வார்த்தைகளையே நான் சொல்கிறேன்) என்று எண்ணிக்கொண்டிருந்ததாகவும், ஆனால், என்னைப்பார்த்த மாத்திரத்தில் அவரது எதிர்பார்ப்புகள் யாவும் ஏமாற்றம் தந்ததாகவும் சொன்னார். என்னைப்பற்றிய கற்பிதத்திற்கு நேர் எதிரான ஒன்றே உண்மையானது என்று கண்டதாகச்சொன்னார். இது வெளிப்படையான கருத்து. ஆனால், அவரது கணவரின் நண்பர்களின் தனிப்பட்ட தகுதிகள் குறித்து எவ்வாறு அவர் அளவுகோல்களை நிர்ணயித்துக்கொண்டார் என்றும், அவை யாவும் அவரது கணவரின் மதிப்பீடுகளிலிருந்து மிகவும் மாறுபடுகிறது என்றும், நான் அந்தப் பெண்ணிடம் நாகரீகம் கருதிக்கேட்கவில்லை. என் நண்பரின் (அப்பெண்ணின் கணவர்) உடலமைப்பு அளவுகள் கிட்டத்தட்ட என்னுடையதைப்போலத்தான். அவன் கால் சப்பாத்துக்களை அணிந்திருக்கும் போது, ஐந்து அடி ஐந்து அங்குல உயரம். அவனை விட நான் அரை அங்குலம் உயரம் அதிகம். அவனும் என்னைப்போலவே தோற்றத்திலோ அல்லது பாவனையிலோ வீரமான சுபாவத்துடன் தோன்றுவதில்லை.

மேற்சொன்ன இவை யாவும், சில திருமணமானவர்களின் வீடுகளுக்குச்சென்ற போது நான் சந்தித்த தர்ம சங்கடங்களாகும். அவைகளை விவரிப்பது ஒரு வீணான வேலை. திருமணமான பெண்கள் சாதாரண நெறி கூட இல்லாமல் சில விஷயங்களில் தவறு செய்தவர்களாக ஆகிறார்கள். ஏதோ நாங்கள் இவர்களது கணவர்கள் வீட்டிற்கு வந்த விருந்தாளிகள் என்பது போலவே எங்களை நடத்துகிறார்கள். அதாவது, நான் என்ன சொல்கிறேன் என்றால், அவர்கள் எங்களைத்தெரிந்தவர்களைப்போலவும், தங்கள் கணவர்களை உபசரிப்பு முறையோடும் நடத்துகின்றனர்.

உதாரணத்திற்கு ஒன்று. அன்றொரு நாள், திருமதி. டெஸ்டேஷியா[4] அவர்கள், நான் வழக்கமாக இரவு உணவு சாப்பிடும் நேரத்திற்கு இரண்டு, மூன்று மணி நேரத்திற்குப்பின்பும், என்னை அவரது வீட்டில் இருக்க வைத்து விட்டார். அவரது கணவர் திரு.......... அவர்கள் வீட்டிற்குத்திரும்பாததால், அவர் இல்லாமலேயே அவருக்காகச்சமைக்கப்பட்ட கடல் சிப்பி உணவிலிருந்து ஒன்றை எடுத்துச் சாப்பிடுவது பெரும் பிழை என்பதால், அதை விட அந்தக் கடல் சிப்பி உணவு பாழாகி விடுமே என்பதால் அவர் எரிச்சலடைந்து கோபம் கொண்டார். இது நல்ல நடத்தைக்கு நேரானதாகும். ஒரு உபசரிப்பு முறைமை என்பது பரஸ்பரம் நன்கு தெரிந்து கொண்டவர்களிடம் இருக்கும் ஒரு சங்கோஜ உணர்வை நீக்குவதற்காக கண்டறியப்பட்ட முறை. அவரது செயல், தெரிவு செய்வதில் சிறு விஷயங்களில் பெரும் கவனத்தைச்செலுத்தி, பெரிய விஷயங்களில் கவனம் செலுத்தாமல் போய் விடுவதாகும். ஒரு வேளை திருமதி. டெஸ்டேஷியா அவர்கள் எனக்கு அந்தக் கடல் சிப்பி உணவைத்தந்து விட்டு, பிறகு கணவர் இரவு உணவுக்காக அந்தக்கடல் சிப்பி உணவைத்தருமாறு கேட்டிருக்கும் பட்சத்தில், அந்த மனைவியின் நடவடிக்கை நல்ல நெறியின்படி நடந்து கொண்டதாக அமைந்திருக்கும். பணிவும், மரியாதையும் கொண்டு தங்கள் கணவன்மார்களை முறையாக உபசரிக்க வேண்டிய கட்டாயம் எதுவும் பெண்களுக்கு இல்லை.

ஆதலினால், திருமதி. சீரேஷியா[5] அவர்களின் கணவருக்கு மாரெல்லா[6] பழங்களை மனமுவந்து பரிமாறிக்கொண்டிருந்த போது, அதைத்திருப்பி அனுப்பி விட்டு, அதற்குப்பதிலாக பிரம்மச்சாரியாகிய என்னுடைய தட்டிற்கு அவ்வளவு சிறப்பில்லாத

நெல்லிக்காய்களைக்கொண்டு வருமாறு சொல்லி என் கண் முன்னே பெருந்தீனி தின்ற திருமதி. சீரேஷியா அவர்களின் நடத்தைக்கு நான் எதிர்ப்பு தெரிவிக்கிறேன். உளப்பூர்வமாகவே செய்யப்பட்ட இவ்விரு அவமதிப்புகளையும் நான் மன்னிக்க இயலாது. ரோமானிய எண்களின் வரிசைப்படி எனது திருமணமான நண்பர்களைப் பற்றிப்பகிரங்கமாகச்சொல்லுவது எனக்கு சோர்வு தருகிறது. அவர்கள் தங்களை மாற்றிக்கொண்டு, தங்கள் நடத்தையை மாற்றிக் கொள்ளட்டும். அப்படிச் செய்யாத பட்சத்தில், அவர்களைப்போன்றே பயமில்லாது தவறிழைப்பவர்களுக்குத் திகிலூட்டும் வண்ணம், அவர்களது முழுப்பெயர்களையும் எழுத்தில் பதிவு செய்வேன் என உறுதி கூறுகிறேன்.

-------------------------

## குறிப்புகள்

### 1. வெள்ளைப் போளமும், தூப வர்க்கமும்

- இயேசு கிறிஸ்து பிறந்த போது, கீழ்த்திசையிலிருந்து வந்த மூன்று வான சாஸ்திரிகள், இயேசு ஸ்வாமிக்குப்பொன்னையும், வெள்ளைப்போளத்தையும், தூப வர்க்கத்தையும் காணிக்கையாகப்படைத்து, அவரைச்சாஷ்டாங்கமாய் விழுந்து பணிந்து கொண்டார்கள். பார்க்க. புதிய ஏற்பாடு. மத்தேயு 2:11

### 2. '......அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள் '

- பழைய ஏற்பாடு, சங்கீதம் 127:5

### 3. ஒரு டெய்ஸி மலர் மற்றொன்றை விட மாறுபட்டது அல்ல.

- இது அநேகமாக புதிய ஏற்பாட்டின் வசனத்தை ஒட்டியுள்ளது. மகிமையிலே நட்சத்திரங்களுக்கு நட்சத்திரம் விசேஷித்திருக்கிறது.

1. கொரிந்தியர் 15 : 41

### 4. திருமதி. டெஸ்டேஷியா

- தனக்கு விருந்தளித்த பெண்ணிற்கு லேம்ப் தந்த வேடிக்கையான பெயர். டெஸ்டேஷியா என்ற இலத்தீன் வார்த்தைக்குக்கடல் சிப்பி என்று அர்த்தம்.

### 5. திருமதி சீரேஷியா

- ஒரு கற்பனையான பெண்ணின் பெயர்.
- திருமதி. செர்ரி என்று பொருள் தரும் பெயர்.

### 6. மாரெல்லா

- ஸ்பெயின் தேசத்தில் மாரெல்லா என்ற நகரத்தில் விளையும் ஒரு வித செர்ரி.

--------------------

